# அயலகத் தமிழ் இலக்கியம்

பதிப்பாசிரியர்

பேராசிரியர் இரா. மோகன்
பேராசிரியர் கி. நாச்சிமுத்து
பேராசிரியர் மு.மணிவேல்
பேராசிரியர் தூ.சேதுபாண்டியன்
பேராசிரியர் மு.பாண்டி
முனைவர் போ.சத்தியமூர்த்தி

இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம்
தமிழியற் புலம்
மதுரை காமராசர் பல்கலைக் கழகம்
(ஆற்றல்சால் பல்கலைக் கழகம்)
மதுரை - 625 021

# அயலகத் தமிழ் இலக்கியம்

(44-வது பன்னாட்டுக் கருத்தரங்கம்)

பதிப்பாசிரியர்கள்

பேராசிரியர் இரா. மோகன்
பேராசிரியர் கி. நாச்சிமுத்து
பேராசிரியர் மு. மணிவேல்
பேராசிரியர் தூ. சேதுபாண்டியன்
பேராசிரியர் மு. பாண்டி
முனைவர் போ. சத்தியமூர்த்தி

இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம்
தமிழியற் புலம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
(ஆற்றல்சால் பல்கலைக்கழகம்)
மதுரை - 625 021.

**அயலகத் தமிழ் இலக்கியம்**

44வது பன்னாட்டுக் கருத்தரங்கம்

பக்கங்கள் : 1 முதல் 128 வரை

**ISBN :978-93-81724-15-6**

இ.ப.த. மன்றம்
தமிழியற்புலம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை 625 021.

முதற்பதிப்பு
திருவள்ளுவர் ஆண்டு 2044, வைகாசி 4, 5
2013 மேத் திங்கள் 18. 19

விலை ரூபாய்.**120/-**

கணினி அச்சு : பொதிகை கணிப்பொறி மையம்
நாகமலை
மதுரை 625 019.

அச்சாக்கம் மற்றும்
விற்பனை உரிமை : பிரியதர்சினி பிரிண்டோகிராப்ஸ்
சிவகாசி.
போன் : 04562 223230

# தோரண வாயில்

இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம் இன்று தன்னுடைய 44-ஆவது அகவையை நிறைவு செய்துள்ளது. ஓர் இலக்கிய ஆய்வு அமைப்பு 44 ஆண்டுகளுக்கு மேலாக இடையறவின்றித் தொடர்ந்து நன்னடை பயின்று வருவது என்பது இன்றைய சூழலில் அரிதினும் அரிய ஓர் நிகழ்வு ஆகும்.

இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம் 1969-ஆம் ஆண்டில் தொடங்கப்பெற்றது. மன்றத்தின் முதல் தலைவராக மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தின் முதல் துணைவேந்தராகப் பொறுப்பேற்று முத்திரை பதித்த தெ.பொ.மீ. அவர்களே இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றத்தின் முதல் தலைவராகவும் வாய்த்தது நம் தவப்பேறே ஆகும். மன்றத்தின் முதல் கருத்தரங்கு மாநாடு மதுரை தீந்தமிழ்த் தியாகராசர் கல்லூரியில் 1969-ஆம் ஆண்டில் மே 30, 31 ஜுன் 1 ஆகிய மூன்று நாட்கள் நடைபெற்றது. இம்மாநாட்டில் 109 பேராளர்கள் கலந்துகொண்டு கட்டுரைகள் படித்தளித்தனர்.

இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றத்தின் 43-வது கருத்தரங்கு சென்ற ஆண்டு கருநாடக மாநிலத் தலைநகர் பெங்களுருவில் அமைந்த சீர்மிகு தமிழ்ச் சங்கத்தில் நிகழ்ந்தது 'ஆய்வுக் கோவை' ஐந்து தொகுதிகளாகக் கட்டுரைகளைத் தாங்கி வெளிவந்தது.

2013-ஆம் ஆண்டிற்கான ஆய்வுக் கோவைத் தொகுதிகளை அச்சாக்கம் செய்யும் பொறுப்பினை சிவகாசி பிரியதர்ஷினி பிரிண்டோ கிராப்ஸ் அச்சகத்தின் உரிமையாளர் திருமிகு ஏ.பி. இரவி அவர்கள் ஏற்றுச் செய்திருக்கிறார். இவ் ஆய்வுக் கோவையைக் குறித்த நேரத்தில் வண்ணமும் வனப்பும் மிளிர ஆய்வுக் கோவைத் தொகுதிகளைக் கொண்டு வந்துள்ள அவருக்கு நெஞ்சார்ந்த நல்வாழ்த்தும் நனிபாராட்டும் நன்றியறிதலும் என்றும் உண்டு. இவ்வாண்டுக் கருத்தரங்கின் 440 புதியக் கட்டுரைகளைத் தாங்கிய நான்கு ஆய்வுக் கோவை தொகுதிகளுடன் அய்லகத் தமிழ் இலக்கியம் குறித்த ஆய்வுக் கோவையும் சிறப்பு மலரும் வெளிவருகின்றன. சிறப்பு மலர் வெளியீட்டிற்குத் துணைநின்ற அனைத்துப் பெருமக்களுக்கும் நன்றி.

இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றத்தின் 44-ஆவது கருத்தரங்கம் காரைக்குடி ஸ்ரீ ராஜராஜன் பொறியியல் கல்லூரி வளாகத்தில் நிகழ்வதற்கு மனமுவந்து இசைவும் ஏற்பும் அளித்த அதன் தலைவர் பேரன்பிற்கும்

பெருமதிப்பிற்கும் உரிய பேராசிரியரும், காரைக்குடி அழகப்பா பல்கலைக்கழகத்தின் ஆங்கிலத் துறைப் பேராசிரியரும், தலைவரும் பாரதிதாசன் பல்கலைக்கழகத்தின் ஆட்சிக்குழு உறுப்பினரும், மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தின் முன்னை ஆட்சிக்குழு உறுப்பினருமான முனைவர் சொ. சுப்பையா அவர்களுக்கு எங்களின் மனம் நிறைந்த நன்றிகள் இக்கருத்தரங்க நிகழ்விற்குத் தம் கல்லூரியில் இடம் நல்கி, பேராளர்களுக்கு உறையுளும், உணவும், பரிசுப்பொருள்களும் வழங்கிச் சிறப்புற நடத்தும் அன்னாரது பெருந்தகைமைக்கும் எம் நெஞ்சார்ந்த நன்றிகளை உரித்தாக்குகிறோம். அவர்தம் கல்லூரிப் பணியாளர்களுக்கும் எம் நன்றி.

ஆய்வுக் கோவைத் தொகுதிகளின் உருவாக்கத்திற்கு அறிவிப்பும் அழைப்பும் அனுப்புதல், ஆய்வுக் கட்டுரைகளைப் பெற்று அச்சாக்கம் செய்தல், மெய்ப்புத் திருத்துதல் என அனைத்துச் செயல்களையும் திறம்படச் செய்திருக்கும் எம் மன்றத்தின் துணைப் பொருளாரும், மதுரை காமராசர் பல்கலைக்கழகத் தமிழியற்புலத்தின் தமிழியல்துறை உதவிப் பேராசிரியருமான முனைவர் போ. சத்தியமூர்த்தி அவர்களுக்கு மன்றத்தின் சார்பில் மனம் நிறைந்த பாராட்டுக்களையும் நன்றிகளையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

இவ் ஆய்வுக் கோவையினை உருவாக்குங்கால் எமக்குப் பெரிதும் துணைநின்ற மதுரை காமராசர் பல்கலைக்கழகத் தமிழியற்புல முனைவர் பட்ட ஆய்வு மாணவர்கள் சி. ஆறுமுகம், க. குமரகுருபரன், வீ. இருளன், ஆ. கருப்பசாமி, வே.சண்முகராஜ், போ.ஜெயச்சந்திரன், ச. திவ்யநாதன், இளநிலை ஆய்வாளர்கள் கி. அருள்ஜோதி, சு. தீபலட்சுமி, இரா. அழகுசுந்தரி, மு.திவாகரன், முதுகலை மாணவர்கள், தமிழியற்புல அலுவலர்கள் உள்ளிட்ட அனைவருக்கும் எம் நெஞ்சம் நிறைந்த நன்றி. நூலாக்கப் பணியில் தோன்றாத் துணையாக விளங்கிய திருச்சி செட்டிநாடு கலை அறிவியல் கல்லூரி முதல்வர் முனைவர் பழ.முத்தப்பன், திருமதி அழகம்மைமுத்தப்பன் அவர்களுக்கும் நன்றி. ஆய்வுக் கோவைக்கு உரிய கட்டுரைகளை மிகச் சிறப்பாகக் கணினி வழிக் கட்டமைப்புச் செய்து நூலாக்க உதவிய திருவாளர்கள் இரா. ஆனந்தன், பாலாஜி, முனைவர் வஹிதா கௌசியா, திருமதி மீனாட்சி, நூர்ஜஹான், சிவகாசி காவல்துறை உதவி ஆய்வாளர் ச.பாலசுப்பிரமணியன் ஆகியோருக்குப் பெரிதும் நன்றியுடையோம்.

மதுரை : 625 021
நாள் : 05.05.2013

**இவண்,**

**இரா.மோகன்** **கி.நாச்சிமுத்து**
**மு.மணிவேல்** **தூ.சேதுபாண்டியன்**
**மு. பாண்டி,** **போ.சத்தியமூர்த்தி.**

# பொருளடக்கம்

# 1. கம்போடியாவில் இந்திய கலை பண்பாட்டின் தாக்கம்

**இராஜேஸ்வரி வைரவன்**
முனைவர்பட்ட ஆய்வாளர்
சுல்தான் இட்ரிஸ் கல்வியியல் பல்கலைக்கழகம்
தஞ்ஜோங் மாலிம், பேராக், மலேசியா.

அண்மையில் தென்கிழக்காசிய நாடுகளில் ஒன்றான கவின்மிகு கம்போடியா நாட்டிற்குச் செல்லும் வாய்ப்பு நண்பர்களின் மூலம் எமக்குக் கிட்டியது. முதலில் நாங்கள் கோலாலம்பூர் ஏர் ஏசியா அனைத்துலக விமான நிலையத்திலிருந்து கம்போடியாவின் சியெம் ரீப் நகருக்கு விமானம் மூலம் சென்றோம். சியெம் ரீப் அனைத்துலக விமான நிலையம் அழகாகவும் நேர்த்தியாகவும் வடிவமைக்கப்பட்டுள்ளது. 1998-ம் ஆண்டிற்குப் பிறகு கம்போடியா நாடு நல்ல வளர்ச்சி கண்டுள்ளதைக் காணும்பொழுது மனமகிழ்ந்தேன்; அகம் குளிர்ந்தேன். அங்கு எங்களை அழைத்துச் செல்வதற்காக அந்நாட்டு சுற்றுலாத்துறை அதிகாரி ஒருவர் வந்திருந்தார்.

கிமேரர் என்பவர்கள் இன்றையக் கம்போடியாவின் தென் பாகத்தில் ஒரு கால் அரசாட்சி புரிந்து வந்தவர்கள். இந்தியாவிலிருந்து சென்ற இளவரசனொருவன் பெரும் தெய்வ நாகமொன்றின் புதல்வியை மணஞ்செய்து, அரச வரிசையைத் தோற்றுவித்ததாகக் கம்போடியாவின் பழங்கதைகள் கூறுகின்றனவாம். இக்கதையும் பிற கதைகளும் கம்போடியா, இந்தியாவிலிருந்து சமயத்தையும், அரசியல், கலை, கல்வி முதலியவற்றையும் பெற்றதென்று சான்றுகள் பகர்கின்றன. அக்காலத்தில் தென் கம்போடியாவும், தென் வியட்நாமும், இந்தோனேசியாவும் தென்னிந்தியாவுடன் நெருங்கிய கலை பண்பாட்டுத் தொடர்புகள் கொண்டிருந்தனவென்றும், பிற்காலத்தில்தான் சீனப் பண்பாட்டை ஏற்றனவென்றும் கம்போடிய மண்ணின் சுற்றுலாத்துறை அதிகாரி கூறினார்.

கிமேரர் பேரரசு காலக்கட்டத்தில்தான் கம்போடியா உச்ச நிலை அடைந்துள்ளது. ஒன்பதாம் பத்தாம் நூற்றாண்டுகளில் தொடர்ந்து உயர்நிலை அடைந்து 'அங்கோர்' எனும் மாபெரும் நகரைக் கட்டியுள்ளனர். கிமேர் பேரரசு அக்காலத்தில் தென் இந்தோச் சீனாவிலிருந்து பர்மா வரையும் பரவியிருந்துள்ளது. இவ்வரசு புகழ் பெற்று விளங்கிய காலத்தில், பெரு நகர்களையும், எண்ணற்ற கோயில்களையும் மாளிகைகளையும் அரசர் கட்டினர்.

கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டில் செழிப்புறத் தொடங்கிய கிமேர் அரசு பதினைந்து பதினாறாம் நூற்றாண்டில் ஆதிக்கம் ஒழிந்து அடிமையாயிற்று. அந்நாளைய இதன் வளர்ச்சிக் கூறுகளான அரசியல், கலை, கல்வி முதலியன இந்தியாவிலிருந்து பெறப்பட்டதை வரலாறுகளும் புராணங்களும் மெய்ப்பிக்கின்றன. இந்திய வணிகர்களின் குடியிருப்பு, ஆலயப் பணி, சமயத்தொண்டு இன்னும் பிராமணர்களின் ஆலயப் பணி, வடமொழியின் பயன்பாடு அனைத்தும் இதனை உறுதிப்படுத்துகின்றன.

'அங்கோர் வாட்' எனும் கோவில் மாளிகையும் 'அங்கோர் தோம்' எனும் பெருநகரும் அன்றைய இதன் சிறப்புகளாகும். சுற்றி இருந்த நாட்டினரின் தாக்குதலால் கைவிடப்பட்ட இவ்விடங்கள் பாழடைந்து காடுகளால் சூழப்பட்டு இருந்துள்ளன. தொடர் சேதங்களைத் தவிர்க்கவும் வரலாற்றுத் தன்மையை நிலைநாட்டுவதற்கும் இன்று 'அங்கோர் தோம்' இந்திய நாட்டின் பராமரிப்பில் இருந்து வருகிறது. 'அங்கோர் தோம்' தவிர மற்ற மற்ற வரலாற்றுக் கட்டடங்களும் உலக பாரம்பரிய களத்தின்(UNESCO)கீழ் மற்ற உலக நாடுகளின் பராமரிப்பில் இருந்து வருகின்றன.

முதன் முதலாக 19-ம் நூற்றாண்டில் மேலை நாட்டு ஆய்வாளர்கள் இவ்விடங்களைக் கண்டறிந்து வெளிவுலகுக்குக் காட்டினர். முதலில் அங்கோர் வாட்டின் சிறப்பை நோக்க, இது தனிக் கட்டிடமாக அமைந்துள்ளது; மலை நகர் என்று பெயர் பெருகின்றது. நீண்ட அகழி உள்ளது. பாலத்தின் வழியாகவே கடந்து செல்ல வேண்டும். இதன் சிகரத்தில் ஐந்து கோபுரங்கள் உள்ளன. கட்டடத்தின் உட்புற அமைப்பு கட்டடக் கலையின் மாண்பைப் படம் பிடித்துக் காட்டுகின்றது. அவர்களில் ஆடல் அழகிகளின் சிற்பங்கள் இவர்களின் அழகுணர்ச்சியை வெளிப்படுத்துகின்றன. இவ்வுருவங்கள் அனைத்தும்

இன்முகம் காட்டிப் புன்முருவல் பூத்து நிற்கின்றன. இன்னும் மாளிகை கூடங்களின் சுவர்களில் புராண இதிகாச வரைப்படங்கள் காணப்படுகின்றன. தேவர்களும் அசுரர்களும் பாற்கடலைக் கடைந்து அமுதம் எடுக்கும் கதையும் திருமாலின் வரலாறுகளும், இராமயணப் பாரதப் போர்களின் காட்சிகளும் மேலும் இரண்டாம் சூரியவர்மனின் (கி. பி. 1113 – 1150) போரில் பெற்ற வெற்றிச் செய்திகள் பல உள்ளன.

அடுத்து 'அங்கோர் தோம்' மின் சிறப்பைக் கண்ணோட்டமிடும் வேளையில், இது பெரு நகர் என்று பெயர் பெறுகின்றது. அன்று கிமேர் பேரரசின் தலைநகரமாக இது விளங்கியுள்ளது. இன்று காட்டு மரங்களால் சூழப்பட்டுள்ளது. வழியோரங்களில் காவற்சிலைகளும் இடிந்து விழுந்த தூண்களும் உள்ளன. நகரின் நான்கு வாயிற்கோபுரங்களும் உறுதியாகக் கட்டப்பட்டுள்ளன. மேலும் கோபுரங்களின் எல்லாப் பக்கங்களிலும் இவற்றைக் கட்டிய அரசனின் முகவடிவங்கள் தோன்றுமாறு செதுக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு கோபுரமும் நான்கு முகங்கள் காட்டும் கோபுரமாக அமைந்துள்ளன.

மேலும், பாயோன் எனும் குன்று போன்ற ஆலயம் மயங்க வைக்கும் தன்மை கொண்டுள்ளது. இது பல முக்கோபுரங்களும் பல சிறு வழிபாட்டு அறைகளும் கொண்டு விளங்குகின்றது. இதனைக் கட்டிய ஏழாவது ஜெயவர்மனது கல்லறையும் இதில் இருக்கலாம் என்று எண்ணப்படுகின்றது. இன்று இக்கட்டடங்கள் அனைத்தும் உலக பாரம்பரிய களங்களாக்கப் பட்டுள்ளன.

அடுத்த கட்ட சிறப்பாகத் திருமறைக் கலைகள் என்று நோக்கும் போதில் கிமேருடைய கலைகள் திருமறைக் கலைகளாகவே அமைந்துள்ளன. இவர்களிடையே அரசன் திருமாலின் அவதாரமாகவே கருதப்பட்டான். மரணத்தின் பின் தன் தெய்வீகத் தன்மை புலப்படவே அங்கோர் வாட், பாயோன், பண்தேய் சிறேய் போன்ற அழகிய கோயில்களை நிறுவினார்.

இந்தக் கோவில்களின் அமைப்பை நோக்க அவை தெய்வலோக அமைப்பாக மேருமலை போன்ற தோற்றத்தையும் உயரத்தையும் காட்டும்படி 250 அடி உயர கோபுர சிகரங்களைக்கொண்டு சிவலிங்க வழிபாட்டை

வெளிப்படுத்துகின்றன. இன்றும் சியெம் ரீப் நகரில் எழுப்பப்படும் கட்டடங்கள் நவீனமானதாக அமைந்திருந்தாலும் 250 அடி உயரத்திற்கு மேற்போகாதவாறு இருக்க வேண்டும் என்ற அந்நாட்டு சட்டத் திட்டத்தினை ஏற்று செயல்படுகின்றன. இச்செயலானது 'அங்கோர் வாட்' கட்டடத்தின் மாண்பிற்கு கம்போடிய மக்கள் அளிக்கும் மரியாதையாகக் கருதப்படுகிறது.

மேருமலைக் கொள்கை கிமேரர் கட்டடக் கலைக்கு அடிப்படையாக விளங்குகின்றது. இவர்களது சமய ஈடுபாடு ஒரு தனி மறையை வரையறுத்துத் தழுவாத தன்மையைக் காட்டுகிறது. மேலும், இந்தக் கட்டட சிற்பக்கலை மகாபலிபுரம், காஞ்சிபுரத்தைத் தழுவியதுபோல் அமைந்துள்ளது. அங்கோரின் பெருமையும் பல்லவர் சோழர் பெருமையும் ஒரு காலத்தவையாகவே வெளிப்படுகின்றன. இவ்வரசர்களின் ஜெயவர்மன், இந்திரவர்மன், சூரியவர்மன் என்ற 'அன்' விகுதி பல்லவர் தொடர்பைக் காட்டுகிறது. இன்னும் கம்போடிய அரண்மனை நாட்டியம் பரத நாட்டியத்துடன் தொடர்பு கொண்டுள்ளது.

கம்போடியா, கிமேரரின் ஆதிக்கத்திற்குப் பின் பல்வேறு அரசியல் மாற்றங்கள் அடைந்து இன்று மீண்டும் தனியரசாக விளங்குகின்றது.

உலக அதிசயங்களில் ஒன்றானதும் உலகத்திலேயே மிகப் பெரிய இந்துக் கோயிலாகவும் திகழும் கம்போடிய 'அங்கோர் வாட்' பெருநகரைக் காணும் வாய்ப்பை ஏற்படுத்திக்கொடுத்த கடவுளுக்கு நன்றி மலர்களைக் காணிக்கையாக்குகின்றேன். நீண்ட நாள் கனவு நிறைவேறியதை நினைக்கும்பொழுது உள்ளம் பூரிப்படைகிறது.

இக்கட்டுரையை எழுதும்போது பல இரகசியங்களை தன்னுள் அடக்கிக்கொண்டு இன்றும் கம்பீரமாக காட்சியளித்துக்கொண்டிருக்கும அழகிய அங்கோரை மீண்டும் பார்க்க வேண்டும் எனற ஆவல் என் உள்ளத்தில் எழுகின்றது.

# 2. மலேசியத் தமிழர்களிடையே பிறமொழிக் கலப்பு

**இளங்குமரன் சிவநாதன்**
சுல்தான் இட்ரிஸ் கல்வியியல்
பல்கலைக்கழகம்
மலேசியா.

குமரிக்கண்டம் அழிந்தபோது, பூமத்திய ரேகையின் சிதைந்த கிழக்குப் பகுதி தீவுக்கூட்டங்களில் மலாயா என்ற நாடு தீபகற்பமாக அமைந்து நிலைபெற்று ஏறக்குறைய இருபதாயிரம் ஆண்டுகளாகின்றன. ஆதித்தமிழரும் அவர்தம் தாய்மொழி மரபும் இங்கு மேர்க்கொண்டு பல காலங்கள் கடந்துவிட்டன. பின்னர் காலவோட்டத்தில் பற்பல அரசியல் மாற்றங்களுக்குப் பிறகு மலாயா சுதந்திரம் பெற்று, பின்னர் மலேசியா ஆயிற்று.

உலக நாடுகளில் மலேசியா தனித்தன்மை வாய்ந்த நாடாகும். மலேசியா பல இனத்தவரையும் பல மொழிகளையும் கொண்ட ஒரு நாடாகத் திகழ்வதனை அதன் தனித் தன்மைகளுள் ஒன்றாகக் குறிப்பிடலாம். இங்கு பெரும்பகுதியினர் மலாய்க்காரர்களாகவும், அதற்கடுத்தாற்போல் சீனர்களும் அதற்கு அடுத்த இடத்தில் இந்தியர்களும் (பெரும்பகுதி தமிழர்களாவர்) வசிக்கின்றனர். இப்பிரிவினர் அனைவரும் இனம், மதம், மொழி, கலை, பண்பாடு, நாகரிகம் இலக்கியம் ஆகியவற்றால் வேறுபட்டிருந்தாலும், அனைவரும் ஒற்றுமையாக வாழ்ந்து வருகின்றனர்.

இந்தியர்கள் இந்நாட்டுக்கு வந்துவிட்ட காலந்தொட்டே விரும்பியோ விரும்பாமலோ பல்லின மக்களோடு கலந்து பழகவும் உறவாடவும் வேண்டிய சூழலில் இருந்தனர். சில தலைமுறைகளாக இந்நிலை நீடித்து வருவதால் மலேசிய மண்ணில் வாழும் இந்தியர்கள் பிறமொழிகளைக் கற்றுக்கொள்ளும் கூழல் ஏற்பட்டது. குறிப்பாக மலாய் மொழியில் அவர்கள் ஓரளவு சிறப்பான

தேர்ச்சியைக் கொண்டுள்ளனர். மலாய் மொழி மலேசியாவின் அதிகாரத்துவ ஆட்சிமொழியாக இருப்பதுவும் இதற்கு முக்கியக் காரணமாகும். மேலும், நாட்டின் தேசிய கல்வித்திட்டத்தில், எல்லாப் பள்ளிகலும் மலாய் மொழி கட்டாயப் பாடமாக இருப்பதனால் மிகுதியான இந்நாட்டுக் குடிமக்கள் அம்மொழியை பேசவும், படிக்கவும், எழுதவும் கற்றுள்ளனர். இதைத் தவிர, சீனர், மலாய்க்காரர்கள் இந்தியர்கள் ஆகியோருக்கிடையில் தொடர்பு மொழியாகப் பயன்படுவது மலாய் மொழியே என்பது இங்கு குறிப்பிடத்தக்கது.

ஒரு மொழி பேசும் மக்கள், மற்றொரு மொழி பேசும் மக்களோடு அரசியல், சமயம், வாணிகம், கலை முதலானவற்றில் நெருக்கி பழகுவதால் மொழிகளிடையே கலப்பு ஏற்பட வாய்ப்பு ஏற்படுகிறது. மொழிக்கலப்பு என்து ஒரு மொழியிலிருந்து சொற்களையும் இலக்கணக்கூறுகளையும் மற்றொரு மொழி கடன் வாங்குதலையும், அம்மொழி பேசுபவர்கள் பிறமொழிச் சொற்களைக் கடன் வாங்கி, தங்களது பேச்சு வழக்கில் பயன்படுத்துதலும் ஆகும். இந்நிலை பெரும்பாலும் பல மொழிகளைப் பேசும் மக்களிடையே சர்வ சாதரணமாக நிகழ்கின்றது என்றாலும், இம்மொழிக்கலப்பு ஏற்பட குறிப்பிட்டுச் சொல்லக்கூடிய பொறுப்பு மொழிபெயர்ப்பாளர்களைச் சார்ந்தது. ஒரு சில வேளைகளில் மொழிபெயர்ப்பாளர்கள் சிர்த்தையின்மை மற்றும் சோம்பலின் காரணமாக மூல மொழியில் இருக்கும் சொற்களுக்கு ஏற்ற சரியான சொற்களை மொழிபெயர்க்கப்போகும் மொழியில் தேடிப்பிடித்து ஆளாது அம்மொழியை; அச்சொற்களை அப்படியே கடன் வாங்கிப் பயன்படுத்துதல் இந்நிலை பரவலாக ஏற்படக் காரணமாக அமைகின்றது. மலேசியத் தமிழ் மக்களிடையே அவ்வாறு புகுந்துவிட்ட ஒரு சில மலாய் சொற்கள் கீழே கொடுக்கப்பட்டிருக்கின்றன.

| மலாய் சொற்கள் | தமிழ் வடிவம் | பொருள் / விளக்கம் |
|---|---|---|
| Alur | அல்லூரு | கால்வாய் ∴ ஓடை |
| Atap | அத்தாப்பு | கூரை அமைக்கப் பயன்படும் ஓலை |
| Belanja | பிளாஞ்சா | செலவு |
| Bomba | போம்பா | தீயணைப்புப் படை |
| Bomoh | போமோ | மந்திரவாதி |
| Campur | சம்போர் | கலத்தல் ∴ சேர்த்தல் |

| | | |
|---|---|---|
| Cikgu | செகு | ஆசிரியர் |
| Cucur | சுச்சோர் | பலகாரம் |
| Ganti | கெந்தி | மாற்று |
| Kerani | கிராணி | அலுவலர் |
| Jaga | ஜாகா | காவலாளி |
| Pajak Gadai | பாசாக் கடை | அடகுக்கடை |
| Pagar | பாகார் | வேலி |
| Sewa | சேவா | வாடகை |
| Surat | சூரா | கடிதம் |
| Syiling | சில்லிங் | சில்லறைக்காசு |

இதனைத் தொடர்ந்து ஆய்ந்து பார்க்கும் வேளையில், இவ்வகையாக மொழியைக் கடன் வாங்கும் போக்கை உன்னிப்பாகக் கவனிக்குங்காலை சில ஒங்கு கடைபிடிக்கப்பட்டிருப்பதும் தெரியவருகின்றது.

அவற்றுள் தமிழில் "வ" கரம் மலாய் மொழியில் அப்படியே ஒலிக்கப்படாமல் "பா" (டீய) ஒலியாக மாற்றம் கண்டிருக்கின்றது.

எ.கா:

| | | |
|---|---|---|
| வகை | பாகாய் | Bagai |
| வாடை | பாடாய் | Badai |
| வைடூரியம் | பாய்டூரி | Baiduri |
| வரிசை | பாரிஸ் | Baris |
| வாயு | பாயு | Bayu |

தமிழில் இருக்கும் "ப" கரம் மலாய் மொழியில் அப்படியே "பா" (Ba) ஒலியாக ஒலகிக்கின்றது.

| | | |
|---|---|---|
| பாஷை | பஹாசா | Bahasa |
| பக்தி | பக்தி | Bakti |
| பண்டம் | பண்டா | Benda |
| பூமி | பூமி | Bumi |

தமிழில் இருக்கும் "ச" கரம் மலாய் மொழியில் அப்படியே "சா" (Ca) ஒலியாக ஒலக்கின்றது.

| | | |
|---|---|---|
| சக்கரம் | சக்ரா | Cakera |

| | | |
|---|---|---|
| சதுரங்கம் | சாத்தோர் | Catur |
| சேதாரம் | செடடெரா | Cedera |
| சந்தனம் | சென்டானா | Cendana |
| செட்டி | செட்டி | Cetti |

தமிழில் இருக்கும் "க" கரம் மலாய் மொழியில் அப்படியே "கா" (மய) ஒலியாக ஒலிக்கின்றது.

| | | |
|---|---|---|
| கப்பல் | கப்பால் | Kapal |
| கபாலம் | கப்பாலா | Kepala |
| கஞ்சி | கஞ்சி | Kanji |
| கறி | கறி | Kari |
| காரணம் | கரானா | Kerana |

இங்கு கொடுக்கப்பட்டிருப்பவை வெறும் எடுத்துக்காட்டுடன் மட்டுமே. இன்னும் பல நூறு சொற்கள் இவ்வாறு வழங்கப்படுகின்றன.

இவற்றைப் போலவே சில சீன சொற்களும் இந்திய மக்களிடம் வழங்குகின்றன. அவற்றுள் சில;

| சீன சொற்கள் | தமிழ் வடிவம் | பொருள் ∴ விளக்கம் |
|---|---|---|
| Pau | பாவ் | சீனர்கள் விரும்பி உண்ணும் பலகாரம் |
| Tauhu | தவ்வு | சோயாவால் தயாரிக்கப்படும் உணவு |
| Meehun | மீஹுன் | சேமியா போன்றிருக்கும் உணவு |
| Cincai | சின்சாய் | அரைகுறையான வேலை |
| Ang pow | அங் பாவ் | பரிசுப் பொட்டலம். |
| Feng Shui | பெங்சூய் | வாஸ்து |
| The | தே | தேயிலை |

இவ்வாறாக வழங்கும் சொற்கள் இந்தியர்கள் மட்டுமல்லாது பிற இன மக்களுக்குமே இப்படி உச்சரித்தால்தான் புரிகின்றது. அவற்றை மொழிபெயர்த்து, தத்தம் மொழிகளில் கூறினாலும் மிகச்சரியாக சொல்ல வந்த பொருளை உணர்த்த இயலுவதில்லை.

இன்னும் சொல்லப்போனால், சில மலாய் மற்றும் சீன வார்த்தைகள் இந்தியர்களால் சர்வ சாதாரணமாகப் பயன்படுத்தப்பட்டு, அவை பிறமொழி சொற்கள் அல்ல, மாறாக அவை தமிழ்ச் சொற்களே என்று எண்ணி பிரயோகப்படுத்துவோரும் உள்ளனர். இவை பெரும்பாலும் அடிப்படைக் கல்வியைத் தமிழ் மொழியில் பயிலாதவர்கள் மத்தியிலேயேதான் காணப்படுகின்றது.

இவ்வாறான நிலை பல மொழிகள் பேசப்படும் மக்களின் மத்தியில் மகி இயல்பாக ஏற்படக்கூடியவைதான் என்றபோதும், இந்நிலை கட்டுக்கடங்காது போகும்போது பிஜி, தென் ஆப்பிரிக்கா, மொரிசியஸ் போன்ற நாடுகளில் ஏற்பட்டுள்ளதுபோல் மொழி சிதைந்து உரு தெரியாமல் அழிந்துவிடவும் வாய்ப்பு இருக்கின்றது. ஆகையால், இந்நிலையை நன்குணர்ந்து செம்மொழியான நம் தமிழ்மொழியைக் காக்க பல்வேறு முயற்சிகள் எடுக்கப்பட வேண்டிய சூழலில் நாம் இருப்பதை உணர்ந்து செயல்படுவது மிக மிக முக்கியமானதாகும்.

## 3. ஆசாரக்கோவையும் தமிழர் பண்பாடும்

**ஈஸ்வரநாதபிள்ளை குமரன்**
சிரேஷ்ட விரிவுரையாளர்
தமிழ்த்துறை, யாழ்ப்பாணப்
பல்கலைக்கழகம்
இலங்கை.

### தமிழில் அறநீதி இலக்கியங்கள்:

தமிழில் அறநீதி இலக்கியங்கள் கணிசமான அளவில் தோற்றம் பெற்றுள்ளன. தமிழ் புலவர்கள் காலத்திற்கேற்ற வகையிலும், கொள்வோரின் தகுதிக்கேற்பவும் அறக் கருத்துக்களை உள்ளடக்கி நூல்களை யாத்து வந்துள்ளனர். அறநூல்களில் மட்டுமன்றி காவியங்களிலும் சிற்றிலக்கியங்களிலும் புராணங்களிலும் கூட அறம் முதன்மைப்படுத்திப் பேசப்பட்டு வந்துள்ளது. அகம், புறம், பக்தி முதலான பொருள் மரபிற்குச் சமானமான முக்கியத்துவத்தினை அறத்திற்கும் தமிழ் புலவர்கள் தந்து வந்துள்ளனர்.

தமிழில் மட்டுமல்லாது பழமையான பிற இந்திய மொழிகளிலுள்ள இலக்கியங்களிலும் இப் பண்பினைக் காணமுடியும். கீழைத்தேய, குறிப்பாக இந்திய நாட்டுக்கேயுரிய தனித்துவங்களில் அறத்தினை முதன்மைப்படுத்தியமை முக்கியமானதொன்றாகும். இந்திய மொழி இலக்கியங்களில் அறம் விதந்துரைக்கப்பட்ட அளவிற்கு மேலைத்தேய மொழிகளிலோ பிறவற்றிலோ அறம் விதந்துரைக்கப்படவில்லை எனப் பஞ்சதந்திரத்தினை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தோருள் ஒருவரான சுலனநச குறிப்பிடுகின்றார்[1]. செய்யுளாகவும், உரைநடையாகவும், உரைநடையும் செய்யுளும் கலந்த வடிவமாகவும் அறநீதி இலக்கியங்கள் தோற்றம் பெற்றுள்ளன. வையத்துள் வாழ்வாங்கு வாழ்வதற்கான ஒழுக்க நெறிகள் இவற்றிலே விதந்துரைக்கப்பட்டுள்ளன.

**அறம்:**

அறம் என்பதற்கு ஒழுங்கு எனப் பொருள் கொள்வர். ஒழுங்குபடுத்தப்பட்ட நேரிய வாழ்க்கையை எங்ஙனம் வாழ்வது என்பது பற்றியே அறம் பேசுகின்றது. மனிதன் விலங்கிலிருந்து தன்னைப் பிரித்து வாழ முற்பட்ட காலங்களில் அறத்தினைப் பற்றிச் சிந்திக்கத் தொடங்கினான். தனது தனித்துவத்தினைப் பாதுகாத்துக்கொள்ளவும் மற்றைய விலங்கினங்களிலிருந்து தன்னை வேறுபடுத்திக் கொள்ளவும் ஒழுங்கு படுத்தப்பட்ட வாழ்க்கை அவனுக்கு அவசியமானதாக இருந்து. இதற்கேற்ற விதத்தில் கட்டுப்பாடுகள் விதிகள், வரன்முறைகள் என்பன அவனால் உருவாக்கப்பட்டன. மனிதன் நாகரீகப் படியில் முன்னேற முன்னேற இக் கட்டுப்பாடுகள் மேலும் இறுக்கமடைந்து வந்ததை அவதானிக்கலாம்.

மனித சமுதாயத்தில் காலங்காலமாகப் பேசப்பட்டும் பின்பற்றப்பட்டும் வந்த அறக் கோட்பாடுகள் இலக்கியங்களாக உருப்பெற்ற போது அவை வாழ்க்கை பற்றிய இலக்கணங்களாக மாறின. இந்திய சமுதாயத்தில் பிரிக்கமுடியாத அம்சமாக இருந்து வரும் சமயநம்பிக்கையின் பின்புலத்தில் அறக் கருத்துக்கள் மக்கள் மத்தியில் விதைக்கப்பட்டு வந்ததை அவதானிக்க முடியும். இதனால் சமய அடிப்படையான அறக்கருத்துக் கோட்பாடுகள் பெருமளவில் இந்திய இலக்கியங்களில் அவதானிக்கப்பட்டன. ஆனால் திருக்குறள் முதலான நூல்கள் சமய எல்லைகளையும் தாண்டி அனைத்துலகு தழுவிய மானுடப்பார்வையினை வளர்த்ததையும் இவ்விடத்தில் சுட்டிக் காட்டியே ஆக வேண்டும். சங்க இலக்கியங்களிலும் சங்கத்தினை அடுத்து வந்த காலப்பகுதியிலும் அறநீதிக் கருத்துக்களும் அறநீதி இலக்கியங்களும் தமிழரிடையே செல்வாக்குற்றமையினை நோக்குகின்ற போது தமிழர் சமுதாயம் பல நூறு ஆண்டுகளுக்கு முன்னரேயே நாகரீகத்தின் உச்சத்தினை எட்டியிருந்தது என்பதனை மறுப்பதற்கில்லை.

**ஆசாரக்கோவை:**

சங்கமருவிய காலப்பகுதியில் தோற்றம் பெற்ற பதினொரு அற இலக்கியங்களில் ஆசாரக்கோவையும் ஒன்றாகும். வண்கயத்தூர் பெருவாயில் முள்ளியார் என்னும் புலவரால் இந்நூல் ஆக்கப்பட்டது. சிறப்புப் பாயிரம் நீங்கலாக குறள், சிந்தியல், இன்னிசை, நேரிசை, பஃறொடை, சவலை எனும்

வெண்பா யாப்பு வடிவங்களாலமைந்த நூறு பாடல்களை இது கொண்டது. நூலாசிரியர் 'ஆர் எயில் மூன்றும் அழித்தான் அடியேத்தி' எனச் சிறப்புப் பாயிரத்தினைத் தொடங்குவதால் இவர் சைவசமயத்தினைச் சேர்ந்தவர் என்பது தெளிவாகின்றது. அதே சிறப்புப் பாயிரத்தில் 'ஆரிடம்' என்னும் வடமொழி இலக்கியத்தினை இந்நூலுக்கு மூலநூலாக ஆசிரியர் குறிப்பிடுகின்றார். எனினும் இந்நூலில் கூறப்பட்ட ஆசாரங்கள் பெரும்பாலும் வடமொழியிலுள்ள 'சுக்கிர ஸ்மிருதியிலிருந்து' தொகுத்தவை என வடநூல் அறிஞர்கள் சிலர் குறிப்பிடுகின்றனர்[3]. ஆனால் வடமொழி நூல் பெருவாயில் முள்ளியாருக்கு ஒரு முன்மாதிரியாக அமைந்திருக்கலாமே தவிர அதில் கூறப்பட்ட விடயங்களைத் தழுவித்தான் ஆசாரக்கோவை செய்யப்பட்டதாகக் கூறுவது பொருந்துமாறில்லை. ஏனெனில் ஆசாரக்கோவை தமிழ்ப் பண்பாட்டுடன் தொடர்புபட்ட விடயங்களையே பெரிதும் கூறுவதைக் காணமுடிகின்றது. தமது நூல்களுக்கு வடமொழித் தொடர்பினைக் கற்பிப்பதனூடாக மக்கள் மத்தியில் அவற்றிற்கு மதிப்பினைப் பெற்றுத் தரத் தமிழ்ப் புலவர்கள் அவ்வப்போது முனைந்துள்ளனர். அந்தவகையில் ஆசாரக்கோவையாசிரியரும் வடமொழி நூல் தொடர்பினைத் தன்நூலில் எடுத்துக்காட்ட விழைந்திருக்கலாம்.

தமிழில் தோன்றிய அற இலக்கியங்களில் ஆசாரக்கோவை பேச எடுத்துக்கொண்ட அறக்கருத்துக்களின் தன்மையாலும் அவற்றினைப் பேசுகின்ற முறையினாலும் தனித்துவம் மிக்கதாகத் திகழ்கின்றது. தமிழில் எழுந்த பெரும்பாலான அற இலக்கியங்கள் மனிதன் அகத் (மனத்) தூய்மை பெறுவதற்கான வழிமுறைகளையே விரிவாக எடுத்துப் பேசின. அகத்தூய்மை பெறும் மனிதனின் புறச் செயற்பாடுகளும் ஒழுங்குபடுத்தப்பட்டவையாக இருக்கும் என்பது அவற்றின் வாதம். ஆனால் ஆசாரக் கோவை மனிதனின் புறவாழ்வு பற்றியே அதிகம் சிந்திக்க விழைந்தது. புறச் செயற்பாடுகளைக் கொண்டே ஒருவனின் பண்பும், மாண்பும் தீர்மானிக்கப்படுகின்றன. ஆதலால் புறச் செயற்பாடுகளிலும் ஒருவன் ஒழுக்கக் கோட்பாடுகளைப் பேணிவரல் வேண்டும் என ஆசாரக்கோவை வாதிட்டது. இதனால் ஒருவனின் பழக்கவழக்கங்கள், நடத்தைமுறைகள் எங்ஙனம் ஒழுங்குபடுத்தப்பட்ட கட்டமைப்புக்குள் வரவேண்டும் என்பது பற்றிய விளக்கங்கள் ஆசாரக் கோவையில் விரிவாகப் பேசப்பட்டன.

ஆசாரக்கோவை என்பதற்கு ஒழுக்கங்களின் தொகுதி எனப் பொருள் உரைப்பார்கள்[2]. இங்கு 'ஆசாரம்' என்பதற்கு ஒழுக்கம் எனப் பொருள் கொள்ளப்படுகின்றது. ஆனால் ஆராய்கின்றபோது ஆசாரம் என்பது அதனிலும் விரிந்த பொருளினை உடையது. அது வெறுமனே ஒழுக்கக் கோட்பாடுகளை மட்டும் சுட்டவில்லை என்பதை ஆசாரக்கோவையை கற்கின்றவர்கள் அறிந்துகொள்வர். மனிதர் பின்பற்றும் வாழ்வியல் நடைமுறைகளில், பழக்கவழக்கங்களில் காணப்படும் நேர்த்தியையும் ஆசாரம் எனக் கூற முடியும் என்கிறது ஆசாரக்கோவை. ஆசாரம் என்ற பதத்தின் கீழ் வரக்கூடிய எட்டு விடயங்களை நூலாசிரியர் பின்வரும் வெண்பாவில் பதிவுசெய்துள்ளார்.

*"நன்றியறிதல் பொறையுடைமை இன்சொல்லோடு*
*இன்னாத எவ்வுயிர்க்கும் செய்யாமை கல்வியோடு*
*ஒப்புரவு ஆற்ற அறிதல் அறிவுடைமை*
*நல்லினத் தாரோடு நட்டல் இவை யெட்டும்*
*சொல்லிய ஆசார வித்து."* *(1)*

தனக்குப் பிறர் செய்த உதவியை மறவாதிருத்தல், பொறுமை, இன்சொல் கூறல், எந்த உயிர்க்கும் துன்பம் செய்யாதிருத்தல், கல்வி, ஒப்புரவு அறிதல், அறிவுடைமை, நற்குணமிக்கவருடன் நட்புக் கொள்ளல் என்ற எட்டு விடயங்களும் ஆசாரத்தின் வித்துக்கள் என்பது நூலாசிரியர் கருத்து. இவற்றுள் 'ஒப்புரவு ஆற்ற அறிதல்' என்னும் விடயம் குறித்தே ஆசாரக்கோவை அதிக கவனம் செலுத்துக்கின்றது. ஔவையாரும் 'ஒப்புர ஒழுகு' என்றார். 'ஒப்புரவு' என்பதற்கு உலகநடை என்பது பொருள். இவ்வாறுதான் பேச வேண்டும், உடை உடுத்துக்கொள்ளுதல் வேண்டும், உணவுண்ணுதல் வேண்டும், பிறருடன் நடந்து கொள்ளுல் வேண்டும் முதலான வழிமுறைகள் எழுதப்படாமல் காலங்காலமாகத் தமிழர் சமுதாயத்தில் கையளிக்கப்பட்டு வந்துள்ளன. தொன்மைச் சிறப்பும் சான்றோரினால் சரியென ஏற்றுக் கொள்ளப்பட்டமையும், முரண்பாடின்றி அனைவராலும் பின்பற்பட்டு வருகின்றமையும் இவ்வழிமுறைகளுக்குச் சமூக அங்கீகாரத்தினைப் பெற்றுத் தந்தது. இத்தகைய சமூக அங்கீகாரம் பெற்ற வழக்காறுகளையே ஆசாரக்கோவையாசிரியர் ஒப்புரவு எனக் குறித்தார்.

மற்றைய அற இலக்கியங்களில் நின்றும் வேறுபட்டவகையில் தனது நூலை எழுதவேண்டும் என்னும் நோக்கினாற் போலும் பெருவாயில் முள்ளியார் தமிழரின் ஆசாரம் தொடர்பான விடயங்களில் அதிக கவனம் செலுத்தியுள்ளார். 'எமது பண்பாடு' எனப் பெருமைப்பட்டுப் பேசிக்கொள்ளும் விடயங்கள் பல இந்நூலில் உள்ளடக்கப்பட்டுள்ளன. இதனால் ஒருவகையில் ஆசாரக்கோவை தமிழர் சமுதாயத்தின் பண்பாட்டுப் பதிவேடாகவும் அமைந்திருத்தலை நோக்கமுடியும்.

காலங்காலமாக எழுதப்படாமல் கையளிக்கப்பட்டு வந்த பண்பாடு சார்ந்த சில முக்கியமான விடயங்களைப் பதிவுசெய்ய முயன்ற இலக்கியம் பாதுகாக்க விழைந்த இலக்கியம் என்ற வகையிலும் ஆசாரக்கோவைக்கு முக்கிய இடமுண்டு. பண்பாடு சார்ந்த ஆசாரங்களைப் பதிவுசெய்ததன் ஊடாக அவற்றுக்கென ஒருவரையறையையும் இந்நூல் மேற்கொண்டது. தொடர்ந்து பண்பாட்டு சார்ந்த ஒழுக்கக் கூறுகள் மாற்றியமைக்கப்படாமல் ஏறத்தாழ ஒரேமாதிரியாகப் பிற்காலங்களில் தொடரப்படுவதற்கும் இந்நூல் உதவிற்று எனலாம். தமிழர் பண்பாட்டின் செழுமையை, பழமையை, பெருமையை ஆராய விழைகின்றவர்களுக்கும் அறிய முயல்கின்றவர்களுக்கும் சிறந்த தகவல் பேழையாக இந்நூல் அமைந்திருத்தலைக் காண முடியும்.

தனிமனித ஆசாரங்களாக நாளாந்தம் ஒருவர் பின்பற்ற வேண்டியவற்றை ஆசாரக்கோவை மிகத் தெளிவாக வரையறை செய்கின்றது. உபதேச பூர்வமாகவும், 'சான்றோரின் வாழ்வியல் இதுதான்' எனக் காட்டுவதனூடாகவும் ஆசாரங்களை மக்கள் மனதில் பதிய வைக்க ஆசிரியர் முனைகின்றார். 'முந்தையோர் கண்ட நெறி' (04, 11) 'யாவருங் கண்ட நெறி' (16), 'நல்லறிவாளர் துணிபு' (17), பேரறிவாளர் துணிபு' (19), 'கடனறி காட்சியவர்' (36), 'தாங்கருங் கேள்வியவர்' (50) என ஆசாரக்கோவையாசிரியர் நூலில் ஆங்காங்கே சுட்டிச் செல்லுதல் நோக்கத் தக்கதாகும். காலைக்கடன்களைக் கழித்தல், நீராடல், உணவுண்ணுதல், உடையணிதல், கடவுளை வணங்குதல், தாம்பத்தியம், வீட்டினைப் பேணல், சான்றோருடன் பழகும் முறை முதலான இன்னோரன்ன அன்றாட வாழ்க்கைக்கு அத்தியாவசியமான விடயங்கள் நூலில் விபரிக்கப்பட்டுள்ளன. சமூக வாழ்வியலில் தனிமனிதன் ஒருவன் பின்பற்ற வேண்டியவை எவை, பின்பற்றக்

கூடாதவை எவை என விவரிப்பதனூடாக தனிமனித சீர்திருத்தத்தினையும் அதற்கூடாக சமூகச் சீர்திருத்தத்தினையும் நூலாசிரியர் அவாவுவது புலனாகின்றது. மிகவும் தெரிந்தது அல்லது பரிச்சயமானது எனக் கருதும் ஆசாரங்களைக் கூடப் பதிவு செய்வதிலும் கையளிப்பதிலும் நூலாசிரியர் காட்டியிருக்கும் நேர்த்தி பாராட்டத் தக்கதாகும்.

*காட்டுக் களைந்து கலம்கழீஇ இல்லத்தை*
*ஆப்பிநீர் எங்கும் தெளித்துச் சிறுகாலை*
*நீர்ச்சால் கரகம் நிறை மலரணிந்து*
*இல்லம் கொலிய அடுப்பினுள் தீப்பெய்க*
*நல்லது உறல்வேண்டு வார்" (46)*

எனும் வெண்பாவில் வீட்டினைப் பேணும் முறை குறித்து பெருவாயில் முள்ளியார் விபரித்திருப்பதை இதற்கு வகைமாதிரிக்குச் சுட்டிக்காட்டலாம். இங்ஙனம் ஒவ்வொரு விடயத்தினையும் மிக நுட்பமாக விவரித்துச் செல்லும் அழகினை ஆசாரக்கோவை எங்கும் பரக்கக் காணமுடிகின்றது.

மக்களிடையே நம்பிக்கைகளாக நிலைத்த விடயங்களையும் சகுனம் பார்த்தல் முதலானவற்றையும் நூலில் ஆங்காங்கே முள்ளியார் பதிவுசெய்கின்றார். இதனைக் காரணங்காட்டி பெருமுள்ளியார் 'மூடநம்பிக்கைகளுக்கு உருக்கொடுக்க முனைந்திருக்கிறார்' எனக் குறை கூறுவோருமுளர்[4]. இதில் உண்மையிருந்தாலும், அந் நம்பிக்கைகள் இன்றும் பெரும்பாலான தமிழ் மக்களிடையே தொடர்ந்தும் காணப்பட்டு வருவதை நோக்கும் போது அவற்றினை எத்தனையோ நூற்றாண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்த ஆசாராக்கோவை ஆசிரியர் பதிவுசெய்ததில் தவறில்லைப் போல்தெரிகின்றது.

பெருவாயில் முள்ளியார் விதந்துரைக்கும் ஆசாரங்க;டாக வெளிப்பட்டு நிற்கின்ற பண்டைத் தமிழரின் அறிவியல் நோக்கும் சுட்டிக்காட்டத்தக்க தொன்றாகும். குறிப்பாக சுத்தமான சுகாதார வாழ்வுகுறித்த விடயங்களில் ஆசாரக்கோவை அதிக கவனம் செலுத்தியிருக்கின்றது. உணவுண்ணுதல், நீராடுதல், மலசலம் கழித்தல், எச்சில் துப்புதல், வீட்டினைத் துப்பரவாக வைத்திருத்தல், தாம்பத்திய உறவினை மேற்கொள்ளுதல் முதலான

சந்தர்ப்பங்களில் பின்பற்ற வேண்டிய சுகாதார முறைகள் குறித்து ஆசாரக்கோவையாசிரியர் தரும் தகவல்கள் வியக்கத்தக்கவையாகும். எடுத்துக்காட்டாகப் பின்வரும் பாடல்களை நோக்கலாம்.

*"நீராடும் போழ்தில் நெறிப்பட்டார் எஞ்ஞான்றும்*
*நீந்தார் உமியார் தினையார் விளையாடார்*
*காய்ந்தது எனினும் தலையொழிந்து ஆடாரே*
*ஆய்ந்த அறிவி னவர்"* *(14)*
*"நீராடிக் கால்கழுவி வாய்பூசி மண்டலம்செய்து*
*உண்டாரே உண்டார் எனப்படுவார் அல்லாதார்*
*உண்டார்போல் வாய்பூசிச் செல்வர் அதுவெடுத்துக்*
*கொண்டார் அரக்கர் குறித்து"* *(18)*

இன்றுபோல் கிருமிகொல்லிகள், மருந்துகள், நோய்த்தடுப்பு வழிமுறைகள் வளர்ச்சியடையாத அக்காலத்தில் ஒவ்வொருவரும் சுகாதாரமாக வாழ்ந்து தம்மையும் தமது சுற்றுப்புறத்தினையும் பேணிக் கொள்ளுதல் அவசியமானதாக இருந்தது. கொள்ளை நோய்களிலிருந்தும், ஆபத்தான கிருமிகாவிகளிலிருந்தும் தம்மைக் காத்துக்கொள்ள இயற்கையோடியைந்த வழிமுறைகளை பின்பற்ற வேண்டிய தேவையை அக்காலத்தவர் அறிந்திருந்தனர். பரம்பரை பரம்பரையாக கையளிக்கப்பட்டும் பின்பற்றப்பட்டு வந்ததுமான சுகாதாரப் பழக்கவழக்கங்கள் எக்காலத்துக்கும் எவருக்கும் தேவையானவை என ஆசாரக்கோவையாசிரியர் உணர்ந்திருக்கின்றார். ஆதலால் அவற்றினைத் தனது நூலில் பதிவும் செய்துள்ளார். சுகாதாரமான வாழ்வியலில் தமிழர்கள் காட்டிவந்த அக்கறையும், சுகாதாரத்தைப் பேணிக்கொள்வது பற்றி அவர்களுக்கிருந்த விழிப்புணர்வும், அறிவும் ஆசாரக் கோவையினூடாக வெளிப்பட்டு நிற்கின்றன.

ஆசாரக்கோவை குலப்பிறப்பில், சாதியில், வயதில், பாலியலில் உள்ளடங்கிய ஏற்றத்தாழ்வுகளை நியாயப்படுத்துகின்றது என்றும், தனிமனிதனுடைய இயற்கையான செயல் முறைகளில் கட்டுப்பாட்டை விதிக்கின்றது என்றும், மூடநம்பிக்கைகளை வற்புறுத்துகிறது என்றும், பார்ப்பனரின் அசாதாரண பெறுமதிகளைப் புகழ்கிறது என்றும் விமர்சிக்கப்பட்டு

வருகின்றது. இவ்விமர்சனங்களில் உண்மையில்லாமலில்லை. ஆசாரக் கோவை எழுதப்பட்ட காலச்சூழல், ஆசிரியரின் இலக்கியக் கொள்கை, அக்காலத்தில் செல்வாக்குப் பெற்றிருந்த அதிகாரவர்க்கம் முதலானவை அந்நூலில் இடம்பெற வேண்டிய அறக்கோட்பாடுகளையும் ஆசாரங்களையும் தீர்மானித்திருக்க இடமுண்டு. இதனால் ஆசாரக்கோவை கூறும் அற மற்றும் ஒழுக்கக் கோட்பாடுக;டே அதிகாரத்தின் அருபகரங்கள் நீண்டிருக்க வாய்ப்புள்ளது. எனினும் தமிழர் பண்பாட்டினைப் பதிவுசெய்த இலக்கியம் என்றவகையிலும், தமிழ் மக்களின் வாழ்வியல் நெறிமுறைகளை ஒழுங்குபடுத்த முனைந்தது என்ற வகையிலும், பண்டைத் தமிழ் மக்களின் அறிவியல் நோக்குக் குறித்த சிந்தனைகளை வெளிப்படுத்துகிறது என்ற வகையிலும் ஆசாரக்கோவைக்கு என்றும் தமிழ் இலக்கிய வரலாற்றில் தனிச் சிறப்பிடமுண்டு.

**அடிக்குறிப்புகள்:**

1. Panchatantram, (tran.) Arthur Ryder, University of Chicago Press, Chicago, 1925, p.11
2. பதினெண் கீழ்க்கணக்கு, (பதி) சண்முகம்பிள்ளை. மு., முல்லை நிலையம், சென்னை, 2001, ப.55
3. ராஜ்கௌதமன், அறமும் அதிகாரமும், விடியல் பதிப்பகம், சென்னை, ப.216
4. மகேஸ்வரன், வ., ஆசாரக் கோவையும் அறமும், அறநெறிக்காலமும் தமிழகப் பண்பாட்டு மரபுகளும், இந்துசமய கலாசார அலுவல்கள் திணைக்களம், கொழும்பு, 2011, ப.379
5. மே.கு.நூ. ப.379.

# 4. சமுதாய நோக்கில் சிங்கப்பூர் மலேசிய தமிழ்ச் சிறுகதைகள்

முனைவர் பொன்.சிவக்குமார்
பாடத்திட்ட வரைவு அதிகாரி
கல்வி அமைச்சு, சிங்கப்பூர்

## முன்னுரை

மனித சமுதாயத்தின் மிகப் பழமையான சொத்து கதை. பழந்தமிழர்களுக்கும் கதைச் செல்வம் உண்டு. காலம் காலமாக கதை சொல்வதும் கதை கேட்பதும் எல்லாத் தேசங்களிலும் எல்லா மக்களிடையேயும் வாய்மொழி மரபாக இருந்து வந்திருக்கின்றது. இவ்வாறாகப் பன்னெடுங்காலமாக வாய்மொழியாக இருந்து வந்த சிறுகதைகள் பின் அச்சு இயந்திர வருகைக்குப்பின் நூல் வடிவில் வெளிவரத் தொடங்கின. சிறுகதைகள் பொழுதுபோக்கிற்கு என்ற அளவில் நில்லாமல் மக்களை நல்வழிப்படுத்தும் சாதனமாகவும் உருவம் பெற்றன. சமுதாயத்தில் நிகழும் சீர்கேடுகளைக் கதாபாத்திரங்களின்வழி உருக்கொடுத்து மக்களுக்கு எடுத்துக்காட்டவும் அதனைச் சீரமைக்கவும் சிறுகதைகள் தன்னாலான பங்கை ஆற்றி வருகின்றன என்பது மறுப்பதற்கில்லை. அவ்வகையில் மக்களிடையே நிலவும் மூடநம்பிக்கைகள் எதிர்த்தும் பகுத்தறிவை ஏற்றும் சமுதாய நோக்கிலான தமிழ்ச் சிறுகதைகள் சிங்கப்பூர் மலேசியாவில் தோற்றம் பெற்றன. அவற்றைப் பற்றி இக்கட்டுரையில் ஆழ்ந்து நோக்குவோம்.

## சிறுகதை – வரைமுறை

வாழ்க்கையின் ஒரு சின்னஞ்சிறு காட்சியோ, மின்னல் போன்ற நிகழ்ச்சியோ, மெல்லிய அசைவோ, சூறாவளியின் சுழற்சியோ, நீர்க்குமிழியின் வட்டமோ, ஏதாவது ஓர் அணுவின் சலனமோ சிறுகதையாக இடமுண்டு. இவ்வாறாகப் பல்வேறு வகைகளில் உருப்பெறும் சிறுகதைக்கு இலக்கணமோ, வரைமுறையோ கிடையாது என்று கூறுவோரும் உண்டு. ஆனால் சிறுகதைக்குப்

பண்போ, தனி இலக்கணமோ இல்லை என்று கூறிவிட முடியாது என்பாரும் உண்டு. சிறுகதைக்கென இரண்டு நூற்றாண்டு காலப் புதிய மரபு தோன்றிவிட்டது. 20-ஆம் நூற்றாண்டின் முதற்பகுதியில் சிறுகதையின் பொதுவான தன்மைகள் குறித்து பல்வேறு ஆய்வுக் கருத்துகள் வெளிவந்துள்ளன. இதன் அடிப்படையில் ஆய்வாளர்கள் சிறுகதைக்கெனச் சில வரைமுறைகளைச் சுட்டிக் காண்பித்துள்ளனர்.

சிறுகதைகள் என்றால் அளவில் சிறியதாய் இருக்கவேண்டும். துனிமனித அல்லது சமுதாய வாழ்க்கையைச் சுவையோடு பிரதிபலிக்க வேண்டும். சிறுகதையில் ஒரு மனிதர் அல்லது ஓர் உணர்வு, ஒரு நிகழ்ச்சி அல்லது ஒரு சிக்கல்தான் தலைதூக்கியிருக்க வேண்டும். அளவுக்கு அதிகமான கதைமாந்தர்களுக்கு அங்கு இடமில்லை. விரிவான வருணனைக்கும், சூழ்நிலைக்கும் சிறுகதை இடம் தரல் கூடாது. குறைவான, ஏற்ற சொற்களால் இவை சுட்டிக்காட்டப்படவேண்டும். பாத்திரங்களின் உரையாடல்களில் சொற்செட்டு அவசியம். சிறுகதை அளவிற் சிறியதாய், முழுமை பெற்றிருக்க வேண்டும். சிறுகதை நம்பக்கூடிய உண்மைத் தன்மையினைக் கொண்டு விளங்குதல் வேண்டும். நல்ல சிறுகதை ஆல விதையைப் போல் விரிவாகக் கூடிய கதைக்கருவைக் கொண்டிருத்தல் வேண்டும். ஒரு நல்ல சிறுகதை முதல் பத்தியிலேயே வாசிப்பவரைக் கட்டிப்போடும் ஆற்றல் பெற்றிருக்க வேண்டும் என்பது இங்குப் பெறப்படுகிறது.

## சமுதாய நோக்கில் சிறுகதைகள்

பொழுதுபோக்கிற்காகச் சிறுகதைகள் தோற்றம் பெற்றாலும் அவை சமுதாயச் சீர்கேடுகளைப் படம்பிடித்துக் காட்டத் தவறவில்லை. மேலும், படிப்போரின் சிந்தனையைத் தூண்டுவதன் மூலமும், தீர்வுகளைச் சிந்திக்க வற்புறுத்துவதன் மூலமும், சிறுகதைகள் சமூகப் பிரச்சனைகளுக்குத் தீர்வு காணத் தமது பங்கைச் செய்து வருகின்றன என்பது கண்கூடு. சமுதாயத்தில் நிலவும் பெண்ணடிமை, ஆணாதிக்கம், சாதிக் கொடுமைகள், வரதட்சணைக் கொடுமை, தொழில்களின் நசிவு, கலைகளின் வளர்ச்சியின்மை, கலாச்சார சீர்கேடு, பண்பாடு மறைந்துவரும் நிலை, மூடநம்பிக்கைகள் போன்ற சீர்கேடுகள் பலவற்றைக் கருக்களாகக் கொண்டு சிறுகதைகள் பல வெளிவருகின்றன. கதாசிரியர்களின் மனத்திரையில் உதயமாகும் புரட்சி மின்னல்கள், சமுதாயம்

சீர்பெற வேண்டும் என்னும் பொதுநல எண்ணத்துடன் சிறுகதையாகப் பொலிவு பெறுவதைக் காண்கிறோம்.

## மூடநம்பிக்கைகள்

ஒன்றை அதன் உண்மைத் தன்மைக்கு அல்லது பலன்களுக்கு எதிராகச் சரி என்றோ பலன் தரும் என்றோ நம்புவதை மூடநம்பிக்கை எனலாம். துமிழர் சமூகத்தில் மூடநம்பிக்கை சார்ந்த சிறுகதைகள் அத்தகைய மூடநம்பிக்கைகளை அடையாளம் காட்டும்; அவை ஏன் மூடநம்பிக்கைகள் என்பதை விளக்கும். மேலும் தமிழர் சமூகத்தின் மூடநம்பிக்கைகளின் வரலாற்றையும் குறிக்கும் மூட நம்பிக்கைகள் மருந்துப்போலி (டயஉநடிழ) மருந்துகள் போல் சில விளைவுகளை ஏற்படுத்தினாலும், அவை நேரடியான தமது மீவியற்கை விளைவுகளை என்றும் நிரூபித்ததில்லை. அறிவியல் அறிவுக்கு ஒத்துவராத சில பழக்கங்களும் நம்பிக்கைகளும் பண்டைக்கால மக்களிடம் மட்டுமல்லாது. நாகரிகம் பெற்ற எல்லா இனத்தினரிடமும் இருந்தினரம்மந்தி, தவம், சூனியம், பேய்கள், தேவலோகம், நரகலோகம், சாதகம், பலியிடுதல், இறந்தவர்களுடன் புதைத்தல், சோதிடம், சகுனம் பார்த்தல், நிமித்தங்கள் முதலிய மூடநம்பிக்கைகள் மக்கள் வாழ்வை அழிப்பதையும் நாம் சமுதாயத்தில் காண்கிறோம். இதனை எதிர்த்து படைப்பை மேற்கோ சிறுகதை எழுத்தாளர்கள் மக்களிடையே பகுத்தறியும் திறன் வளர இவை உதவும் எனப் பெரிதும் நம்புகின்றனர். மூடநம்பிக்கைகளை எதிர்த்து எழுந்த சிறுகதைகள் மக்களிடையே பெரும் வரவேற்பைப் பெற்று வருகின்றன என்பதே எழுத்தாளர்களின் வெற்றி எனலாம்.

## பகுத்தறிவுச் சிந்தனைகள்

ஆறறிவு பெற்ற மனிதனின் ஆறாம் அறிவு பகுத்தறிவு. தான் காண்பதையும், கேட்பதையும் ஏன் கற்பதையும் பகுத்து ஆராயும் அறிவையும் திறனையும் அவன் மட்டுமே பெற்றுள்ளான். இருந்தபோதிலும் ஆராயாமல் மூடநம்பிக்கைகளாலும் சமுதாயச் சீர்கேடுகளாலும் சிக்கித் தவிக்கின்றான். இறுக்கமான கட்டமைப்பிலிருந்து வெறிவர வேண்டும். பகுத்தறிந்து முடிவு செய்ய வேண்டும். இத்தகைய எண்ணங்களோடு மனிதனைச் சிந்திக்கத் தூண்டும் சிறுகதைகள் தமிழில் ஏராளமாக வெளிவந்துள்ளன. வெளிவருகின்றன. பட்டைத் தீட்டினால் மின்னும் வைரம்போல், புடம் போட்டால்

மிளிரும் தங்கம்போல், செப்பனிட்டால் அழகு பெறும் கோபுரம் போல மனிதன் தன் பகுத்தறிவைப் பயன்படுத்தினால் மட்டுமே படைப்பின் உன்னத்தினை அறியலாவான். மனிதனைச் சிந்திக்கத் தூண்டும் சிறுகதைகள் மக்களிடையே மிகப்பெரிய வரவேற்பினைப் பெற்று வருகின்றன என்பது மகிழ்ச்சியைத் தருகின்றது.

## சிங்கப்பூர் சிறுகதைகளில் சமுதாய நோக்கு

சிங்கப்பூர் எழுத்தாளர்களால் எழுந்த பல சிறுகதைகளில் சமுதாய நோக்கு மிளிர்வதைக் காணலாம். ஊதாரணத்திற்கு, மனிதனின் முறையற்ற வாழ்க்கை முறை, காலத்திற்கு ஏற்பத் தன்னை மாற்றிக்கொள்ளும் திறன், ஆணாதிக்கம், பெண்ணடிமை, குடி பெயரும் மக்களின் மனநிலையும் நிலைப்பாடும் போன்ற பலவற்றைக் கருப்பொருள்களாகக் கொண்டு ச.உ துமான் கனி, சுப்ரா, மா.இளங்கண்ணன், இராம. கண்ணபிரான் போன்ற எழுத்தாளர்கள் தங்கள் சிறுகதைகளைப் படைத்துள்ளார். ஆவை மிகச் சிறந்த படைப்புகள் என்பதில் ஐயமில்லை. அவற்றைப் பற்றி இப்பகுதியில் விரிவாகக் காண்போம்.

## சமுதாய நிலை

உயர்திணை அ∴றிணை இரண்டிற்கும் வாழ்க்கை முறையில் வேறுபாடுகள் பல உள்ளன. ஆனால் ஐந்தறிவு படைத்த உயிர்களிடையே உள்ள அன்பின் புனிதமும் ஆறறிவு படைத்த மனிதனின் இழிவான நடத்தையும் ‘உயர்திணை அ∴றிணை’ என்ற சிறுகதையில் ச.உதுமான் கனி அவர்களால் நன்கு சித்தரிக்கப்பட்டுள்ளதைக் காணலாம். சாலையோரம் வாழும் மிருகங்களிடையே நிலவும் தூய அன்பினையும் தாய்மையையும் காணமுடிகிறது. அதே வேளையில் நாகரிக வாழ்வு வாழும் மனிதனின் இழிவான உணர்ச்சிகளும் இங்குச் சித்தரிக்கப்பட்டுள்ளன. இறப்பிற்குப்பின் அவனுக்குக் கிடைக்கும் மரியாதையே தனி. முனிதன் உயர்திணையா அ∴றிணையா என்பதை அவன் வாழ்க்கை முறையே முடிவு செய்யும் என்னும் சமுதாய உண்மையை விளக்கி நிற்பதுடன் நம்மைச் சிந்திக்கவும் தூண்டுகிறது என்பது இச்சிறுகதையின் சிறப்பு.

மேலும் ‘சராசரிகள்’ என்னும் சிறுகதை மனிதனின் கோபத்தையும் நடைமுறை வாழ்க்கையையும் எள்ளி நகையாடும் இயந்திரத்தின்

உள்ளக்கிடக்கையைப் பிரதிபலிப்பதாக ச.உதுமான் கனியால் உருவாக்கப்பட்டுள்ளது. உணர்வற்ற இயந்திரம் கூட ஆறறிவு படைத்த மனிதனின் செயல்களைக் கண்டு ஏளனம் செய்யுமளவுக்கு மனிதன் பகுத்தறிவின்றி நடக்கிறான் என்று படிப்போரைச் சிந்திக்கத் தூண்டுகிறது இச்சிறுகதை. புடைப்புகளிலே உயர்ந்த படைப்பான மனிதனின் நடத்தை உயர்வாக இருக்க வேண்டும் என்ற சமுதாய நோக்கில் அமைந்துள்ளது இக்கதை.

### ஆணாதிக்கம்

'ஆணாதிக்கம்' பற்றிய கதைகளும் கட்டுரைகளும் கவிதைகளும் ஆயிரக்கணக்கில் வந்துள்ளன. சிங்கப்பூர் சூழலில் இக்கருப்பொருளைக் கொண்டு உருவான சிறுகதை 'இனி ஒரு விதி செய்வோம்'. இது எழுத்தாளர் சுப்ராவின் முத்திரைப் படைப்பு, 'பெண்ணடிமை தீராத இந்நாட்டில் மண்ணடிமை தீர்தல் முயற்கொம்பே' என்று முழக்கமிட்டான் பாரதி. வளர்ந்த நாடுகளிலும் பெண்களுக்கு இதே நிலை தான் போலும். ஆணும் பெண்ணும் சமம் என்னும் தம் பக்க வாதத்தை முன் வைக்கும் பாரதி என்னும் கதாபாத்திரம் புரட்சிக்கவியின் பெயரைத் தாங்கி இருப்பதே அவரின் முற்போக்குக் கருத்துக்களை எடுத்துரைப்பதாக உள்ளது. பெண்களுக்கான உரிமைக்காகக் குரல் கொடுக்கும் இக்கதாபாத்திரம் ஒருவர் பொறை இருவர் நட்பு என்னும் நாலடியார் தொடரைக்கூட விமர்சிக்கிறது. பெண்கள் மட்டுமே விட்டுக்கொடுப்பது முறையல்ல என்றும் விளக்கமளிக்கிறார்.

படிப்பிலும் சமபாத்தியத்திலும் சற்றும் குறைவில்லாத மனைவியை அறைந்த கணவனை அனைவரது முன்னிலையிலும் மன்னிப்புக் கேட்கச் செய்ய வேண்டும் என்கிறாள் பாரதி. இது ஒன்றும் தவறல்ல. தன்னை அறைந்தவனை அவள் அறைய நினைக்கவில்லை. தவறு செய்தவனை உணரச் செய்கிறாள். மேலும், 'இது அவருக்கு நான் கொடுக்கும் தண்டனை அல்ல; அவர் என்னிடம் சேர்ந்து வாழ்வதற்கு நான் கொடுக்கும் வாய்ப்பு' என்று பாரதி கூறுவதிலிருந்து அவளின் உள்ளத்தின்மையும் தன்மான உணர்ச்சியும் வெளிப்படுகின்றன. 'கணவனே கண்கண்ட தெய்வம்' என வாழும் முதுகெலும்பில்லாத பெண்களுக்கு மத்தியில் பாரதி ஒரு புதுமைப் பெண்ணாகவே காட்சி தருகிறாள். பேண்கள் தங்கள் உரிமையை

விட்டுக்கொடுப்பது என்பது அவர்களின் பலவீனம் என்றே கூற வேண்டும். கொட்டக் கொட்டக் குனிந்து போகும் பெண்ணினத்திற்குப் பாரதி ஒரு நல்ல முன்னுதாரணம் என்பது திண்ணம். எழுத்தாளர் சுப்ரா காட்சியமைப்புகளையும் வாதங்களையும் பாங்காய் வடிவமைத்திருப்பது கதையின் சிறப்பு.

**காலத்திற்கேற்ப மாற்றம் காணுதல்**

காலத்திற்கு ஏற்பத் தன்னை மாற்றியமைத்துக் கொள்ள முடியாத பல உயிரினங்கள் இன்று மண்ணுலகில் இல்லை. அவற்றில் ஒன்று டயனோசர் இனம். என்றென்றும் வாழ்க்கை ஒரே சீராக அமையாது. காலத்திற்கு ஏற்ப நம்மை நாம் மாற்றியமைத்துக் கொள்ள வேண்டும். தகுதியாக்கிக் கொள்ள வேண்டும் என்ற கருத்தில் அமைந்த சிறுகதை மா.இளங்கண்ணன் எழுதிய 'வெளிச்சத்தை நோக்கி' என்னும் சிறுகதை, இக்கதை ஒரு படிமக்கதை, பறவைகளின் மூலம் மனிதனின் பண்புகளையும் செயல்களையும் உருவகப்படுத்தியுள்ளார் கதாசிரியர். குதையில் பொழுதுகளின் வர்ணனை வெகு சிறப்பாக அமைந்துள்ளது. மனிதர்கள் பலவகையினர், ஒரு வகையினர் சந்தர்ப்பங்கள் கிடைக்கும்போது அதனைப் பயன்படுத்தி முன்னேறுவதை விட்டுவிட்டுக் களங்கள் ஏற்படுத்தி அரசியல் செய்யும் குணம் படைத்தவர்கள். 'ஊர் இரண்டுபட்டால் கூத்தாடிக்குக் கொண்டாட்டம்' என்னும் வகையினர் இவர்கள். இவ்வகை மனிதர்கள் கதையில் வரும் அண்டங்காக்கையைப் போன்றவர்கள். இவர்கள் தீர்வு காண முற்படுவதில்லை. மாற்றாகத் தங்களைத் தலைவர்களாக உயர்த்திக்கொள்ளும் அற்ப எண்ணமுள்ளவர்கள்.

இரண்டாம் வகையினர் சந்தர்ப்பங்கள் கிடைக்கும்போது அதனைப் பயன்படுத்தாது சோம்பித் திரிபவர்கள். இவ்வகை மனிதர்கள் கதையில் வரும் புறாவைப் போன்றவர்கள். இவர்கள் தங்களை மாற்றிக்கொள்ள வேண்டும் என்று வலியுறுத்துகிறார் ஆசிரியர்.

மூன்றாம் வகையினர் காலச் சூழலுக்கு ஏற்பத் தங்களை மாற்றியமைத்துக் கொள்ளும் நல்ல துடிப்புடையவர்கள். இவர்கள் தங்களைத் தகுதியுடையவர்களாக மாற்றிக் கொள்வதில் அக்கறையுள்ளவர்கள். இவ்வகை மனிதர்களே பிறருக்கு முன்னுதாரணமாகத் திகழ வல்லவர்கள். இவ்வகை

மனிதர்கள் கதையில் வரும் சிட்டுக்குருவியைப் போன்றவர்கள். உணவு கிடைக்கும் எனக் காத்திராமல் உணவைத் தேடிச் சென்று வளம் பெறும் இவர்களின் குணம் உயர்வானது. இக்காலத்தில் வலியுறுத்தப்படும் தகவமைத்துக் கொள்ளுதல் (யுனயிவயடிடைவைல) என்னும் குணமே இக்கதையில் வலியுறுத்தப்படுகின்றது.

மேலும் குஞ்சுகளை இழந்த புறாக்கள் வருத்தப்பட்டாலும் அறியாமை விலகிப் புத்துணர்வு பெறுகின்றன. 'தோல்வியைச் சந்திக்காத மனிதன் வாழ்வில் எந்தவொரு புதிய முயற்சியும் எடுக்காதவன்' என்பது அறிஞர் ஒருவரின் கருத்து. இவ்வகையில் புறாக்கள் தங்கள் குஞ்சுகளை இழந்தாலும் மீண்டும் குஞ்சுகளைப் பெற்றுக்கொள்ளலாம் என அறியாமை விலகிப் புத்துணர்வு பெறுகின்றன. நாமும் தோல்விகளைக் கண்டு அஞ்சி விடாமல் முன்னேற்றப்பாதையில் மனதை வைத்து மீளுந்தன்மையுடன் போராடி முன்னேற வேண்டும் என்னும் கருத்தையும் இக்கதை வலியுறுத்துகின்றது. 'காலங்கள் மாறுவது உலக இயற்கை' என்பதும், அவற்றிற்கு ஏற்ப மாந்தரினமும் மாறியே வாழ வேண்டும்; வாழமுடியும் என்பது பெறப்படும். இதனைப் பின்னணியாக்கிய படைப்பாளி, இரண்டு நெறிகளில் உண்மையை உணர்த்தியுள்ளார்.

## பகுத்தறியும் சிந்தனைகள்

சிங்கப்பூர் சிறுதை எழுத்தாளர்களில் சிறந்து விளங்கும் இராம. கண்ணபிரான் எழுதிய 'நாடோடிகள்' என்னும் சிறுகதை பல பகுத்தறிவுச் சிந்தனைகளை உள்ளடக்கிய சிறுகதையாக விளங்குகிறது. இக்கதையில் மனிதன் எந்தத் தொழிலையும் இழிவாக எண்ணுதல் கூடாது. தனது மொழியையும் மக்களையும் விட்டு விலகக்கூடாது. நாகரீக மோகம் கொள்ளக்கூடாது. மேற்கத்திய கலாச்சாரத்தின் அழிவு, பண வேட்டையால் ஏற்படும் சிக்கல்கள், அடிக்கடி குடியேறுவதால் நிகழும் சிக்கல்கள் என இச்சிறுகதை பல கோணங்களில் படிப்போரைச் சிந்திக்கத் தூண்டுகிறது.

இருவேறுபட்ட குணங்களை உடைய நண்பர்களின் வாழ்க்கையைச் சித்திரிப்பதுடன் எது சரி, எது தவறு எனப் படிப்போரை முடிவு செய்யத் தூண்டும் விதத்தில் கதை நகர்கிறது. குறைந்த வருமானத்தில் சீரான வாழ்க்கையை நகர்த்தும் பார்த்திபன் 'போதுமென்ற மனமே பொன் செய்யும் மருந்து' என்று நிறைவான வாழ்க்கை நடத்துகிறான். ஆனால் வாழ்வில்

விரைவாக உயர்ந்த நிலையை அடைந்துவிட்ட தனபாலோ தன் மனைவியைக்கூடப் பணத்தின் அடிப்படையிலேயே முடிவு செய்கிறான். அவனது உயர்ந்து விட்ட வாழ்க்கை முறையில் அவன் மேற்கத்திய கலாச்சாரத்தைப் போற்றித் தனது கலாச்சாரத்தை மறந்துவிடுகிறான்.

தமிழ் மொழியை அவன் மறந்தே போகிறான். தன் மொழியின் அருமையை உணராத அவன் தன் மக்களிடமிருந்தும் விலகியே நிற்கிறான். இதற்குக் காரணம் அவன் தந்தை செய்து வந்த தாழ்வான வேலை என்பதால் அவன் தன்னையே அவர்களிடமிருந்து விலக்கிக் கொள்கிறான். 'பிறருக்குத் தீங்கு செய்யாத எந்தத் தொழிலும் நல்ல தொழிலே' என்ற பகுத்தறிவுச் சிந்தனை அவனிடம் இருந்திருந்தால் அவன் தன் வட்டத்தை விட்டுச் சென்றிருக்கமாட்டான். மேலும் தன் மக்கள் முன்னேற அவன் எந்த ஒரு முயற்சியும் செய்யவில்லை என்பது சிந்திக்க வேண்டிய ஒன்று. நண்டின் குணத்தைவிடக் காக்கையின் குணம் உயர்ந்தது அன்றோ!

இறுதியில் நல்வாழ்க்கையை எதிர்நோக்கி, ஆஸ்திரேலியா சென்ற அவன் இழந்தது வாழ்க்கையை மட்டுமல்ல; தன் மனைவி மக்களையும் தான். குடியிருக்கும் நாட்டை அடிக்கடி மாற்றிக் கொண்டதால் நாட்டுரிமையை உணராத தனபாலின் மகள் அமெரிக்காவில் வாழச் சென்றுவிடுகிறாள். புத்திரச் சோகத்தால் தனபாலின் மனைவி மரணமடைகிறாள். குடும்பத்தை இழந்த தனபால் தனக்கென்று யாருமின்றித் தனிமைத் துயரில் அல்லலுறுகிறான்.

'நல்லதோ கெட்டதோ குடியேறிய முதல் நாட்டிலேயே நிலையாகத் தங்கி வாழ்க்கையின் உண்மை மதிப்புகளை மதித்துப் பேணி, தமிழ்மொழி, தமிழ் இனப் பண்பாடுகளில் உறுதியுடன் வாழ்ந்து பிற இனத்தாரோடும் ஒன்றித்துப் பழகி, தேச நிர்மாணத்திற்குத் தொண்டூழியம் புரிவதே ஒவ்வொரு தமிழரின் தலையாய கடமையாக இருக்க வேண்டும்' என்னும் கருத்தை உணர்கிறான் தனபால். நம்மையும் உணரச் செய்கிறார் கதாசிரியர்.

### மலேசிய சிறுகதைகளில் சமுதாய நோக்கு

மலேசிய எழுத்தாளர்களுடைய பல சிறுகதைகள் சமுதாய நோக்கில் தோற்றம் பெற்றன. அவை சோம்பேறித்தனம், குழந்தைத் தொழிலாளர்கள்,

சாதிப்பூசல்கள், வாழ்க்கை முறை, பகுத்தறிவுச் சிந்தனைகள் போன்ற பல்வேறு கூறுகளை உள்ளடக்கி உருப்பெற்றன. சி.வேலுசுவாமி, ந.மகேஸ்வரி, கா.கலியப்பெருமாள், ரெ.கார்த்திகேசு போன்ற சிறந்த எழுத்தாளர்கள் மக்களைச் சிந்திக்கத் தூண்டும் சிறுகதைகள் பலவற்றைப் படைத்திருக்கின்றனர்.

## பகுத்தறிவுச் சிந்தனைகள்

சி.வேலுசுவாமியின் கைவண்ணத்தில் உருவான 'பிச்சைக்காரிகள்' என்னும் சிறுகதை மனித சோம்பேறித்தனத்தின் உச்சநிலையை விளக்கி நிற்கிறது. உழைத்து வாழ மனமின்றி உடற்குறையில்லாதபோதும் சோம்பேறித்தனத்தால் பிச்சை எடுத்து வாழ்வை நடத்தும் பிச்சைக்காரர்களைக் கொண்டு பகுத்தறிவை வளர்க்க முனைகிறார் கதாசிரியர். வேலை வாங்கித் தருகிறேன் என்று ஒருவர் முன்வந்தாலும் அதனை ஏற்க இவர்கள் மறுக்கிறார்கள். இது தங்கள் வாழ்வை அழித்துக்கொள்வதுடன் தங்கள் பிள்ளைகளையும் இத்தொழிலில் ஈடுபடுத்துகின்றனர். பிச்சை எடுப்பதைக் கவுரவக் குறைச்சலாக எண்ணாமல் ஒரு தொழிலாக எண்ணும் இவர்களை யார்தான் திருத்துவது என்ற மனக்குறை ஆசிரியருக்கு ஏற்படுகிறது. நம்மையும் சிந்திக்கத் தூண்டுகிறது.

ரெ.கார்த்திகேசு எழுதிய 'கூரை ஓட்டில் ஒரு எலி குடும்பம் நடத்துகிறது' என்னும் சிறுகதை அத்தையின் கொடுமைக்கு ஆளாகும் ஒரு சிறுமியின் கதையைக் கூறி நம்மை நெகிழ வைக்கிறது. அன்னையை இழந்த அச்சிறுமி கொடுமைக்கு ஆளாகிறாள். தந்தை இன்னொரு பெண்ணுடன் வாழ்வதை முக்கியமாகக் கருதித் தன் மகளைத் தானே அனாதையாக்குகிறான். தந்தையின் பொறுப்பை உணராத இக்கதாபாத்திரம் 'எது முக்கியம்?' என்று நம்மைச் சிந்திக்கத் தூண்டுகிறது. சிறுமியைக் கொடுமைப்படுத்தும் அத்தையின் கொடூரமும் விளக்கப்படுகிறது. 'மண்ணுக்கு மரம் பாரமா? மரத்துக்கு இலை பாரமா? கொடிக்குக் காய் பாரமா? பெற்றெடுத்த பிள்ளை தந்தைக்குப் பாரமா?' என்று நம்மைப் பாட வைப்பதுடன் சிந்திக்கவும் தூண்டுகிறது.

## குழந்தைத் தொழிலாளர்கள்

'நோய் நாடி நோய் முதல் நாடி. . .' என்னும் குரலின் பொருளுக்கேற்ப ஒரு நோயின் மூலக்காரணத்தைக் கண்டறிந்து சரிசெய்தாலே நோய் குணமாகும். சமுதாயப் பிரச்சனைகளும் அவ்வகையே. குழந்தைத் தொழிலாளர்களின் துயரைக் கருப்பொருளாகக் கொண்டு உருவாக்கப்பட்ட சிறுகதை ந.மகேஸ்வரியின் 'இதயம் அழுகிறது'. இக்கதையில் நன்றாகப் படிக்கும் மாணவனால் குடும்பச் சூழ்நிலையின் காரணமாகப் படிப்பைத் தொடர முடியாத நிலை. இதனை அறிந்து அழும் இதயமாக ஓர் ஆசிரியரின் இதயம் சித்திரிக்கப்பட்டுள்ளது.

குறைந்த ஊதியம் கொடுத்தால் போதும் என்று சிறுவர்கள் வேலையில் அமர்த்திக் கொள்கின்றனர். ஆனால் பிஞ்சிலே வெம்பிப் போகும் அவர்களின் எதிர்காலத்தைப் பற்றிச் சற்றும் யோசிக்காத சமுதாயத்தைச் சிந்திக்க வைக்கும் கதையாக இச்சிறுகதை அமைகிறது. இக்காலக்கட்டத்தில் 'குழந்தைத் தொழிலாளர்' எதிர்ப்பைச் சட்டமாக அரசாங்கம் அறிவித்துள்ளது. புரட்சிகளைச் செய்தே நாம் சமுதாயத்தில் இந்நிலையை அடைந்துள்ளோம் என்பது மறுப்பதற்கில்லை.

## சாதிப் பூசல்கள்

கடல் கடந்து வாழும் மக்களிடையேயும் சாதி என்னும் பாகுபாடு ஊடுருவிப் பல சச்சரவுகளை ஏற்படுத்துகின்றன என்பதைப் படம் பிடித்துக் காட்டும் சிறுகதை கா.கலியப்பெருமாள் எழுதிய 'கண்ணு திறக்கல' என்னும் சிறுகதை. உயர்ந்த சாதி, தாழ்ந்த சாதி என்னும் பாகுபாட்டால் இச்சாதியினர் இவ்வகைத் தொழில்களையே செய்ய வேண்டும். கோயிலிலிருந்து ஒதுங்கியே இருக்க வேண்டும் என்று மனிதனை மிருகமாக நடத்தும் அவலத்தை இக்கதை சிறப்பாகச் சித்திரிக்கிறது.

கோயிலைக் கட்டியவர் தாழ்ந்த சாதியினராய் இருப்பினும் கோயிலில் இருக்கும் கடவுளை ஏற்றுக்கொள்ளும் உயர்ந்த சாதியினர் அதனைக் கட்டிய மக்களையே உள்ளே செல்ல அனுமதிப்பதில்லை. இந்த நிலையை எதிர்த்து வாதிடுகின்றனர். 'இந்துக்கள் என்ற முறையில் நீங்கள் அனைவரும் ஒன்று தானே?' என்று மாவட்ட அதிகாரி கேட்ட பின்னரும் தங்கள் பக்கத்து

நியாயத்தை வெட்கமின்றி எடுத்துரைக்கின்றனர் மக்கள். இதன் மூலம் நமக்குப் பகுத்தறிவு இல்லை என்பது நமக்கே புரியும் விதமாகக் கதை அமைக்கப்பட்டுள்ளது.

கோயில் கும்பாபிஷேகத்திற்கு வந்த வேற்று மனிதனால் ஒன்றுபட்டிருந்த நம்மைப் பிரிக்க முடியுமானால் நமது பலவீனம் நமக்கே தெரிய வேண்டாம். ஒரே வீட்டில் வாழும் ஒரு தாய் மக்கள் விருந்தினரின் மொழி கேட்டுச் சண்டையிட்டுக் கொள்ளும் அவலம் மாறும் நிலை வேண்டும் என்பதும் இக்கதையால் புலனாகும் கருத்து. மேலும், வெளி மனிதன் அதிகாரம் என்ற பெயரில் நம்மை ஒன்றாக்க வேண்டிய நிலையில் நாம் உள்ளோம் என்பது வருத்தத்தைத் தருகிறது. 'அனைவரின் விளி நீரின் சுவையும் உப்பே' என்ற கருத்து நமக்குப் புரியும் வரையில் நாம் ஐந்தறிவு படைத்த உயர்ந்த சாதி மிருகங்களே என்னும் கருத்தை அற்புதமாக விளக்கி நிற்கிறது இச்சிறுகதை.

## முடிவுரை

மூடநம்பிக்கை என்பது காலத்துக்குக் காலம் வேறுபட்டிருக்கின்றது. அக்காலத்தில் சமுத்திரத்தைக் கடக்கப் பரிகாரங்கள் செய்யப்பட்டன. இன்றோ ஒரே நாளில் நாம் பல நாடுகளுக்குச் சென்று வரும் பறவைகளாக வாழ்கிறோம். உடன்கட்டை ஏறுதல், பெண்களை வீட்டுக்குள் பூட்டி வைப்பது, பிறப்பு இறப்புச் சடங்கு சம்பிரதாயங்கள் என்று பல மூடநம்பிக்கைகள் இன்று கால மாற்றத்தால் மறைந்தும் உருமாறியும் இருப்பது கண்கூடு. ஒவ்வொரு காலக்கட்டத்திலும் மனிதன் பகுத்தறிந்து சிந்தித்ததன் விளைவே மனிதனின் இன்றைய வாழ்க்கை முறை. எனினும், இன்றும் பழைய மூடநம்பிக்கைகள் பல மனிதனிடம் இருக்கவே செய்கின்றன. காலம் மாறினாலும் மனிதன் தன் நிலையில் நிலையாக நின்று எக்காரியத்தையும் பகுத்தறிவுடன் சிந்திப்பதுடன், சமுதாயத்தையும் மனத்திற்கொண்டு, யாருக்கும் தீங்கு விளையாத வண்ணம் மன நிறைவுடன் வாழ முயற்சிக்க வேண்டும். அவ்வாறு இருப்பின் வாழ்விற்குப் பின் சொர்க்கத்தைத் தேடாமல் வாழும்போதே வாழுமிடத்தைச் சொர்க்கமாக அமைத்துக் கொள்ள முடியும்.

**துணை நூல்கள்**

1. சிறுகதைக் களஞ்சியம், தொகுப்பு 1, எ.சி.செட்டியர், சாகித்தியா பதிப்பகம்.
2. கட்டுரைக் களஞ்சியம், ஆனந்தம் கிருஷ்ணமூர்த்தி, சொர்ணவள்ளி பிரசுரம், முதற்பதிப்பு, 2006, சென்னை – 600 033.
3. இலக்கியத் திறனாய்வ, டாக்டர் சு.பாலச்சந்திரன், பத்தாம் பதிப்பு 2007, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை – 600098.
4. இலக்கியத் திறனாய்வு இசங்கள், கொள்கை, அரங்க, சுப்பையா, முதற்பதிப்பு 2012, பாவை பப்ளிகேஷன்ஸ், சென்னை – 600 014.
5. இலக்கியத் திறனாய்வியல், டாக்டர் தா. ஞானமூர்த்தி, முதற்பதிப்பு 2006, ஐந்திணைப் பதிப்பகம், சென்னை – 600 005.

# 5. சிலப்பதிகாரம் காட்டும் ஓவியக்கலை

**சரஸ்வதிஉலகன்பிள்ளை**
முனைவர் பட்ட ஆய்வாளர்
மலேசிய அறிவியல் பல்கலைக் கழகம்
பினாங்கு, மலேசியா,
(DR.SAKIAH BINTI ABU BAKAR)

தமிழ்க்காப்பிய வானில் 2-ம் நூற்றாண்டில் மலர்ந்த சிலப்பதிகாத்திற்குத் இன்றும் தனிஇடமும் சிறப்பும் உண்டு அரசியல், ஆண்மீகம் குமுகாயம், காதல் மற்றும் இலக்கிய மரபு ஆகியவற்றில் அளப்பரியப் புரட்சிகளையும் மாறற்ங்களையும் ஏற்படுத்தி இன்றும் பழமையைக் கொண்டே பல புதுமைகளைக் தேற்றுவித்த சிலப்பதிகாரம் கலைகளுக்கு முக்கயத்துவம் கொடுத்திருப்பதானது வியப்படையச் செய்வதாகும்.

ஆயக்கலைகள் அறுபத்து நான்கு எனக் கூறும் தமிழ்க் கலைகள் அழகுக் கலையினைச் சிறபக் கலை, ஓவியக் கலை, கட்டடக்கலை, இசைக்கலை, காவிக் கலைகள் என ஐந்து பரிவுகளாகக் காட்டகின்றன. ஓவியக்கலை என்பதானது சிறப்க் கலையைவிடமிக நுட்பமானது. எனவே நுண்கலைகளுள் இவ்வோவியக் கலையானது முக்கிய இடம் பெறுகின்றது. இத்தகைய சிறப்பு அம்சம் காப்பியமான சிலப்பதிகாரம் திறம்படவும் படிப்போரைக் கவரும் வண்ணமாகவும் உலாவரச் செய்கிறத.

ஓவியக்கலைஞர்களைக் ‘கண்ணுளாளர்’’ (இந்திரவிழவூரெடுத்த காதை) எனடறுதட ‘செய்வினைக் கம்மியர்’ (கடலாடு காதை) என்றும் சிலப்பதிகாரத்தில் குறிப்பிடப் பட்டுள்ளது. பழந்தமிழர் சிறந்த ஓவியங்கள் வரைவதில் திறமை மிக்கவர்களாகவும் அதன் நுட்பம் தெரிந்தவர்களாகவும் இருந்தனர் என்பதற்கு ஓவிய நூலையே உதாரணமாகக் காட்டுகிறார்

சிலப்பதிகாரத்திற்கு உரை கண்ட அடியார்க்கு நல்லார். சங்கப் பாடல்களும் தொகையும் இக்கூற்றினையே பின் பற்றியுள்ளன என்பதும் மறுப்பதற்கில்லை. கவின் கலைகளில் ஒன்றான ஓவியக் கலைக்கு முன்னோடியாக சிலப்பதிகாரம் விளங்குவதை இக்காப்பியத்தை ஆராயுங்கால் தெரிகின்றது. சிலப்பதிகாரத்தின் ஆம்பம் முதல் இறுதிவரை பாடப்படும் காதைகள் அனைத்திலும் இல்லாவிடினும், பல வரிகளில் ஓவியக்கலை பேசப்பட்டுள்ளது. பதினறு கால் மண்டபத்தை சித்திர மண்டபம் என்று இளங்கோ அடிகள் குறிப்பிடுவதாக கூறப்படுகிறது. காவிரிப் பூம்பட்டிணத்தில் மருவூர்பாக்கத்தில் சிதிரக்காரர்கள், மண்ணீட்டாளர்கள் மற்றும் கண்ணுள் வினைஞர்கள் அகியொருக்கென தனிப்பகுதி இருந்ததாக கூறப்படுகிறது.

சிலப்பதிகாத்தை அலங்கரிக்கும் வகையில் அமைந்துள்ள அரங்கேற்றுக் காதையில் ஓவியக் குறிப்புகள் காணப்படகின்றன.

*ஒருமுக எழினியும், பொருமுக எழினியும்*
*கரந்துவரல் எழினியும், புரந்துடன் வகுத்து ஆங்கு*
*ஓவிய விதானத்து, உனரபெறு நிகழ்த்து*
*மாலைத் தாமம் வளையுடன் நாற்றி*
*விருந்துபடக் கிடந்த அருந்தெரில் அரங்கத்து*

*(அரங்:1:3:109 – 113)*

மேடையில் இருக்கும் ஓவியங்களும், இயற்கை வருணனைகளும் செயற்கை ஓவியங்களாக சிலப்பதகாரத்தில் காட்டப்படுகின்றன. எழினி எனப்படும் திரைச்சீலைகளில் அழகிய ஓவியங்கள் வரையப்பட்டுள்ளன. எனவும், அவ்வரங்கத்தில் கட்டப்பட்ட மேல்விதானம் சித்திர வேலைப்பாடு நிரம்பியுள்ளதாகவும் இவ்வரிகள் புலப்படுத்துகின்றன. மாதவியின் ஆடல் அரங்கேற்றத்தைத் தாங்கி வரும் அரங்கம் பார்ப்பதற்கு அரிய கைவேலைத் தொழில்கள் விளங்க கவர்ச்சியுடனும் சிறப்பாகவும் அமைந்துள்ளது என்பதை இப்பாடல் வரிகள் புலப்படுத்துகின்றன. சிலப்பதிகாரத்தைப் பொருத்த மட்டிலும் ஓவியக் கலை ஓர் அரங்க அமைபின் உயர்நாடியாகத் திகழ்ந்துள்ளதை இங்கு அறிய முடிகிறது.

இத்தகைய வருணனைகளைச் 'சொல் ஓவியம்' என்று மிகைப்படுத்திக் கூறுகின்றார் இளங்கோ அடிகள். அடுத்த நிலையில் வைகை ஆறு இவ்வண் பெண்ணாக வருணிக்கப் படுகிறது. அந்த ஆற்றுப் பெண்ணே

மாதவி என்றும், அவளது நடனம் ஆறு போல வளைந்து நெளிந்து கண்களுக்கு விருந்தாக அமைந்தன எனும் கருத்தினை உட்பொருளாக மாதவியின் நடனத்தையே ஓவியத்தோடு ஒப்பிட்டுக் கூறுகின்றார் இளங்கோ. இதனைப் பெண் ஓவியம் என்று கூறப்படுகிறது.

*கலந்துஇருந்து உறையும் இலங்குநீர் வரைப்பும்*
*வண்ணமும், சுண்ணமும், தண்நறுஞ் சாந்தமும்*
..............
*மரம்கொல் தச்சரும், சுருங்கைக் கொல்லரும்*
*மண்ணுள் தச்சரும், கருங்கைக் கொல்லரும்*
*பொன்செய் கொல்லரும்......* *(இந்திர:1" 10 – 30)*

இங்கு 'வண்ணமம் சுண்ணமும்' என்ற வரிகளை ஆராயப் புகுந்தால், இவை ஓவியக் கலையோடு சேர்ந்து வந்த தொய்யில் கலையையும், ஓவியம் வரைவதற்கும் பயன்படுத்தப்படும் பொருட்களைக் கொண்டிருப்பதாக அறிகிறோம். இச்சொற்களின் பயன்பாடே சிலப்பதிகாரக் காலத்தில் ஓவியக் கலையும் அதனுடன் சேர்ந்த பிற கைவினைக் கலைகளும் போற்றப்பட்டிருக்கும் என்பதே பொருளாகக் கொள்ளலாம்.

*மத்தக மணியொடு வயிரம் கட்டிய*
*சித்தரச் சூடகம், செம்பொன் கைவளை*
*பரியகம், வால்களை பழைப் பல்வளை* *(கடல்:1:90)*

ஆழகிய மாணிக்க மணிகளுடன் சித்திரங்கள் ஆழத்தப்பட்ட சித்தரத் தொழிற்பாடு அமைந்த சூடகமும், மெ்பொன்னாற் செய்த கைவளையும், நவமண வளையும், பலவாகச் செய்த பவழ வளைகளும் ஆகியவற்றை மெல்லிய மயிரினையுடைய தன் மன் வகுக்கப் பொருத்தமுற அணிந்தாள் என்று பொரள் சொன்ன மேற்கண்ட வரிகள் வழி தமிழர்கள் ஓவியக் கலையைக் கையாண்ட வகை மற்றும் அணியும் அணிகலன்களையும் ஒப்பனை செய்யும் வகை ஆகியவற்றைக் கொண்டு கலைக்காகவும் கலை நோக்கோடு செய்திருப்பதை அறியலாம். 'சித்திரச் சூடகம்' என்பது சித்திர வேலைப்பாடு நிரம்பிய அணிகலன் எனக் கொள்வதோடுஈ ஓவியக் கலையைப் பெண்களின் ஒப்பனை அணிகலன்களுக்காகப் பயன்படுத்தியதானது ஓவியம் என்பத சுவர், காகிதம், மணல் தரை ஆகியவற்றில் மட்டுமல்ல அணிகலன்களிலும்

ஓவியம் மிக நுணுக்கமாக பயன் படுத்தப்பட்டுள்ளதைத் தெளிவு படுத்துகின்றது. மேலும் முத்து, மாணிக்கம், வைரம், பொன் ஆகியவை ஓவியக் கலையாகப் பேசப்பட்டு நடை முறைக்கும் அன்றாட வாழ்வுக்கும் கொண்டு வரப்பட்டதை இதன் உட்கருத்தாகக் கொள்ளலாம். இக்கருத்தினையே கீழ்க்கண்ட பாடல் வரிகளும் உணர்த்துகின்றன.

*வண்ணமும், சாந்தும், மலரும், சுண்ணமும்*
*பண்ணியப் பகுதியும் பகர்வோர் விளக்கமும்*
*செய்வினைக் கம்மியர் கைவினை விளக்கமும் (கடல்:1:135)*

'ஓவிய விதானத்து உரை பெறும் நித்தலத்து' என்று சிலப்பதிகாரம் குறிப்பிடுகின்றது. மேலும் காட்டிலின் மேற்கட்டித் திரையிலும். திரைச் சீலைகளிலும் ஓவியம் வரையப் பட்டிருப்பதாக கீழ்க் கண் வரிகள் கட்டிக் காட்டுகின்றன. அதுவே சிலப்பதிகாரத்தில் இளங்கோஅடிகள் சொல்லும் சித்திரச் செய்திகளாக விளங்குகின்றன.

*புன்னை நீழற் புதுமணற் பரப்பில்*
*ஓவிய எழினி சூழ உடன் போக்கி*
*விதானித்துப் படுத்த வெண்கால் அமிளிமிசை (கடல்:1:170)*

புன்னை மரதின் நிழிலல் மணற் பர்பில் சித்தரங்கள் தீட்டப்பெற்ற சீலையை வளைத்துக் கட்டியிருப்பதை இப்பாடல் குறிப்பிடுகின்றது. படம் எனும் தற்பொதைய தமிழ்ச் சொல் முற்காலத்தில் துணியில் ஓவியம் வரையப்பட்டிருப்பதைச் சுட்டிக் காட்டுவதாகும். இதனையே கான் வரியில் சித்திரப் படத்துள்புக்குச் செழுங்கோட்டின் மலர் புனைந்து (கானல்:1:1) என்று குறிப்பிட்டுள்ளார். அடிகள். சீலைப் போன்ற அணியும் தூணிகளிலும் ஓவியங்கள் இரப்பதாகவே தெரிகிற தென்றால் அது மிகயைாகா. ஆதுடன் ஒப்பனைக் கலையும் தொய்யில் கலையையும் சிறப்பிக்க ஊவியங்கள் படங்களாகவும், வண்ணப் பூச்சாகவும் சித்திரமாகவ் கைத்தொழிலாகவே நடத்தப்பட்டன என்பதையும் இக்காப்பியத்தில் பாயுங்கால் நன்க அறியலாம்.

வட்டிகை எனும் சொல் சிலப்பதிகாரத்தில் பயன்படுத்தப் பட்டுள்ளதானது தமிழரின் ஓவியக் கலைக்கு ஓர் அங்கீகாரம் கொடுத்திருப்பது. போலாகும். வட்டிகை என்பதற்கு சித்திரம் அல்லது எழுது கோல் எனப் பொருள் கொள்ளப்பட்டுள்ளது. அதனையே வேங்கடசாமி நாட்டார் தமது

சிலப்பதிகார உரையில் குறிப்பிட்டுள்ளார். கீழ்க்காணும் வரிகளில் இச்சொல்லின் பயன்பாட்டினைக் காணலாம்.

*வட்டிகைப் பூங்கொடிவந்து தோன்றி (காடு:2:121)*

வட்டிகைக் கொண்டு வாயிலின் மேற்புறத்தில் எழுத்தப்பட்ட ஓவியத்தை இவ்வரிகள் குறிப்பிடுகினற்ன. எனவே ஓவியம் வரைவதற்கான கருவிகள் இருக்குமாயின் ஒவியங்களும் வரையப்பட்டிருக்க வேண்டும் வேண்டும் என்று அறிவதுடன் வசதி நிரம்பிய செல்வந்தர்கள். ஆடல் அரங்குகள் அரச அரண்மனைகளில் இக்கலை பரவலாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது என நன்கு தெளிவாகிறது.

சிலப்பதிகாரத்தின் உச்சமாகத் திகழும் கொலைக்காதையிலும் இந்த ஓவியக்கலை நுணுக்கமாக கையாளப்பட்டுள்ளது என்பது வியக்க வைப்பதுன் எதிலும் ஓவியம். எங்கும் ஓவியம் என்று சிலப்பதிகாரத்திற்குப் பொருத்தமானவை என்பதை நிருபிக்கிறது.

*முத்தக மனியாடு வயிரம் கட்டிய*
*பத்திக கேவணப் பசும்பொன் குடைச்சூளுல்*
*சித்திரச் சிலம்பின் செய்வினை எல்லாம்*
*பொய்த தொழிற் கொல்லன்............*

என்ற வரிகள் விறப்னைக்குச் சென்ற கண்ணிகியின் சிலம்பு பொற்கொல்லன் கண்களில் படுகிறது. அச்சிலம்பை உற்று நோக்கிட மாணிக்கப் பரல் பொருந்திய ஓர் அழகிய சிதிரமாகவே அவன் கண்களுக்குப் படுகிறது. இங்கே சிலம்பும் சித்தரத் தொழில் மிக்க அணிகலனாக தமிழிரிடையே இரந்து வந்ததென்று சான்றுகள் பகர்கின்றன. அதைப் பார்க்கும் பொற்கொல்லனும் ஓர் ஓவியனாகவே காணப்படுகின்றான் என்ற புதைப் பொருள் இங்கே புலனாகிறாது. சுருங்கக் கூறின் பொற்கொல்லர்களைக் கைத் தொழில் உடைய ஓவியர்களாகவே பாராட்டப்பட்டிருந்தனர். அதே வேளையில் ஓவியன் ஒருவனுக்கே ஓவிய நுணுக்கங்களை அறியவல்ல ஆற்றல் உண்டு எனவே தான் சிறந்த வேலைபாடு கொண்ட சிலம்பை ஆராய்ந்த பொற்கொல்லனும் ஓவியனாகச் சித்திரிக்கப்படுகிறான்.

இன்பமான காலத்தில் மட்டுல்லாது துன்பச் சூழலிலும் இந்த ஓவியக் கலையின் பரிணாம வளாக்கின்றது மிக நாகக்காவும், சிறப்பாகவும்

இணைத்துள்ளார் அடிகளார். குணவனின் பரிவால் துயருற்று அழுது துவண்ட கண்ணிகியின் முழுமானது துய்ரம் போதும் அஃது அழகிய மலருக்கு ஒப்பிட்டுக் காட்டியிருப்பது ஓவியத்திற்கு ஏற் பாடப் பட்டுள்ளது.

*பழுது ஒழிந்து எழுந்திருந்தான் பல்மரர் குழாத்துளான்*
*எழுதெழில் மலர் உண்கண், இருந்தைக்க (ஊர்:2:60)*

இப்பாடலில் வழி உணரலாம்.

சிலப்பதிகாரத்தில் பாண்டிய் மன்னன் அரியணையில் மடிந்ததை அறியாத நிமித்திகனும் சபையிலுள்ள மற்றோரும் பேச்சற்று திகைத்து நின்றதை ஓவியர்கள் வரைந்த நிழற் படங்களாய் இருந்தனர் என்று வருணித்துக் கூறி உள்ளார்.

*கோயில் மாக்களும், குறந்தொடி மகளிரும்*
*ஓவியச் சுற்றத்து உரையவிந்து இருப்ப (அழற் :2:10)*

மாதவி போன்ற அழகையும், கண்ணகி போன்ற துன்பத்தையும் மட்டுமல்லாது மேற்கண்ட நிலையை ஓவியத்துடன் ஓவியங்கள் அதற்கேற்ப நுட்பமாக பயன்பட்டிருப்பதானது ஓவியத்தின் பல்வேறு நிலைகளாக காட்டப்படுகிறது என்பதை உணர இயலுகிறது.

## முடிவு

பொதுவாகத் தமிழ் நாட்டு ஓவியங்களில், வடிவ அமைப்பு மரபை விட கலையுணர்வு மரபே முக்கியத்துவம் பெற்றுள்ளது. கலையின் வேளியமைப்பு எதுவாக இருந்த போதிலும் உட்கருத்து ஒன்றாகவே ஓவியத்தைப் போற்றயவர்கள் பழந்தமிழர்கள். ஓவியம் தமிழரின் வாழ்வின் பண்பாட்டுடன் நெருங்கிய தொடர்புடையதாகும். துமிழரின் அனைத்து நுண்கலைகளுக்கும் குறிப்பாக சிலப்பதிகாரமே முன்னோடியாக திகழ்கிறது.

## மேற்கோல் துணை நூல்கள்


1. சிலப்பதிகாரம், 1958, புலியூர்க் கேசிகன், சென்னை.
2. நுண்கலைகள், 2001, மயிலை சீனி வேங்கடசாமி.
3. துமிழர் வளர்த்த அழகுக் கலைகள், 200 மயிலை சீனி வேங்கட சாமி தமிழ் இலக்கியங்களில் கலைகள், 2006 தமிழய்யா வெளியீட்டகம்.
4. சிலப்பதிகார ஆய்வுரை, 2006, ம.பெ.சிவஞானம்.

# 6. தொடக்ககால மலேசியத் தமிழ்ப்புதினங்கள் தோட்டக்கொலை மர்மம் அல்லது பத்துமலைக்கள்வன் எனும் துப்பறியும் புதினம் ஓர் ஆய்வு

வே.சபாபதி
மலேசியா.

**முன்னுரை**

தமிழகத்திற்கு அப்பால் தமிழ் இலக்கியம் வளர்ந்துள்ள நாடுகளுள் மலேசியாவும் ஒன்று. மலேசிய மண்ணில் பத்தொன்பதாம் நூற்றாண்டில் இறுதிப்பகுதியிலேயே தமிழில் தொடக்கத்தில் இங்குத் தோன்றியது. இங்குப் புதினம் எழுந்த தொடக்ககாலப்பகுதியில் தமிழகத்தின் தமிழ்ப்புதினத்தின் அமைப்பை அடியொற்றி, தமிழக இலங்கைப் பின்னணியில் எழுதப்பட்டன. தமிழகத்திலிருந்தும் இலங்கையிலிருந்தும் வந்த குடியேறிகளே தொடக்கத்தில் புதினங்கள் எழுதும் முயற்சியல் ஈடுபட்டதால், அந்நாடுகளின் சார்புகளும் தாக்கங்களும் அவற்றில் காணப்பட்டன. எனவே, தொடக்கத்தில் தமிழகத்தைப்போலவே இங்கும் அறிவுறுத்தலையே முதன்மை நோக்கமாகக்கொண்டு புதினங்கள் எழுதப்பட்டன. தவிர, தமிழகத்தில் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் மேனாட்டின் தாக்கத்தினால் துப்பறியும் புதினங்கள் தழுவல்முறையில் பெருமளவில் வெளிவந்து, துப்பறியும் புதினங்களில் காலம் என வருணிக்கப்பட்ட ஒரு காலப்பகுதியில்தான் மலேசிய மண்ணில் புதினஇலக்கியம் கால்கொள்ளத் தொடங்கிற்று. அதனால் இங்கும் தழுவல் பானியில் துப்பறியும் போக்கும் மர்மப்பண்பும் மலேசியாவில் தொடக்ககாலப் புதினங்களில பரவலாக இடம்பெற்றுள்ளன.

இரத்தினமாலை அல்லது காணாமற்போன குமாரத்தி (1912) எனும் துப்பறியும் போக்கைக் கொண்ட ஒரு பத்திரிக்கைத் தொடர்மூலமாகவே புதினஇலக்கியம் இங்குக் கால்கொண்டது. எனினும் அப்பத்திரிக்கை நின்றுபோனாதால் இத்தொடர் முற்றுப்பெறாமல் போய்விட்டது. இதனையடுத்து,

1917 இல் வெளிவந்த கருணாகரன் அல்லது காதலின் மாட்சி எனும் புதினமும் துப்பறியும் போக்கைக்கொண்டதாகவே அமைந்துள்ளது. தமிழகத்தின் ஜமீன்தார் குடும்பத்தில் நிகழ்ந்த ஒரு முக்கோணக்காதல், அதனையொட்டி நிகழ்ந்த படுகொலை,அதனைத் துப்பறியும் துலக்குதல் என இப்புதினத்தின் கதைப்போக்கு அமைக்கப்பட்டுள்ளது. ஒரு யானையைக் கொன்று கமலாட்சியின் உயிரைக் காப்பாற்றுகிறான் கருணாகரன். இருவரும் காதல் வயப்படுகின்றனர். எனினும், அவளை மணமுடிக்க இயலாது தவிக்கின்றான். இந்நிலையில் கமலாட்சி, லட்சுமிநாராயணன் என்பவனுக்க நிச்சயிக்கப்படுகிறாள். அவளை அவன் மணம்புரியும் வேளையில் கருணாகரன் துப்பாக்கியுடன் மணமேடையில் தோன்றும் கட்டத்தில் மணமகன் சுடப்பட்டு இறக்கின்றான். இதனுடன் புதினத்தின் முதற்பாகம் முடிகிறது. சுட்டவனைக் கண்டுபிடிக்கும் விவரம் இரண்டாம் பாகத்தில் இடம்பெற்றுள்ளது. (தமிழாய்வு . சென்னைப்பல்கலைக்கழகம்,1981.பக்.28-29) ஆனால் , இரு பாகங்களால் ஆன இப்புதினம் இன்றுகிடைக்கப் பெறவில்லை.

## தோட்டக்கொலை மர்மம் அல்லது பத்துமலைக்கள்வன்

கருணாகரன் அல்லது காதலின் மாட்சி எனும் புதினத்திற்குப்பிறகு, மலேசியத் தமிழ்ப்புதினத்தின் வரலாற்றில் முழுமையாகக் காணக்கிடைக்கின்ற முதல் துப்பறியும் புதினம் என்ற சிறப்பு தோட்டக்கொலை மர்மம் அல்லது பத்துமலைக் கள்வன் எனும் நாவலுக்கே உரியது. இப்புதினம் கோ.பார்த்தசாரதி என்பவரால் 1932 இல் தமிழ் நேசன் நாளிதழில் தொடராக எழுதப்பட்டது. இவர் அப்பொழுது தமிழ் நேசன் நாளிதழின் உதவி ஆசியராக இருந்தார். இவர் தமிழ் நேசனின் தோற்றுநரும் ஆசிரியருமான கி.நரசிம்ம ஐயங்காரின் மைத்துனரும் ஆவார். இவர் இத்தொடரை 1932 மே மாதம் 11 ஆம் தேதி தொடங்கி 1932 ஆகஸ்ட் 3 ஆம் தேதி வரை எழுதினார். பின்னர் தமிழ் நேசன் பத்திரிக்கையின் அச்சகத்திலேயே இப்புதினம் அதே ஆண்டில் நூலுருவம் பெற்றது என்பது குறிப்பிடத்தக்கது. இனி, இப்புதினத்தின் சிறப்பும் தனித்தன்மையும் தொடர்ந்து விளக்கப்படவுள்ளன.

## புதினத்தின் தலைப்பும் துப்பறியும் போக்கும்

புதினத்தின் தலைப்பே இ∴து ஒரு துப்பறியும் கதை என்பதனை உணர்த்துகின்றது. புதினத்தின் முகவுரையில் இது ஒரு ருசிகரமான , நூதனத்

துப்பறியும் நாவல்' என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தமிழகத்தில் புதினங்களுக்கு இரட்டைப் பெயரிடும் மரபு காணப்பட்டது. இந்த இரட்டைப்பெயரிடும் மரபு மிகவும் செல்வாக்குப் பெற்ற ஒன்றாகவும் அக்காலப்பகுதியில் காணப்பட்டது. பொதுவாக, இந்த இரட்டைப்பெயர்கள் புதினங்களுக்கு அமைக்கப்பட்டன. இந்தத் தாக்கத்தைப் பின்பற்றியே இப்புதின ஆசிரியர் தம் படைப்பிற்கும் இரட்டைப் பெயரிட்டுள்ளார். தோட்டக்கொலை மர்மம் எனும் முதல்பாதித் தலைப்பானது முதன்மைக்கதையின் போக்கைச் சுட்டுவதாகவும் பத்துமலைக் கள்வன் எனும் பிற்பாதித் தலைப்பு முதன்மைமாந்தரின் பண்பை உணர்த்துவதாகவும் உள்ளது. இப்படைப்பின் ஆசிரியர் தமிழகத்தைச் சார்ந்தவராதலால், தமிழகத்தின் அன்றைய புதினங்களையும் தமிழகத்தின் அன்றைய புதினங்களையும் அவற்றின் போக்குகளையும் நன்கறிந்து வைத்துள்ளார் எனலாம். எனவே, தமிழகத்தில் அன்று மிகவும் செல்வாக்குப் பெற்றிருந்த துப்பறியும் போக்கினையே தம் படைப்பிற்கும் பயன்படுத்தியுள்ளார். எனவே தமிழகத்தில் காணப்பட்ட துப்பறியும் கருப்பொருள், இரட்டைப்பெயர் ஆகிய இயல்புகள் இப்புதினத்தில் காணப்படுவதில் வியப்பில்லை.

### நோக்கம்

வாசகர்களை மகிழ்வித்துப் பொழுதுபோக்குச் சுவை நல்குவதே இப்புதினத்தைப் படைத்துள்ளதில் கதாசிரியருக்கிருந்த தலையாய நோக்கம் ஆகும். அக்காலப்பகுதியில் மலேசியத்தமிழர்கள் தமிழகப் படைப்புகளையே மிகவும் விரும்பிப் படித்துள்ளனர். தவிர, அச்சமயத்தில் மிகவும் பரவலாக இருந்த துப்பறியும் புதினங்களில் அவர்கள் மிகுந்த அக்கறையும் ஈடுபாடும் காட்டியுள்ளனர். எனவே, அவர்களின் சுவாரசனைக்கும் தேவைக்கும் ஏற்ப இப்புதினத்தை ஒரு துப்பறியும் புதினமாகப் படைத்தும் அதேநேரத்தில் தாம் சார்ந்துள்ள இதழின் விற்பனையைப் பெருக்கும் நோக்கத்திற்காகவும் தாம் பணிபுரிந்த இதழிலேயே அதனை ஒரு தொடராகவும் வெளியிட்டார்.

தொடராக வெளிவந்தாலும் துப்பறியும் புதினங்களுக்கே உரிய இயல்புகள் சிறப்புடன் இதில் கையாளப்பட்டுள்ளன. துப்பறியும் புதினங்களுக்கே உரியதான திடுக்கிடும் சம்பவங்கள் ,மர்மம், விறுவிறுப்பு ஆகியன சிறிதும் குறையாமல் இப்புதினம் படைக்கப்பட்டுள்ளது. தொடர்கதை

அமைப்புமுறையும் இதழியல் உத்திகளும் துப்பறியும் புதின இயல்புகளுக்கு எவ்வகையிலும் பாதிப்பினை ஏற்படுத்தவில்லை. மாறாக துப்பறியும் புதினத்தின் இயல்புகள் சிறப்பாக அமையும் வகையில் தொடர்கதையின் அமைப்புமுறையும் இதழியல் உத்திகளையும் கதாசிரியர் நன்கு பயன்படுத்திக் கொண்டுள்ளதைக் காணமுடிகிறது. எனவே, வாசகர்களுக்கு விறுவிறுப்பையும் ஆர்வத்தையும் தூண்டும் வகையில் துப்பறியும் இயல்புகள் இப்புதினத்தில் இடம்பெற்றுள்ளன.

## கதையும் கதைப்பின்னலும்

பொதுவாகத் துப்பறியும் புதினங்களில் மர்மமுடிச்சுகளும் புதிர்களும் நிறைந்த காணப்படும். கதையின் இறுதியில், கதைமாந்தர்களுள் ஒருவராலோ பலராலோ முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு அவை அவிழ்க்கப்பட்டுத் தெரிவிக்கப்படும். அதற்கேற்ப இப்புதினத்திலும் கொலை,கொள்ளை போன்ற குற்றங்கள் இழைத்தவர்களைத் தனிமனிதர் ஒருவரின் சாமர்த்தியத்தால் துப்புத்துலக்கிக் கண்டுபிடிப்பதுதான் கருப்பொருளாக அமைக்கப்பட்டுள்ளது. கதையின் சிக்கல்கள் மர்மங்கள், புதிர்கள் போன்ற திருப்பங்களைத் துப்பறிந்தவர் விளக்குவதோடு கதை முடிவடைகிறது. அதேபோன்று துப்பறியும் புதினங்களில் வசதியடைந்த குடும்பங்களின் சிக்கல்களே மிகுதியும் கையாளப்படும். பணவசதி பெருத்த குடும்பங்களில் பெரும்பாலும் சூது, சதி,வஞ்சம் போன்றவற்றுக்கு அதிகம் வாய்ப்புகள் உள்ளன. அதற்கேற்ப இப்புதினத்திலும் பணக்காரக் கிரானியார், தமிழக ஜமீன்தார் ஆகிய வசதிகள் கொண்ட இரு முக்கியமாந்தர்களை மையமாகக்கொண்டு கதைநிகழ்ச்சிகள் பின்னப்பட்டுள்ளன.

பொன்னம்பலம் எனும் கிரானியார் கோலாலும்பூருக்கு அருகில் அமைந்துள்ள பத்துமலையில் சகலவசதிகளும் கூடிய தோட்டமொன்றை அமைத்து வாழ்ந்து வருகின்றனர். தமக்குப் பிடித்தவர்களை மட்டுமே அத்தோட்டத்து வீடுகளில் வாடகைக்குக் குடியிருக்க அனுமதிக்கின்றார். உண்மையில் கிராணியார் பெரும் கொலைகாரனும் கொள்கைக்காரனும் ஆவார். அவர் தம் கையாட்களுடன் பலரைக் கொலை செய்தும் அவர்களின் சொத்துக்களைக் கவர்ந்தும்,பெரும் பணக்காரர் ஆகின்றார். ஒருமுறை கோலாலும்பூருக்கு வந்த ரெங்கநாத முதலியார் எனும் தமிழக ஜமீன்தாரைப்

பிணையாகப் பிடித்துக்கொண்டு அவருடைய தமையனார் மகள் குணவல்லி தமிழகத்திலிருந்து மலாயா வருகிறாள். இங்கு மலாயாவில் அவளுக்குப் பிரபலத் துப்பறியும் நிபுணர் பால் நியூட்டன் உதவுகிறார். அவர் இதுகுறித்துத் துப்பறிந்து. கொடியவர்களைப் பல இடங்களிலும் தேடிப்பிடித்து ஜமீன்தாரை மீட்பதுதான் இப்புதினத்தில் மீதக்கதையாகும்.

தொடக்கால மலேசியத் தமிழ்ப்புதினங்களுள் இப்புதினம் ஒன்றில் மட்டுமே கதைப்பின்னல் ( ) சிறந்து விளக்குவதாக மலேசியத் தமிழ்ப்புதினத்தின் ஆய்வுகள் காட்டுகின்றன. (வே.சபாபதி. விடுதலைக்க முந்திய மலேசியத் தமிழ் நாவல்கள், 1996.பக்.65) புதினத்தின் கதைப்பின்னலைச் செறிவிழக்கச்செய்யும் தேவையற்ற பொருத்தமற்ற, தொடர்பற்ற, கட்டுக்கோப்பற்ற நிகழ்ச்சிகள் எதுவும் இப்புதினத்தில் காணப்படவில்லை. இ∴து இப்புதினத்தின் கதைப்பின்னலுக்கு ஏற்ற வலுவையும் இறுக்கத்தையும் செறிவையும் இ∴து இப்புதினத்தின் காணப்படவில்லை. இ∴து இப்புதினத்தின் கதைப்பின்னலுக்கு ஏற்ற வலுவையும் இறுக்கத்தையும் செறிவையும், தந்து சிறக்கச் செய்துள்ளது. இப்புதினத்தின் கதைநிகழ்ச்சிகள் யாவும் தேவைக்கேற்பவே படைக்கப்பட்டுள்ளன. அவை ஒன்றையொன்று காரணகாரிய அடிப்படையில் அமைந்துள்ளதோடு, ஒன்றின் முடிவு மற்றொன்றாய்த் திகழ்வதாகவும், அமைந்துள்ளதாலும் இப்புதினத்தின் கதைப்பின்னல் செறிவுப்பின்னலாக அமைந்துள்ளது. கதைநிகழ்ச்சிகளில் இயைபுத்தன்மை, திருப்பங்கள்கொண்ட நன்மை ஆகியவற்றைக் காணமுடிகிறது. இந்நிகழ்ச்சிகளில் மர்மங்களும் திருப்பங்களும் காணப்பட்டாலும், அவை நம்பும்வகையில் அமைந்துள்ளதனையும் காணமுடிகிறது. இதற்குப் பொன்னம்பலக் கிராணியார், துப்பறியும் நிபுணர்பால் நியூட்டன், குணவல்லி ஆகியோரை தொடர்புடைய கதைநிகழ்ச்சிகளைக் குறிப்பிடலாம்.

இப்புதினத்தின் கதை வருணனையோடு தொடங்குகிறது. "கோலாலும்பூருக்குச் சுமார் எட்டு மைல் வடக்கே பத்துமலை எனும் குன்றொற்றிருக்கிறது. மிகப்பெரிய குகைகள் அதிலுண்டு".(ப.1) என்று தொடங்கி சுமார் ஒன்றரை பக்க அளவில் பத்துமலைத் தோட்டத்தின் அமைப்பும் வருணிக்கப்பட்டுள்ளது. இந்த ஓரிரு இடங்களில் மட்டுமே நீண்ட

வருணனையைக் காணமுடிகின்றது. கதை முழுவதும் நிகழ்ச்சிகளாகவே காட்டப்பட்டுள்ளன. துப்பறியும் போக்குக்கொண்ட இப்புதினத்தைத் தொடர்ந்து படிப்பதற்கு ஏற்ற விறுவிறுப்பையும் ஆர்வத்தையும் இந்நிகழ்ச்சிகள் வாசகர்களுக்கு ஏற்படுத்தித் தந்துள்ளன. கதையில் ஏற்படுத்தப்பட்டுள்ள இந்த விறுவிறுப்பும் ஆர்வநிலையும் கதையில் இறுதிவரை காக்கப்பட்டுள்ளதானது.இப்புதினத்திற்கு மேலும் சிறப்பைச் சேர்ந்துள்ளது.

## கருப்பொருள்

நன்மை செய்வதன் நன்மையையும் தீமை செய்தவன் தண்டனையும் அடைவான். அறம் வெல்லும், பாவம் தோற்றுத் தண்டனை அடையும். உண்மை என்றும் அழியாது எனும் மரபுசார்ந்த நீதிகளே கருப்பொருளாக ஒருநாள் பிடிபடுவான் எனும் முதுமொழிக்கான விளக்கமே புதினத்தின் கருப்பொருளாக வந்துள்ளது. தீயவர்கள் எவ்வளவுதான் புத்திசாதுரியத்தோடு தம் செயல்களைத் திட்டமிட்டு நகர்த்தினாலும் இறுதியில் தோல்வியுற்று துன்புற்றுப் பழியொடு ஒழிந்தே போவார் என்பது கதைநிகழ்ச்சிகளின்வழி படிப்படியாகக் காட்டப்பட்டுள்ளன. அதர்மத்தின் வழியில் செல்பவனை இயற்கையும் ஆதரிக்காது என்பது பொன்னம்பலக் கிராணியின் மரணத்தின் வாயிலாக விளக்கப்பட்டுள்ளது. அவர் தப்பிச்செல்வதற்காக முயலும்போது மாடியிலிருந்து தவறி விழுந்து தம் உயிரை விடுகின்றார். இஃது இயற்கை அவருக்கு அளித்த தண்டனையாகவே படுகின்றது. தீயவழி தொடக்கத்தில் நன்மை தருவது போலத் தோன்றினாலும் இறுதியில் தோற்று தண்டனைக்கு ஆளாக்கிவிடும் என்பது பொன்னம்பலக் கிராணியார் மூலம் நன்கு விளக்கிக் காட்டப்பட்டுள்ளது. உண்மையைக் கண்டுபிடித்து வெளிப்படுத்த முயலும் துப்பறியும் நிபுணர் பால் நியூட்டனுக்கு அடுக்கடுக்காக ஆபத்துகளும் துன்பங்களும் குறுக்கிட்டு கதைமுழுவதும் அவை தொடங்குகின்றன. எனினும் இறுதியில் அவர் வெற்றி பெறுகின்றார். இஃது உண்மைக்கு எப்பொழுதுமே சோதனைக்ள் ஏற்படும். இறுதியில் உண்மை வென்றே தீரும் எனும் பேருண்மையை உணர்த்துகின்றது.

## துப்பறியும் புதின உத்திகள்

துப்பறியும் புதினங்களில் பொதுவாகக் காணப்பட்ட வேண்டிய தலையாய உத்தி ஆர்வநிலை ஆகும். கதை சுவைகுன்றாமல் இருப்பதற்கும்

பரபரப்புடனும் விறுவிறுப்படனும் கொண்டு செல்வதற்கும் இவ்வுத்தி பெரிதும் உதவுகின்றது. மேலும், வாசர்களுக்குக் கதையில் அடுத்து என்ன நிகழப்போகின்றது. இதற்கொல்லாம் கர்த்தா் யாா் அறியும் ஆர்வநாட்டத்தைத் தூண்டி கதையைத் தொடர்ந்து படிக்கவைக்கவும் ஒன்றவைக்கவும் இவ்வுத்தி உதவுகின்றது. ஆகவே இவ்வுத்தியானது துப்பறியும் புதினங்களில் தவறாது தோற்றுவிக்கப்பட வேண்டிய அடிப்படைப்பண்பு ஆகும். இப்புதினங்களில் இவ்வுத்தியானது கதாசிரியரால் கதையின் தொடக்கத்திலிருந்து இறுதிவரை சிறப்பாகப் பயன்படுத்தப் பட்டுள்ளதைக் காணமுடிகின்றது. இதனால் இக்கதையைப் படிக்கும் வாசகர்களுக்கு அடுத்தது என்ன எனும் பரபரப்பு தொற்றிக் கொள்கிறது. எடுத்துகாட்டாக, கதையில் நிகழும் கொலைகளைச் செய்தவர் யாா்? குணவல்லியை யாருமறியாது தொடரும் ஆசாமி யாா்? ஜமீன்தாரின் சொத்துக்களுக்கு உரியமை கொண்டாடிக்கொண்டு திடீரென்று தோன்றும் ராமச்சந்திரன் யாா்? போன்றவை கதையில் ஆர்வநிலையோடு வளர்த்துச் சொல்லப்பட்டுள்ளன. தவிர, ஒவ்வொரு அத்தியாயத்திற்கும் வைக்கப்பட்டுள்ள தலைப்புகளும் வாசகர்களின் ஆர்வத்தைத் தூண்டும் வகையில் உள்ளன. கொலை செய்தது யாா் (பக்.1) விபரீதக் கடிதம் (ப.5) கறுப்பு சலூன் மோட்டாரின் ரகசியம் (ப.8) நள்ளிரவில் நடந்த சம்பவம்(ப.23) குணவல்லியைக் காணோம் (ப.51) போன்ற தலைப்புகள் துப்பறியும் புதினங்களுக்கே உரிய நிலையில் இடப்பட்டுள்ளன. அதுபோன்றே ஒவ்வொரு அத்தியாய இறுதியும் விறுவிறுப்போடு முடிக்கப்பட்டுள்ளது.

*குண்டு நடுநெற்றியில் பாய்ந்திருந்தது. நெற்றியில்*
*வெடிமருந்துக்காரியும்*
*கொஞ்சமிருந்தது. டாக்டரைத்தேட வேண்டிய அவசியம்*
*இல்லை. கூட்டை விட்டு*
*ஆவிபிரிந்து விட்டது. (ப.25)*

இது போன்ற அத்தியாய முடிவுகள் புதினத்தில் காணப்படுகின்றன. இவை வாசகர்கள் அடுத்து அத்தியாயத்தை ஆவலுடன் எதிர்பார்க்கும் நிலையினை ஏற்படுத்தியுள்ளன.

**கதைமாந்தர்**

குற்றமற்ற கதைத்தலைவன் கதைத்தலைவி கொலைகார வில்லன். கொடுமை செய்யும் பெற்றோர் ஆர்ப்பரிக்கும் கொள்ளைக் கூட்டம் , சளசளவென்று பேசும் வேலைக்காரர்கள் ஆகியோர் இத்துப்பரியும் நாவல்கள் அனைத்திலும் காணப்படும் மாந்தர்கள் " என்று டாக்டர் இரா.தண்டாயுதம் கூறுவதற்கேற்பவே இப்புதினத்தில் கதைமாந்தர்கள் படைக்கப்பட்டுள்ளனர். (இரா.தண்டாயுதம் , தமிழில் சமூக நாவல்கள்.1979.பக்.228-229) தொடக்கக்காலத் தமிழ்ப்புதினங்களில் கதைமாந்தர்கள் முழுக்கமுழுக்க நல்லவர்களாகவோ தீயவர்களாகவோ படைக்கப்பட்டிருப்பிலும் காணப்படுகின்றது. இப்புதினத்தில் வரும் பொன்னம்பலக் கிராணியார் மிகக் கொடியவராகக் காட்டப்பட்டுள்ளார். அவர் இறுதிவரை தம் போக்கில் மாறாமல் ஒருநிலைக் கதைமாந்தராகவே உள்ளார். துப்பறியும் நிபுணர் பால் நியூட்டன் குணவல்லி போன்றோர் முழுக்க நல்லவர்களாகப் படைக்கப்பட்டுள்ளனர். எனினும், இக்கதைமாந்தர்கள் நடைமுறை வாழ்க்கையில் உள்ளவர்களை ஒத்தே படைக்கப்பட்டுள்ளனர். ஆயினும், இவர்கள் போதிய வளர்ச்சியின்றி ஒருநிலை மாந்தர்களாகக் காட்சியளிக்கின்றார்.

**ஆசிரியர் குறுக்கீடு**

கதாசிரியர் கதையில் நேரடியாகக் குறுக்கிட்டு, வெளிப்படையாக வாசகர்களை விளித்துப் பேசுவது, தம் கருத்தைக் கூறுவது ஆசிரியர் குறுக்கீடு எனப்படும். தொடக்ககால தமிழ்ப்புதினங்களில் ஆசிரியர் குறுக்கீடானது பரவலாகக் காணப்படுகின்றது. தொடக்கக்காலத்தில் கருத்துக்கூறுவதற்குரிய ஓர் உத்தியாகக் கருதப்பட்டது. இத்தகைய குறுக்கீடு வாசகர்களிடையே கதைச்சுவையைக் குறைத்துச் சலிப்பூட்டுவதுடன் கதை வளர்ச்சியையும் தடைப்படுத்துவதால் இன்று இந்த ஆசிரியர் குறுக்கீடு ஒரு குறையாகவே கருதப்படுகின்றது. இப்புதினத்திலும் ஆசிரியர் குறுக்கீடுகள் காணப்படுகின்றன.

"27 ஆம் நம்பர் வீட்டுக்குள் புகுந்தவனே ராமச்சந்திர முதலியென்ற பெயருடையவனென்பதை நாம் சொல்லாமலே வாசகர்கள் ஊகித்துக் கொள்ளலாம். (ப.45) பொதுவாக, இக்காலப்பகுதியில் தோன்றியுள்ள மிகுதியான தமிழ்ப்புதினங்களில் வாசகர்களை மகிழ்விப்பதற்காக புதினக்கதைக்குப் பொருத்தமற்ற, தேவையற்ற வருணனைகள்,

கிளைக்கதைகள், அறவுரைகள் போன்றவற்றைக் கதாசிரியர்கள் பயன்படுத்தியுள்ளதை ஆய்வுகள் காட்டுகின்றன. (விடுதலைக்கு முந்திய மலேசியத் தமிழ் நாவல்கள் ப.67) ஆனால், அத்தகையவை இப்புதினத்தில் காணப்படவில்லை.

## காலக்குறிப்பும் சமகால நிகழ்வுகளும்

இப்புதினத்தின் கதைக்குக் கதாசிரியர் தேர்ந்தெடுத்துக்கொண்ட காலப்பகுதி இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதி ஆகும். குறிப்பாக இருபதாம் நூற்றாண்டின் இருபதுகளும் முப்பதுகளும் ஆகும். இந்துக் காலக்குறிப்பைக் கதாசிரியர் கதைப்போக்கில் குறிப்பிட்டுச் சென்றுள்ளார்.

> *1902 இல் மோசடிக்காக 5 வருடம் பொய்க்கையெழுத்துச் செய்ததற்காக 1909 இல் 6 வருடம் .1920 இல் பத்து ஆறாங் கொள்ளைக்கேசில் சம்பந்தப்பட்டதாகச் சந்தேகிக்கப்பட்டது. ஆனால் போதிய ருஜீவில்லாததால் விடப்பட்டது. அதற்குப் பின் போனவிடம் தெரியவில்லை.(ப.21)*

இப்புதினத்தில் சமகாலச் சம்பவங்கள் கதைப்போக்கில் காட்டிச் செல்லப்பட்டுள்ளன. அன்றைய சமுதாய வரலாற்றை ஓரளவிற்கு அறிந்துகொள்ள அவை துணைசெய்கின்றன. அவற்றுள் இருபதாம் நூற்றாண்டின் இருபதுகளிலும் முப்பதுகளிலும் அன்றைய மலாயாவின் பொருளதாராம் மிகவும் வீழ்ச்சி கண்டு பாதிப்படைத்திருந்ததும் ஒன்றாகும். அப்போது நாட்டின் முக்கிய விளைபொருள்களாயிருந்த ரப்பர். ஈயம் ஆகியவற்றின் விலை படுவீழ்ச்சி கண்டிருந்தது. அதனால் நாட்டின் அனைத்துலக வணிகம் பெருமளவிற்குப் பாதித்திருந்தது. இவ்வரலாற்றச் செய்தி கதைப்போக்கில் காட்டப்பட்டுள்ளது.

சானிடரி போர்டாரின் கவனம் அவ்விடத்தில் அதிகம் செலுத்தப் படுவதில்லை. ஏனென்றால் வியாபார வீழ்ச்சிக் காலத்தில் அது மிக வரும்படிக் குறைவான இடமாதலால் அசிரத்தை செய்யப்படுவதிலாச்சரியமொன்றுமில்லை.

## நாவலின் மொழிநடை

இக்கதாசிரியர் வடமொழிச் சொற்கள். ஆங்கிலச் சொற்கள் ஆகியன கலந்த ஒருவித கலப்பு மொழிநடையினைக் கதை கூறுவதற்குப்

பயன்படுத்தியுள்ளார். உரையாடல்கள் இனியநடையில் எளிமையாகப் புரிந்துகொள்ளும் வகையில் அமைக்கப்பட்டுள்ளன. அவை அன்றாட வாழ்வில் கேட்கும் பேச்சுகளாகவே அமைக்கப்பட்டுள்ளன.

நல்லூர் தோட்டம் ஒரு நிம்மதியான இடத்திலுள்ளது. அதற்கேற்படியாகவே பொன்னம்பலக் கிராணியார் அங்குக் குடியிருப்பவரைத் தேர்ந்து பொறுக்கியெடுத்துள்ளார். கிராணியார் மனதுக்கினியாக் காரணத்தாலேயே பலர் வீடு பெற முயன்றும் அங்கு வீடு கொடுக்கப்பட முடியாதென மறுக்கப்பட்டு விட்டனர். மற்றவிடங்களைவிட அங்கு வாடகை சற்று அதிகமானதுதான். ஏனெனில் அங்குச் சகலவித சௌகரியங்களுக்கும் ஒருங்கேயமையப் பெற்றிருந்தன. கிராணியார் தமக்கு ஏஜெண்டுகளெவரையும் நியமிக்காமல் தாமே நேரில் மாதா மாதம் வாடகை வசூலித்து வந்தார். (ப.2).

## முடிவுரை

துப்பறியும் புதினமான இது மேனாட்டுத் தழுவல்முறையில் கதையைக் கொண்டிருந்தாலும் இந்நாட்டின் சூழ்நிலைகளை நிலைக்களமாகக் கொண்டிருந்தமையால் அன்றைய சமுதாயத்தில் சில அம்சங்களை அறிந்துகொள்ள முடிகின்றது. அதனால் அன்றைய மலேசியத் தமிழ்ச் சமுதாய வரலாற்றை ஓரளவு அறிந்துகொள்வதற்கு இப்புதினம் உதவுகின்றது. தொடக்கக்கால மலேசியத் தமிழ்ப்புதினங்களுள் இப்புதினம் ஒன்றில் மட்டும்தான் சிறந்த முறையில் கதையமைப்பு கதைப்பின்னல், கட்டுக்கோப்பு, கதைமாந்தர்படைப்பு, உத்திகளின் பயன்பாடு போன்ற கூறுகள் சிறப்பாக அமைந்துள்ளன. அவ்வகையில் இப்புதினம் மலேசியத் தமிழ்ப்புதின இலக்கியத்திற்குச் சிறப்பைச் சேர்க்கின்றது.

# 7. மலேசியாவில் தமிழ்மொழியின் நிகழ்நிலை ஒரு கண்ணோட்டம்

**முனைவர் சாமிக்கண்ணு ஜெபமணி**
**ஈசாக்கு சாமுவேல்**
விரிவுரையாளர்,
சுல்தான் இட்ரிஸ் பல்கலைக்கழகம்,
மலேசியா .

## முன்னுரை

பழந்தமிழருக்குத் தென்கிழக்கு ஆசியப் பகுதியுடன் 2500 ஆண்டுகளுக்கு முன்பிருந்தே தொடர்பு இருந்து வந்திருந்தாலும், ஆங்கிலேயர்கள் பினாங்குத்தீவை 1786 இல் வசம் கொண்டு வந்த பின்னரே அதிகமான தமிழர்களை மலாயாவிற்குக் கொண்டுவரப்பட்டனர். 1840 ஆம் ஆண்டுகளில் கரும்பு, காப்பித் தோட்டங்களில் வேலை செய்வதற்கு இந்தியத்தொழிலாளர்களை மலாயாவிற்கு ஆங்கிலேயர்கள் கொண்டுவந்தனர். 1890 ஆம் ஆண்டுகளில் ரப்பர் தோட்டங்களில் வேலை செய்வதற்கு அதிகமான இந்தியத் தொழிலாளர்கள் கொண்டுவரப்பட்டனர். 1901 ஆம் ஆண்டில் 115,532 இநதியர்கள் மலாயாவில் வாழ்ந்ததாகக் குறிப்புகள் காட்டுகின்றன (Sandru.K.S.Indians in Malaya imigratuin and settlement 1786-1957.University of Cambridge.1969.p.50). மலேசியாவில் தற்போது ஏறத்தாழ 20 இலட்சம் இந்தியர்கள் வாழ்கின்றனர். இவர்களில் 85 விழுக்காட்டு மக்கள் தமிழர்களாவார்கள். இவர்கள் பேசும் தமிழ்மொழியின் நிகழ்நிலை மலேசியாவில் எவ்வாறு இருக்கிறது என்பதை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கம்.

## மலேசியாவில் பேச்சுத் தமிழ்

தமிழ்மொழி வாழ்ந்து கொண்டிருக்கும் நாடுகளில் மலேசியாவும் ஒன்றாகக் கருதப்படுகிறது. இங்குப் பேச்சுத் தமிழும் எழுத்துத்தமிழும்

வளம்பெற்றுத் திகழ்கின்றது. மலேசியாவில் தமிழ் பேசுகின்றவர்களை நான்கு வகையாகப் பிரிக்கலாம். முதல் வகையினர் பிறமொழிக் கலப்பில்லாத தனித்தமிழ்ப் பேசுவோர். இப்பிரிவினர் தமிழ்ப் பேசும் சமஸ்கிருதம், ஆங்கிலம், மலாய் ஆகிய மொழிச் சொற்களைக் கலக்காமல் தூய தமிழில் பேசுகிறார்கள். இரண்டாவது வகையினர் பேச்சு வழக்கில் இயல்பாகக் கலந்துவிட்ட சொற்களைப் புறக்கணிக்காமல் கூடியவரை நல்ல தமிழில் பேசுவோர். இவர்கள் பன்மொழிச் சூழலில் கலந்துவிட்ட பிறமொழிச் சொற்களையும் கலந்து இயல்பாகப் பேசுபவர்களாக இருக்கிறார்கள். மூன்றாவது வகையினர் சொல்ல வந்த கருத்தை வெளிப்படுத்தினால் சரி என்னும் நோக்கத்தோடு மலாய், ஆங்கிலச் சொற்களைக் கலந்து பேசுவோர். இவர்கள் அடிப்படை கல்வியைத் தமிழில் பெறாதவர்கள். நான்காவது பிரிவினர் திரைப்படம் மற்றும் சின்னத்திரைகளில் பேசும் முறையைப் பின்பற்றிப் பேசுவோர். இவர்கள் மிகுதியாகத் திரைப்படம், சின்னத்திரை ஆகியவற்றைப் பார்க்கின்றவர்களாக இருப்பவர்கள் (முரசு நெடுமாறன். மலேசியத் தமிழரும் தமிழும். உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம். சென்னை. 2007.பக்120-121)

## மலேசியாவில் எழுத்துத்தமிழ்

மலேசியாவில் தொடக்க கல்வியைத் தமிழ்மொழியில் கற்கும் வாய்ப்பும், இடைநிலைப் பள்ளியிலும் உயர்க்கல்விக் கூடங்களிலும், தமிழ்மொழி கற்கும் வாய்ப்பும் இருப்பதால் எழுத்துத்தமிழ் வளம்பெற்றுக் காணப்படுகிறது. 1887 ஆம் ஆண்டு சதாசிவ பண்டிதர் இயற்றி வெளியிட்டுள்ள வண்ணை அந்தாதி , வண்ணை நகர் ஊஞ்சல், சிங்கை நகர் அந்தாதி, சித்திர கவிதைகள் ஆகிய சிற்றிலக்கிய நூல்கள் அடங்கிய கவிதை தொகுப்பு நூலிலிருந்து மலேசியத் தமிழ் இலக்கிய வரலாறு தொடங்குகிறது (முரசு நெடுமாறன், மலேசியத் தமிழ்க் கவிதைகள் 1960-1995.புதுவை பல்கலைக்கழகம்.2001.ப.154). கவிதை இலக்கியத்தைத் தவிர்த்து சிறுகதை, நாவல், நாடகம், காவியம், கட்டுரை போன்ற இலக்கியப் படைப்புகளும் படைக்கப்பட்டு நூல் வடிவம் பெற்றுள்ளன. தற்போது 120 ஆண்டுகள் வரலாற்றைக் கொண்ட மலேசியத் தமிழ் இலக்கியம் தொடர்ந்து வளர்ந்து வருகிறது.

**மலேசியத் தொடக்கப் பள்ளிகளில் தமிழ்க்கல்வி**

1816 ஆம் ஆண்டு பினாங்கு மாநிலத்தில் பினாங்கு இலவசப் பள்ளித் தொடங்கப்பட்டபோதே தமிழ்மொழிக் கற்பிக்கப்பட்டுள்ளதென்று வரலாறு காட்டுகின்றது. 1902 ஆம் ஆண்டு முதலே ஆங்கிலேய அரசு தோட்டங்களிலும் நகர்ப்புறங்களிலும் தமிழ்ப்பள்ளித் தொடக்கம் காண்பதற்கு ஊக்குவிப்பு வழங்கியுள்ளது. 1912 ஆம் ஆண்டு இயற்றப்பட்ட தொழிலாளர் சட்டத்தின் கீழ், ஒரு தோட்த்தில் ஏழு முதல் பத்து அகவை வரையிலான மாணவர் பதின்மர் இருந்தால் , ஒரு தமிழ்ப்பள்ளி அமைக்கப்பட வேண்டுமென்ற சட்டம் இயற்றப்பட்டதால் நாட்டில் மிகுதியான தமிழப்பள்ளிகள் உருவாக்கப்பட்டன இதன் வழி மலாயாவில் தமிழ்க்கல்வி வளர்ச்சிக்கண்டது (Pual Chang Ming Phang . Perkembangam Pelajaran Dalam Masyarakat Berbiling Kaum , Dewan Bahasadan Pustaka,KL.1975.him.21-22).

மலேசியத் தமிழ்க்கல்வி வரலாற்றில், தொடக்கக் காலத்தில் தமிழ்க்கல்வி ஒன்று முதல் நான்கு வகுப்புக்களாக மட்டுமே இருந்தது. இதனைத் தொடர்ந்து தமிழ்க்கல்வி 1920 ஆம் ஆண்டுகளில் ஐந்தாம் வகுப்பு வரையும், 1930 ஆம் ஆண்டுகளில் ஆறாம் வகுப்பு வரையும் உயர்வு பெற்றது. பின் 1946 ஆம் ஆண்டு முதல் முறையாக ஏழாம் வகுப்புத் தொடங்கப்பட்டது. உயர்த்தரத் தமிழ்க்கல்வி என்னும் முறையிலும் தரமான ஆசிரியர்களை உருவாக்கும் நோக்கில் தமிழில் ஏழாம் வகுப்புத் தொடங்கப்பெற்றது. இவ்வகுப்பில், தமிழ்மொழி நிலநூல், வரலாறு, நலக்கல்வி ஆகிய பாடங்கள் கற்பிக்கப்பட்டன. பாடத்திட்டம் பாடநூல் யாவும் தமிழ்நாட்டைச் சேர்ந்தவையாகும். இவ்வகுப்பில் பயிலும் மாணவர்கள் ஈராண்டுப் பயின்று தேர்வு எழுதவேண்டும். ஆசிரியர் ஆயத்தத் தேர்வென அழைக்கப்பெற்ற இவ்வகுப்பு, தரமான ஆசிரியர்கள் உருவாக அடிப்படையாக அமைந்தது(முரசு நெடுமாறன், மலேசியத் தமிழரும் தமிழும், உலகத் தமிழராய்ச்சி நிறுவனம், சென்னை. 2007.ப.139).1956 ஆம் ஆண்டு வெளியிடப்பட்ட ரசாக் அறிக்கையில் தமிழ்மொழிக்குத் தேசிய ஒப்புதலும் பாதுகாப்பும் தொடக்கப் பள்ளிகளில் பயிற்று மொழித் தகுதியும் வழங்கப்பட்டுள்ளது. இவ்வறிக்கை 1957 ஆம் ஆண்டுக் கல்விச் சட்டமாக ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளது. (மேலது.ப.146)

தற்போது மலேசியாவில் 523 தமிழ்ப் பள்ளிகளில் செயபடுகின்றன. இப்பள்ளிகளில் ஒரு லட்சத்திற்கும் மேற்பட்ட மாணவர்கள் தமிழ்ப் பயில்கின்றனர். மலாய் மொழி, ஆங்கில மொழி, தவிர்த்து மற்ற எல்லாப் பாடங்களும் தமிழ்மொழியிலேயே கற்பிக்கப்படுகின்றன. 2003 ஆம் ஆண்டு அறிவியல், கணிதப் பாடங்கள் முதலாம் ஆண்டு தொடங்கிப் படிப்படியாக ஆங்கிலத்தில் கற்பிக்கப்படும் என்று அரசுக் கொள்கை வகுத்திருந்தது. ஆனாலும் இத்திட்டம் எதிர்ப்பார்த்த வெற்றியைத் தராததால் 2012 ஆம் ஆண்டு முதல் இவ்விருபாடங்களும் மீண்டும் தாய்மொழிகளிலேயே கற்பிக்கப்படும் என்று அரசு அறிவித்துள்ளது. இது தமிழ்மொழிக்குக் கிடைத்த வெற்றியாகும்.

மேலும் 47 விழுக்காட்டு இந்திய மாணவர்கள் மலாய்ப் பள்ளிகளில் தொடக்கக் கல்வியைப் பயில்கின்றனர். இவர்கள் மூன்றாம் ஆண்டு பயிலுகின்ற போது இவர்களின் பெற்றோர்களில் பதினைந்து பேர் எழுத்துமூலம் கேட்டுக்கொண்டால் தமிழ்மொழிக் கற்பிக்கப்படும் என்று 1961 ஆம் ஆண்டின் கல்விச் சட்டத்தில் சட்டமாக்கியுள்ளது. இவ்வகுப்புகள் பள்ளிக் கால அட்டவணைக்கு வெளியில் பகுதி நேர ஆசிரியர்களைக் கொண்டு நடைபெறுவதால் தமிழ்மொழிக் கற்றல் கற்பித்தல நடவடிக்கைகள் சிறப்பாக நடைபெற முடியாத நிலையைக் காணமுடிகிறது.

மலாய்ப் பள்ளிகளை வலுப்படுத்தும் நோக்குடன் கடந்த 2006 முதல் அரசாங்கம் முதலாம் ஆண்டிலேயே படிப்படியாகத் தமிழ்மொழியை அறிமுகம் செய்து வருகிறது. இவ்வகுப்புகளும் பள்ளிக் கால அட்டவணைக்கு வெளியிலும் சனிக்கிழமைகளிலும் நடத்தப்படுவதால் எதிர்ப்பார்த்த வெற்றியை அடையவில்லை.

## மலேசிய இடைநிலைப்பள்ளிகளில் தமிழ்க்கல்வி

ஜப்பானியர் ஆட்சிக் காலத்திற்கு முன் வரை மலாயாவில் இரண்டு வகையான இடைநிலைப்பள்ளிகள் இருந்ததாக அறிய முடிகிறது. முதல் வகை இடைநிலைப்பள்ளிகளில் ஆங்கில மொழியைப் பயிற்று மொழியாகவும் இரண்டாவது வகை இடைநிலைப்பள்ளிகளில் சீன மொழியைப் பயிற்று மொழியாகவும் கொண்டதாகவும் இருந்திருக்கிறது. ஜப்பானியர் ஆட்சிக்

காலத்திற்குப் பின் மீண்டும் ஆட்சி அமைத்த ஆங்கிலேயர்கள் மலேயன் யூனியன் கீழ், சீசுமன் கல்வித் திட்டத்தை வெளியிட்டனர். 1945 முதல் 1949 வரை வெளியிடப்பட்ட சீசுமன் கல்வித்திட்டத்தின் வழி இரண்டு வகை இடைநிலைப்பள்ளிகள் உருவாக்கப்பட்டன. முதல்வகைப் பள்ளிகளில், ஆங்கிலமொழி முதன்மை மொழியாகவும், தாய்மொழி ஒரு பாடமாகவும் கற்பிக்கப்படும் இரண்டாவது வகை இடைநிலைப் பள்ளியில், தாய்மொழி முதன்மைப் பாடமாகவும் ஆங்கிலம் இரண்டாம் பாடமாகவும் கற்பிக்கப்படும். ஆனாலும் மலாய்க்காரர்கள் மலேயன் யூனியனை ஏற்றுக் கொள்ளாததாலும் ஆங்கிலேயர்கள் ஜப்பானியர் ஆட்சிக் காலத்தில் சேதப்பட்டப் பள்ளிகளை மறுசீரமைப்புச் செய்வதில் கவனம் செலுத்தியதாலும் இக்கல்வித் திட்டம் செயல்படுத்த முடியாமலேயே போனது (Pual Chang Ming Phang.op.cit.p.46). இக்காலக்கட்டம் வரை மலாயாவில் தமிழ்க்கல்வி கற்ற மாணவர்கள் ஏழாம் ஆண்டு வரையிலேயே கல்வி கற்றதாகத் தெரிகிறது.

மலாயாக் கல்வி வரலாற்றில் 1956 ஆம் ஆண்டு வெளியிடப்பட்ட ரசாக் அறிக்கையில் தான் ஒரே வகையான இடைநிலைப்பள்ளி உருவாக்கப்பட்டுள்ளது. இவ்வறிக்கை 1957 ஆம் ஆண்டு கல்விச் சட்டமாக ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளது. இச்சட்டத்தின் வழி எல்லாத் தொடக்கப்பள்ளி மாணவர்களும் ஒரே வகையான இடைநிலைப்பள்ளிக் கல்வியைத் தொடர வாய்ப்பு வழங்கியுள்ளது. மேலும் இச்சட்டம் மாணவர்கள் கேட்டுக்கொண்டால் சீனம் தமிழ் ஆகிய தாய்மொழிகள் கற்பிக்கப்படும் என்று கூறுகிறது (Kamarudan Abu & Ee Ah Meng. Guru dari perkembaangan Negara, penerbit fajar Bakti sdn .Bhd,KL.,1895.PP.236-241) இச்சட்டத்தை மேலும் வலுவாக்கும் வகையில் 1961 ஆம் ஆண்டின் கல்விச்சட்டத்தில் இடைநிலைப் பள்ளிகளிலும் பயிலும் சீன, தமிழ் மாணவர்களில் பதினைந்து பேரின் பெற்றோர் எழுத்துமூலம் தம் விருப்பத்தைத் தெரிவித்தால் தாய்மொழி (தமிழ், சீனம்) கற்பிக்கப்படும் என்று சட்டமாக்கியுள்ளது. அதனைத் தொடர்ந்து 1996 ஆம் ஆண்டுக் கல்விச்சட்டத்தின் இரண்டாம் பிரிவும் இதனையே வலியுறுத்துகிறது (முரசு நெடுமாறான்.மேலது.பக்.157-158). இச்சட்டத்தின் வழி தேசியப் பள்ளிகளிலும் இடைநிலைப்பள்ளிகளிலும் தமிழ்மொழிக் கல்விக்கு உரிய அங்கீகாரம் வழங்கப்பட்டுள்ளது.

இச்சட்டத்தின் வழி இடைநிலைப் பள்ளிகளில் ஒரு வாரத்திற்குப் புகுமுக வகுப்பிற்கு 160 நிமிடங்களும் முதலாம் படிவத்திலிருந்து ஐந்தாம் படிவம் வரையில் 120 நிமிடங்களும் தமிழ்மொழி கற்பிக்கப்படுகிறது. முழு நேர தமிழாசிரியர்கள் இருக்கும் இடைநிலைப்பள்ளிகளில் பாட நேரத்திலேயே தமிழ்மொழிக் கற்பிக்கப்படுகிறது. முழு நேர தமிழாசிரியர்கள் இல்லாத இடைநிலைப்பள்ளிகளிலும் குறைவான தமிழ் மாணவர்கள் இருக்கும் இடைநிலைப்பள்ளிகளிலும் பாட நேரத்திற்கு வெளியில் பகுதி நேர தமிழாசிரியர்கள் தமிழ்மொழிக் கற்பிக்கப்படுகிறது.

மேலும், இடைநிலைப் பள்ளி இறுதியில் நடைபெறும் மலேசியக் கல்விச் சான்றிதழ் என்னும் தேர்வில் தமிழுடன் தமிழ் இலக்கியத்தையும் ஒரு பாடமாகத் தெரிவு செய்யலாம். இத்தேர்வுக்கான பாட நூல்களை மலேசியத்தேர்வு வாரியம் நான்கு ஆண்டுகளுக்கு ஒரு முறை தேர்வு செய்கின்றனர். அத்தேர்வு கவிதை, புதினம், நாடகம் ஆகிய மூன்று கூறுகளைக் கொண்டதாகும். இத்தேர்வுக்குரிய பாடங்கள் தமிழ்மொழி வகுப்புகளில் நடைப்பெறுவதில்லை. மாணவர்கள் சொந்தமாகக் கற்று இத்தேர்வை எழுதவேண்டும். இடைநிலைப் பள்ளிகளுக்கான ஒருங்கிணைக்கப்பட்ட பாடத்திட்டம் அறிமுகம் செய்த பின் இப்பாடம் இடைநிலைப்பள்ளிகளுக்கான ஒருங்கிணைக்கப்பட்ட பாடத்திட்டத்திற்கு வெளியிலுள்ள பாடமாகக் கருதப்படுகிறது(மேலது.ப.162).

## மலேசிய உயர்நிலைப் பள்ளிகளில் தமிழ்மொழி

இடைநிலைக் கல்வியான ஐந்தாம் படிவம் முடித்த மாணவர்கள் உயர்நிலைத் தேர்வில் தமிழையும் ஒரு பாடமாக எடுக்கலாம். ஆனால், பள்ளிகளில் இப்பாடல் கற்பிக்கப்படுவதில்லை. மாணவர்கள் சொந்த முயற்சியில் கற்றுத் தேர்வெழுத வேண்டும். பல்கலைக்கழக நுழைத்தேர்வுத் தாள்களில் ஒன்றான இது சற்று ஆழமான கலைத்திட்டத்தைக் கொண்டதாகும். உயர்நிலைத் தேர்வில் தமிழ்ப் பாடம் இரண்டு தாள்களைக் கொண்டதாக அமைக்கப்பட்டுள்ளது. முதல் நாள் மாணவர்களின் மொழித் திறனையும் இரண்டாவது தாள் இலக்கியத் திறனையும் மதிப்பிடுவதாக அமைந்துள்ளது. வளமான மொழி, இலக்கியத்திறன் கொண்டவரே இத்தேர்வில் வெற்றிபெற

இயலும். உள்ளூர் பல்கலைக்கழக நுழைவுத் தகுதிக்கு இத்தமிழ்த்தேர்ச்சிப் பள்ளிகளும் கணக்கிடப்படுகிறது (மேலது.பக்.162-163).

## மலேசிய ஆசிரியர் பயிற்சிக் கழகங்களில் தமிழ்மொழி

மலேசியாவில் ஏழு ஆசிரியர் பயிற்சிக் கழகங்களில் தமிழாசிரியர்களுக்கான பயிற்சி வழங்கப்படுகிறது. இப்பயிற்சிக் கழகங்களில் பட்டப்படிப்பிற்குப் பிந்திய ஆசிரியர் பயிற்சி, விடுமுறைக் கால ஆசிரியர் பயிற்சி மற்றும் தொடக்கப்பள்ளி ஆசிரியர்களுக்கான கல்வியியல் இளங்கலைப் பட்டப்படிப்பு வழங்கப்படுகிறது. இவை யாவும் தமிழ்ப்பள்ளி ஆசிரியர்களுக்கான பயிற்சியாகும். இங்கு இலக்கணம், மொழியியல், இலக்கியம் மற்றும் கற்பிப்பியல் பாடங்கள் தமிழ்மொழியில் கற்பிக்கப்படுகின்றன.

## மலேசியப் பல்கலைக்கழகங்களில் தமிழ்மொழி

மலாயாப் பல்கலைக்கழகத்தில் 1956 ஆம் ஆண்டு நிறுவப்பட்ட இந்திய ஆய்வியல் துறையில் தற்காலத் தமிழ் இலக்கியம் , பக்தி இலக்கியம், சங்க இலக்கியம், இலக்கணம் ஆகியவைக் கற்பிக்கப்படுவதோடு மலாய் மொழியில் தமிழ் இலக்கியம், தமிழர் பண்பாடு நாகரிகமும் கற்பிக்கப்படுகிறது. இதோடு 1998 இல் மலாயாப் பல்கலைக்கழகத்தின் மொழி மொழியியற் புலத்தில் தமிழ்மொழியில் இளங்கலைப்பட்டப்படிப்புத் தொடங்கப்பட்டுள்ளது(மேலது.ப.164).

மேலும் மலாயாப் பல்கலைக்கழகத்தில் தமிழ் இலக்கியம், இலக்கணம், மொழியியல், கற்பிப்பியல் மற்றும் குமுகாயவியல் ஆகிய துறைகளில் முதுகலை மற்றும் முனைவர் பட்டத்திற்குப் பயிலுவதற்கான வாய்ப்புகள் உள்ளன. ஆய்வகளைத் தமிழ்மொழியில் மேற்கொண்டாலும் ஆய்வு முடிவுகளை மலாய் அல்லது ஆங்கில மொழியில்தான் எழுதவேண்டும். தமிழ்மொழியில் எழுதுவதற்கு ஒப்புதல் இல்லை.

மலாயாப் பல்கலைக்கழகத்தைத் தவிர்த்து மலேசியப் புத்ரா பல்கலைக்கழகம், மலேசிய அறிவியல் பல்கலைக்கழகம், மலேசியச் சபா பல்கலைக்கழகம் ஆகிய பல்கலைக்கழகங்களில் அடிப்படைத்தமிழ் வகுப்பு

நடைபெற்று வருகின்றது. இவ்வகுப்புகளில் தமிழ்ப் பேசத்தெரியாத மாணவர்கள் பயின்று பயனடைந்து வருகிறார்கள்(மேலது.ப.167).

மேலும் சுல்தான் இட்ரிக் கல்வியில் பல்கலைக்கழகம் 2012 ஆம்ஆண்டு முதல் தமிழ்மொழியில் இடைநிலைப்பள்ளி தமிழாசிரியர்களுக்கான கல்வியியல் இளங்கலைப் பட்டப்படிப்பை வழங்குகின்றது. இப்பல்கலைக்கழகத்தில் பயிலும் மாணவர்கள் முதன்மை பாடமாகத் (Major) தமிழ்மொழியையும் துணைப்பாடமாகத் (Minor) தமிழ் இலக்கியத்தையும் எடுத்து பயில வேண்டும். இங்குப் பயிலும் மாணவர்கள் தமிழ் இலக்கணம், மொழியியல், இலக்கியம், கற்பிப்பியல் மற்றும் குமுகாயவியல் ஆகிய கூறுகள் அடங்கிய 25 பாடங்களைத் தமிழ்மொழியிலேயே கற்பார்கள். நான்கு ஆண்டு கல்விக்குப் பின் இம்மாணவர்கள் இடைநிலைப்பள்ளிகளில் தமிழாசிரியர்களாகப் பணி அமர்த்தம் செய்யப்படுவார்கள்.

## மலேசியக் கல்வி அமைச்சில் தமிழ்மொழி

கல்வி அமைச்சில் தமிழ்மொழி வளர்ச்சியைக் கண்காணிக்கத் தமிழ் அதிகாரிகள் அமர்த்தப்பட்டுள்ளனர். இவர்கள் முறையே பள்ளிப் பிரிவு, கலைத்திட்ட மேம்பாட்டுப் பிரிவு, பாடப்புத்தகப் பிரிவு, ஆசிரியர் பயிற்சி, பயிற்சி பிரிவு, தேர்வு வாரியம் ஆகியப் பிரிவுகளில் அமர்த்தம் செய்யப்பட்டுள்ளனர். பள்ளிப் பிரிவில் அமர்த்தப்பட்டுள்ள தமிழதிகாரி மாநிலக் கல்வித் துறைகளில் அமர்த்தப்பட்டுள்ள தமிழ்ப் பள்ளிகளின் கண்காணிப்பாளர்களுடன் இணைந்து தமிழ்ப் பள்ளிகளின் வளர்ச்சியைக் கவனித்துக் கொள்கிறார். கலைத்திட்ட மேம்பாட்டுப் பிரிவில் அமர்த்தப்பட்டுள்ள தமிழதிகாரிகள் தமிழ்ப்பள்ளி மற்றும் இடைநிலைப்பள்ளி தமிழ்மொழிப் பாடத்திட்டத்தை வரைந்து செயல்படுகின்றனர். பாடப்புத்தகம் பிரிவில் அமர்த்தப்பட்டுள்ள தமிழதிகாரிகள் முதலாம் ஆண்டு முதல் ஐந்தாம் படிவம் வரையுள்ள தமிழ்மொழிக்கான பாடப்புத்தகத்தைத் தயார் செய்கின்றனர். ஆசிரியர் பயிற்சிப் பிரிவில் அமர்த்தப்பட்டுள்ள தமிழதிகாரி ஆசிரியர் பயிற்சிக் கழகம் தொடர்பான தமிழ் நடவடிக்கைகளைக் கவனித்துக் கொள்கிறார். தேர்வு வாரியத்தில் அமர்த்தப்பட்டுள்ள தமிழகரிகாரிகள் யூபி.எஸ்.ஆர் .பிஎம்.ஆர் , எஸ்பிஎம் ஆகிய அரசாங்க பொதுத்தேர்வுக்கான தமிழ்மொழித்தாளைத் தயார் செய்வதோடு எஸ்பிஎம் தமிழ் இலக்கியத் தாளுக்கான கேள்விகளையும் தயார் செய்கின்றனர்.

## மலேசிய மாநிலக் கல்வித்துறைகளில் தமிழ்மொழி

மலேசியாவில் ஒன்பது மாநிலக் கல்வித்துறைகளில் ஒரு தமிழ்ப் பள்ளிக் கண்காணிப்பாளரும் ஒரு தமிழ்மொழி உதவி இயக்குநரும் அமர்த்தப்பட்டுள்ளனர். தமிழ்ப் பள்ளிக் கண்காணிப்பாளர்கள் தமிழ்ப் பள்ளிகளின் நிர்வாகப் பணிகளைக் கவனித்துக் கொள்கின்றனர். தமிழ்மொழி உதவி இயக்குநர்கள் தமிழ்மொழிப் பாட மேம்பாட்டுப் பணிகளைக் கவனித்துக் கொள்கின்றனர். மேலும் ஒரு மாவடத்தில் இருபதுக்கும் மேற்பட்ட தமிழ்ப்பள்ளிகள் இருந்தால் அம்மாவட்டக் கல்வி அலுவலகத்தில் ஒரு மாவட்டத் தமிழ்ப்பள்ளிக் கண்காணிப்பாளர் அமர்த்தப்பட்டுள்ளனர். மலேசியாவில் நான்கு மாவட்டக் கல்வி அலுவலகங்களில் தமிழ்ப்பள்ளிக் கண்காணிப்பாளர்கள் அமர்த்தப்பட்டுள்ளனர். இவர்கள் அம்மாவட்டத்தில் இயங்கும் தமிழ்ப்பள்ளிகளின் நிர்வாகப் பணிகளைக் கவனித்துக் கொள்கின்றனர்.

## மலேசிய ஊடகங்களில் தமிழ்மொழி

மலாயாவில் 1875 ஆம் ஆண்டில்தான் முதலாவது இதழ் சிங்கை வர்த்தகமானி என்ற பெயரில் வெளிவந்துள்ளது (மேலது.ப.205). இவ்விதழ் சிங்கப்பூரில் கிழமை இதழாக வெளிவந்துள்ளது. இவ்விதழுக்குப் பின் மலேசியாவில் நிறைய நாள், வார, மாத இதழ்கள் வெளிவந்துள்ளன. தற்போது மலேசியாவில் தமிழ் நேசன், மலேசிய நண்பன், மக்கள் ஓசை என மூன்று நாளிதழ்கள் வெளிவருகின்றன. இவ்விதழ்கள் நாள்தோறும் பல்லாயிரக்கணக்கிலும் ஞாயிற்றுக்கிழமைகளில் இலட்சக்கணக்கிலும் விற்பனையாகின்றன. இதனோடு பல வார மாத இதழ்களும் வெளிவருகின்றன.

## மலேசிய வானொலியில் தமிழ்மொழி

மலாயாவில் 1946 ஆம் ஆண்டில் முறையான வானொலி ஒலிபரப்புச் சேவை தொடக்கப்பட்டுள்ளது. இவ்வானொலி ஒலிபரப்பில் தமிழ்மொழிக்கும் இடம் வழங்கப்பட்டுள்ளதாக அமைகிறது. தற்போது மலேசிய வானொலித் தமிழ்ப்பகுதி மின்னல் என்று அழைக்கப்படுகிறது. இதனோடு டி.எச்.ஆர் ராகா எனப்படும் தனியார் வானொலியும் நாள்தோறும் 20 மணிநேரத் தமிழ் ஒலிபரப்பை மேற்கொள்கிறது.

## மலேசியத் தொலைக்காட்சியில் தமிழ்மொழி

மலேசியாவில் 1963 ஆம் ஆண்டு தொலைக்காட்சி ஒளிபரப்புச் சேவை தொடங்கியது. இவ்வொளிபரப்புச் சேவையிலும் தமிழ்மொழிக்கு வாய்ப்பு வழங்கப்பட்டுள்ளது. தற்போது அரசாங்கத் தொலைக்காட்சிச் சேவையில் நாள்தோறும் 30 நிமிடத் தமிழ்ச் செய்தி வாசிக்கப்படுகிறது. மேலும் தமிழ்ப்படம், தமிழ்நாடகம், தமிழ் உள்ளூர் நிகழ்ச்சிகளென ஒளிப்பரப்படுகின்றன. மலாய், சீன நிகழ்ச்சிகளொடு ஒப்பிடுகையில் தமிழ்மொழிக்குக் குறைவான வாய்ப்பே வழங்கப்பட்டுள்ளதை அறிய முடிகிறது. ஆனாலும் தனியார் கட்டணத் தொலைக்காட்சி ஒளிப்பரப்பான அஸ்ட்ரோவில் 24 மணிநேரத் தமிழ் ஒளிபரப்புகள் இடம்பெற்றுள்ளன.

## மலேசியப் பொருளாதாரத்துறையில் தமிழ்மொழி

மலேசியாவில் பொருளாதாரத்துறையில் தமிழ்மொழிச் சிறப்பிடம் பெறவில்லை என்றே கூறவேண்டும். தமிழாசிரியர் பணி மற்றும் சில தமிழ்மொழித் தொடர்புடைய பணிகளைத் தவிர்த்து மற்ற அரசாங்கப் பணிகளுக்குத் தமிழ்மொழி முக்கியமான ஒன்றாகக் கருதப்படவில்லை. இதன் காரணமாகப் பொருளாதார நிலைக் கருதித் தமிழ்மொழிக் கற்கும் நிலை மலேசியாவில் இல்லை. மேலும் மலேசிய வாணிகத்துறையில் சீனமொழிப் பெற்றிருக்கும் தனிச் சிறப்பைத் தமிழ்மொழிப் பெறவில்லை. மலேசிய வாணிகத்துறையில் சீனர்கள் மேலாண்மை பெற்றுள்ளதைப் போல இந்தியர்கள் மேலாண்மை பெறாதாதால் தமிழ்மொழி அச்சிறப்பைப் பெறவில்லை.

## மலேசிய அரசியல் துறையில் தமிழ்மொழி

ஒன்றுபட்ட மலேசியத்தை உருவாக்க மலாய்மொழி தேசிய மொழியாக ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளது. மலாய்க்காரர்களுக்கு அடுத்தநிலையில் இருக்கின்ற சீன இந்திய மக்களின் உணர்வுகளை மதித்துப் போற்றும் நோக்கத்தோடு சீனமொழிக்கும் தமிழ்மொழிக்கும் உரிய வாய்ப்புகள் வழங்கப்பட்டுள்ளன. எனினும் இலங்கை, சிங்கப்பூர், போன்ற நாடுகளில் தமிழ்மொழிக்கு வழங்கப்பட்டுள்ளன. அங்கிகாரத்தைப் போன்று மலேசியாவிலும் வழங்கினால் தமிழ்மொழி இங்கும் சிறப்புப் பெற்று விளங்கும்.

## முடிவுரை

மலேசியத் திருநாட்டில் தமிழ்மொழி, ஏற்றுக்கொள்ளப்பட்ட நான்கு மொழிகளில் ஒன்றாகக் கருதப்படுகின்றது. இங்கு தொடக்கப்பள்ளிகளில் தமிழ்மொழிப் பயிற்று மொழியாக இருப்பதாலும், இடைநிலைப்பள்ளிகளிலும் உயர்க்கல்விக்கூடங்களிலும் தமிழ்மொழி ஒரு பாடமாக இருப்பதாலும் தமிழ்மொழி வளம்பெற்று விளங்குகிறது.

## மேற்கோள்கள்

1. முரசு நெடுமாறன். மலேசியத் தமிழரும் தமிழும், 2007 சென்னை உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்.

2. மலேசியத்தமிழ்க் கவிதைகள் . 1960-1995,2001.புதுவை பல்கலைக்கழகம்.

3. மலேசியத்தமிழ்க்கவிதைக் களஞ்சியம். 1997.கிள்ளான் அருள்மதியம் பதிப்பகம்.

4. ஜானகிராமன் மாணிக்கம், மலேசிய இந்தியர்களின் இக்கட்டான நிலை, 2006, கோலாலம்பூர் . அஷ்வின் டிரேடிங்.

5. Sandhu K.S, Indians in Malaya immigration and settlement 1786-1957, 1969 , London : Univdrsity of Cambridge.

6. Paul chang ming phang , Perkembangan pelajaran dalam Masyarakat Berbiling Kaum, 1975 Kuala Lumbur : Dewan Bahasa dan pustaka.

7. Kamarudin Abu& Ee Ah Meng. Guru dan Perkembangan Negara,1995, Kuala Lumpur Penerbit Fajar Bakit Sdn.Bhd.

# 8. சிங்கப்பூர் இளையர்களும் தமிழ் குறித்த அவர்களது சிந்தனைகளும்

டாக்டர் சீதா லட்சுமி
இணைப் பேராசிரியர்
ஆசிய மொழிகள் மற்றும் பண்பாடுகள் துறை
தேசியக் கல்விக் கழகம்
நன்யாங் தொழில்நுட்பப் பல்கலைக்கழகம்,
சிங்கப்பூர்

சிங்கப்பூர் என்பது ஒரு நகர, மாநில, நாடாக அமைந்துள்ளநாடு. இங்கு மனிதவளம் என்பது அதன் ஒரே வளமாகவும் திறன்மிக்க வளமாகவும் அமைந்துள்ளது. இந்த வளத்தை ஒல்லும் வகையெல்லாம் மேம்படுத்துவதில் நாடு தனிக்கவனம் செலுத்திவருகிறது. கல்வி வழியாக ஒவ்வொரு சிங்கப்பூரரையும் அவர் விரும்பும்வகையில் படிக்கவைக்கவும் உயர்வடையச் செய்யவும் பலவகையான வாய்ப்புவசதிகள் செய்து தரப்படுகின்றன. மனித வளம் மட்டுமின்றித் தனது நாட்டின் தற்காப்பிலும் நாடு அதிகக்கவனம் செலுத்தி வருகிறது. தூய்மையான நாடு என்பதுடன் பாதுகாப்பான நாடு என்ற காரணத்தினாலும் தொடர்ந்து தனது நாணயத்தின் மதிப்பைத் தக்கவைத்து வரும் நாடு என்ற காரணத்தினாலும் இங்கு பன்னாட்டவரும் வேலை நிமித்தம் வந்து தங்குவதுடன் நிரந்தரமாகக் குடியேறியும் வருகின்றனர்.

1959இல் சுயாட்சி நடத்தும் உரிமை பெற்ற நாடாகச் சிங்கப்பூர் அமைந்தபோது, அது பன்மொழிகளைக் கொண்ட நாடாகத் தன்னை வடிவமைத்தது.(Dixon,2003) ஆங்கிலம், சீனம், மலாய், தமிழ் ஆகிய மொழிகள் அதிகாரத்துவமொழிகளாக விளங்கின. 1965இல் சுதந்திர நாடாக விடுதலை பெற்ற சிங்கப்பூரில் நான்கு அதிகாரத்துவமொழிகள் கோலோச்சி வருகின்றன. நாட்டின் ஆரம்பகாலக் கொள்கைகளில் குறிப்பிடத்தக்க ஒன்றாக இருமொழிக் கல்விக்கொள்கை இடம்பெற்றது. இதன்படி பள்ளிகள்

ஆங்கிலவழிப்பள்ளிகளாக அமைந்தன. மூன்று இனங்களின் தாய்மொழிகளும் இரண்டாம் மொழி நிலையில் கற்றுத்தரப்பட்டன. 1987ஆம் ஆண்டுவாக்கில் அனைத்துப் பள்ளிகளும் தேசியக் கல்வி முறையின்கீழ் ஆங்கிலப்பள்ளிகளாக அமைந்தன(Gopinathan, 1998). பள்ளிகளில், ஆங்கிலம் முதல்மொழியாகவும் சீனம், மலாய், தமிழ் ஆகியன தாய்மொழிப் பாடங்களாகவும் கற்றுத்தரப்பட்டன. பள்ளிகள் உரிய வழிகாட்டுதல்களுடன் மாணவர்களுக்குக் கல்வியைப் போதித்தன.

சீனம், மலாய், தமிழ், ஆங்கிலம் ஆகிய நான்கு மொழிகளில் ஆங்கிலம் உள்நாட்டில் மக்களிடையே தொடர்பை வலுப்படுத்தவும் உலகநாடுகளுடன் தொடர்பையும் தொழில்துறையில் முன்னணி நிலையைத் தொடர்ந்து தக்கவைக்கவும் உதவியாக அமைகிறது. நாட்டின் மூன்று முக்கிய இனத்தவர்களும் தங்களது தாய்மொழிகளைத் தொடர்ந்து பயன்படுத்தவும் தங்களது மரபு மூலங்களையும் பண்பாட்டையும் அறிந்து போற்றி வாழவும் சீனம், மலாய், தமிழ் ஆகிய மொழிகள் தாய்மொழிப் பாடங்களாகக் கல்வித்துறையில் அமைந்துள்ளன. இந்நான்கு மொழிகளும் தொடர்புத்துறையில் குறிப்பிடத்தக்க இடம்பெற்று வருகின்றன.

தமிழ் மொழி அதிகாரத்துவ மொழிகளில் ஒன்றாக இருப்பதுடன் பாலர் கல்வி முதல் தொடக்கக்கல்லூரிவரை படிப்பதற்குப் பல வாய்ப்புகள் வழங்கப்பட்டுவருகின்றன. தாய்மொழிப் பாடமாக இதைப் பயிலும் மாணவர்கள் இரண்டாம் மொழி நிலையில் பயில்கின்றனர். இங்கு, தமிழைத் தற்போது சுமார் 650 ஆசிரியர்களும் கல்வியாளர்களும் ஆசிரியப் பயிற்றுவிப்பாளர்களும் மாணவர்களுக்குப்போதிப்பதில் ஈடுபட்டு வருகின்றனர். தமிழ் மொழி சார்ந்த நிகழ்வுகளை ஒன்றிணைக்கும் வகையில் வளர்தமிழ் இயக்கம் அரசாங்கத்துடன் இணைந்து ஆண்டுதோறும் தமிழ் மொழி விழாவை நடத்தி வருகிறது. "தமிழை நேசிப்போம் தமிழில் பேசுவோம்' என்ற முழக்கவரியைத் தொடர்ந்து வலியுறுத்திவரும் அந்த இயக்கம், விழாவைச் சமூக அமைப்புகளின் ஒத்துழைப்போடு ஏழாவது ஆண்டாகச் சிறப்பாக நடத்திவருகிறது. தமிழ் முரசு நாளிதழ், வானொலியில் 24 மணிநேரத் தமிழ்ச்சேவை, வசந்தம் தொலைக்காட்சி ஒளிவழி, இணைய இதழ்கள் எனத் தொடர்புத்துறையில் சிறப்பிடம் பெற்றுள்ள தமிழ்மொழி, தொடர்ந்து

பல படைப்பிலக்கியங்களையும் பெற்று வளர்ந்து வருகிறது எனலாம். ஒவ்வொரு மாதமும் நூல் வெளியீடு, கவியரங்கம், பட்டிமன்றம், கருத்தரங்கம் எனக் குறைந்தது நான்கு தமிழ் நிகழ்வுகளாவது நிச்சயம் நடைபெறும். நாடளாவிய நிலையில் புதிய எழுத்தாளர்களில் சிறந்தோருக்கும் வளர்ந்த எழுத்தாளர்களில் சிறந்தோருக்கும் பத்தாயிரம் வெள்ளி மதிப்புள்ள தங்கமுனை விருதும் சிங்கப்பூர் இலக்கியப்பரிசும் வழங்கப்படுகிறது. தவிரவும், சிங்கப்பூர்த் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் தமிழவேள் விருது, மு கு இராமச்சந்திரா நினைவு புத்தகப்பரிசு, கவிமாலையின் கணையாழி விருது, தமிழ் மொழி பண்பாட்டுக்கழகத்தின் திருக்குறள் விழா, பாரதியார் பாரதிதாசன் விழா ஆகியவற்றின்போது வழங்கப்படும் விருதுகள் எனப் பல விருதுகள் படைப்பாளர்களையும் தமிழ் ஆர்வலர்களையும் ஊக்குவித்து வளர்த்துவருகின்றன. தமிழாசிரியர்களில் சிறந்தோருக்கு, சிறந்த தமிழாசிரியர் விருதும் வழங்கப்பட்டு வருகிறது. அரசு நிலையில் கலாசாரப் பதக்க விருது, ஆசியான் விருது, மோண்ட் பிளாங்க் பேனா விருது, பலவகையான செறிவுநிதிகள், ஊக்குவிப்புகள் ஆகியனவும் படைப்பாளர்களுக்கு வழங்கப்பட்டு வருகின்றன. இவை தவிரப் பல்வேறு அமைப்புகளால் பலவகையான மொழி, இலக்கியப் போட்டிகளும் தவறாமல் நடைபெற்று வருகின்றன. அனைத்துலகத் தமிழ் இணைய மாநாடு, உலகத்தமிழாசிரியர் மாநாடு, உலகத்தமிழ் எழுத்தாளர் மாநாடு போன்ற சிறந்த முனைப்புகளைத் திட்டமிட்டுச் செயல்படுத்தித் தொடர்ந்து தம் பங்களிப்பை வழங்கிவருவதில் சிங்கப்பூர் குறிப்பிடத்தக்கது. ஒருவகையில் ஆழமாக நோக்கினால், தமிழ் தோன்றிய தமிழ்நாட்டுக்கு வெளியில் தற்போதைய உலகில் சிங்கப்பூரில்தான் தமிழுக்கு அரசு நிலையிலும் சமூக நிலையிலும் கல்வி நிலையிலும் மதிப்பும் சிறப்பும் அதிகமாக வழங்கப்படுகிறது என்றும் கூறலாம்.

இத்தகு நாட்டில் தமிழ் மொழியை அரசு சீரும்சிறப்புடனும் வளர்த்து ஆதரவளித்து வருவது அனைவரும் அறிந்ததே. அப்படிப்பட்ட நாட்டின், தமிழ்ச் சமூகத்தில் அம்மொழி எவ்வாறு நோக்கப்படுகிறது என்று இக்கட்டுரை பார்வையிடுகிறது. இங்கு சமூகம் எனும்போது குழந்தைகள், சிறுவரகள், இளையர்கள், வயது முதிர்ந்தவர்கள் என்று பலரும் வாழ்ந்தாலும் துடிப்புமிக்க வயதினர் என்பதுடன் நாட்டின் எல்லாத்துறைகளிலும் திடமான தாக்கத்தை உண்டாக்குபவர்கள் என்று கருதப்படுபவர்கள் இளையர்களே. அத்தகு

இளையர்கள் தமிழைப் பற்றி என்ன நினைக்கிறார்கள் என்று இக்கட்டுரை பார்வையிடுகிறது. அதிலும் அவர்களது பின்னணி, தமிழைப் பற்றிய அவர்களது சிந்தனை, தற்போதைய தமிழ்ப்புழக்கம் ஆகிய கூறுகள் நோக்கியதாக இக்கட்டுரை அமைகிறது. கட்டுரையின் முக்கிய வினாக்கள் வருமாறு:

- பள்ளி வாழ்வுக்குப் பிறகு தமிழைப் பற்றிய இளையர்களின் மீள்பார்வை யாது?
- இன்றைய தமிழ்ப்புழக்கம் பற்றி இளையர்களின் கருத்து யாது?

இங்கு இந்த வினாக்களுக்கான விடைகள் தரநோக்கிலும் அளவு நோக்கிலும் நோக்கப்படுகிறது. பெரியதோர் ஆய்வின் முன்னோட்டநிலையில் திரட்டப்பட்ட தரவுகளைக் கொண்டு இங்கு பகுப்பாய்வு இடம்பெறுகிறது.

## ஆய்வு வடிவமைப்பு

ஆய்வில் 2001 முதல் 2012 ஆண்டுவரையிலான காலக்கட்டத்தில் உயர்நிலைப் பள்ளியில் உயர்தமிழ் அல்லது புகுமுகவகுப்பில் தமிழ் எனப் படித்த இளையர்கள் 17பேரிடம் தரவுகள் பெறப்பட்டன. தனியே தேர்வு எழுதியவர்களும் இங்கு இடம்பெற்றுள்ளனர். இவர்களைப் பற்றிய பின்னணி என்று பார்த்தால், இவர்களில் மூவர் ஆண்கள். 14பேர் பெண்கள். இவர்களில் ஆகக்குறைந்த வயதினர் என்றால் அவர் 18 வயதாகவும் அதிகபட்ச வயதினராக 32வயதானவரும் அமைந்தனர். இவர்களது சராசரி வயது 23வயது என்று அமைகிறது. இவர்களில் 8பேர் பணிபுரிபவர்களாகவும் 7பேர் உயர்கல்வி படித்துக்கொண்டிருப்பவர்களாகவும் இருக்க, ஒருவர் பல்கலைக்கழகத்தில் பயின்றுகொண்டே பணி அனுபவம் பெற்றுக்கொண்டிருப்பவராகவும் மற்றொருவர் பணிக்கு முந்திய ஆசிரியர் பயிற்சியில் ஈடுபட்டிருப்பவராகவும் இருந்தனர். இவர்களிடம் மின்னஞ்சல் வழியே ஆய்வுக்கான மரபுசார் ஒப்புதல் பெற்ற பிறகு, மின்கருத்துத்திரட்டல் வழியே சுமார் 68வினாக்களுக்கு விடைகள் தரவுகளாகப் பெறப்பட்டன. அவற்றில் சுமார் 14வினாக்கள் தொடர்பாகப் பெறப்பட்ட தரவுகள் இரண்டு முக்கிய வினாக்களின் கீழ் ஆராயப்படுகின்றன. அவை குறித்துப் பார்ப்போம்.

ஆய்வில் பங்கேற்ற இளையர்கள் அனைவரும் தற்போது சிங்கப்பூரில் வசித்தாலும் சிங்கப்பூரர்களாக இருந்தாலும் அவர்களில் பலர்

சிங்கப்பூரிலும்(76%), இருவர் இந்தியாவிலும்(12%), ஒருவர் மலேசியாவிலும்(6%) பிறந்துள்ளனர். ஒருவர் இது குறித்துப் பதில் ஏதும் தரவில்லை. இவர்களது பெற்றோர் எனும்போது தந்தையர்களில் அறுவர் சிங்கப்பூரிலும் அறுவர் இந்தியாவிலும் ஐவர் மலேசியாவிலும் பிறந்தோராக அமைகின்றனர். அன்னையர் என்றுநோக்கும்போது, ஒன்பதுபேர் சிங்கப்பூரிலும் எழுவர் இந்தியாவிலும் ஒருவர் மலேசியாவிலும் பிறந்திருப்பதை உணரமுடிகிறது. இவர்களில் இருவர் தவிர மீதமுள்ள அனைவரும் தமிழைத் தாய்மொழியாகக் கொண்டவர்கள் என்பதுடன் பெரும்பாலும் தமிழைச் சிறுவயதுமுதல் பேசிவருபவர்கள் என்றும் அறியமுடிகிறது.

இங்கு இந்த ஆய்வில் சிங்கப்பூரர்களிடம் கருத்துகள் திரட்டப்பட்டமைக்கு ஒரு காரணமும் இருக்கிறது. சிங்கப்பூரில் தமிழ் அதிகாரத்துவமொழிகளில் ஒன்றாக இருப்பதுடன் இந்த நிலையை அம்மொழி அடைவதற்கு அரசியல், சமூகநோக்கில் நீண்டதொரு வரலாறும் பாரம்பரியமும் இருக்கிறது. அந்தப் பாரம்பரியத்தைத் தொடர்ந்து தற்போது வாழ்ந்துவரும் இவர்கள் அம்மொழியின் தற்போதைய நிலை குறித்து என்ன நினைக்கின்றனர் என்பது ஆய்வில் முக்கிய இடம்பெறுகிறது. மேலும், பெற்றோரையும் அவர்களது பின்னணி குறிதது நோக்கும்போது (அட்டவணை 1) சில செய்திகளை உய்த்தறிய முடிகிறது. அவர்களது பின்னணி குழந்தைகளின் வளர்ப்பிலும் குடும்பமொழிப்புழக்கத்திலும் குறிப்பிடத்தக்க தாக்கத்தை உண்டாக்குகின்றன என்று உணரலாம். பெற்றோர் இருவரும் சிங்கப்பூரில் பிறந்த சிங்கப்பூரர்கள் என்று அமையும்போது, அவர்களது குழந்தைகளும் சிங்கப்பூரர்கள். சிங்கப்பூரர்கள் எனும்போது சில கூறுகளை இங்கு ஆழமாக நோக்க முடிகிறது. பெற்றோர் இருவரும் ஆங்கிலம், தமிழ் இருமொழியிலும் தொடர்புகொள்ளும் திறன் பெற்றவர்களாக இருப்பார்கள். சிலர் அக்காலத்தில் பள்ளியில் மலாயை இரண்டாம் மொழியாகப் படித்தவர்களாக இருப்பார்கள். சிங்கப்பூரர்கள், சிங்கப்பூர் சார்ந்த கூறுகளில் அதிகப் பரிட்சயம் மிக்கவர்களாக இருப்பார்கள். குழந்தை வளர்ப்பில் ஒரு பின்னணி நோக்கியவர்களாக இருப்பார்கள். இவர்களது உறவினர்களும் இவர்களுடன் இதே நாட்டில் வாழ்பவர்களாக இருப்பார்கள். இந்நிலையில் குழந்தைகளின் மொழிப்புழக்கம் எவ்வாறு அமைந்துள்ளது என்று பார்க்கும்போது அக்குழந்தைகள் பெரும்பாலும் இருமொழிக் கல்விச் சூழலில் இருமொழி புழங்குபவர்களாக

அமைகிறார்கள். இந்தியாவில் அதாவது தமிழ் மொழி தோன்றிய பகுதியின் பிறந்தவர்களது குழந்தைகளிடையே இயல்புமொழியாளர்களின் கூறுகளை நாம் உய்த்தறிய முடிகிறது. சிங்கப்பூரும் அதன் அண்டை நாடான மலேசியாவும் சமூக நிலையில், பல்லின, பன்மொழி, பல பண்பாட்டுப் பின்னணியைக் கொண்டிருப்பதால் இவ்விரு நாடுகளுடன் தொடர்புடையோர்தம் மொழிப் புழக்கத்தில் சில தனிக்கூறுகளைக் காணமுடியும். மலேசியாவில் ஆரம்பக்கல்வியில் தமிழ்மொழியின் தாக்கம் அதிகமாக இருப்பதும் குறிப்பிடத்தக்கது. ஆம் பெற்றோரின் மொழிப்புழக்கம், மொழிநோக்கிய விழுமங்கள் அவர்களது குழந்தைகளின் மொழிப்புழக்கத்திலும் மொழிகைவரப்பெறலிலும் தாக்கத்தை உண்டாக்குகின்றன எனலாம்.

அட்டவணை 1: இளையர்கள், அவர்கள்தம் பெற்றோரின் பிறந்த நாடு

| | சிங்கப்பூர் (சராசரி விழுக்காடு) | இந்தியா (சராசரி விழுக்காடு) | மலேசியா (சராசரி விழுக்காடு) | பதில் இல்லை(சராசரி விழுக்காடு) |
|---|---|---|---|---|
| இளையர் | 13(76) | 2(12) | 1(6) | 1(6) |
| தந்தை | 6(35) | 6(35) | 5(29) | - |
| தாய் | 9(53) | 7(41) | 1(6) | - |

அட்டவணை 2: இளையர்தம் தாய்மொழி

| | தமிழ்(சராசரி விழுக்காடு) | உருது(சராசரி விழுக்காடு) | தெலுங்கு(சராசரி விழுக்காடு) |
|---|---|---|---|
| தாய்மொழி | 15(88) | 1(6) | 1(6) |

அட்டவணை 3: யாரிடம் என்னமொழியில் இடைவினையாடுகிறாரகள்?

தமிழ் (சராசரி விழுக்காடு) ஆங்கிலம் (சராசரி விழுக்காடு)
உருதும் தமிழும் அல்லது ஒரு மொழி மட்டும்(சராசரி விழுக்காடு)
தெலுங்கும் தமிழும் அல்லது ஒரு மொழி மட்டும்(சராசரி விழுக்காடு)
தமிழும் ஆங்கிலமும்(சராசரி விழுக்காடு)
தாத்தா, பாட்டி 14(82) - 1(6) உருது 1(6) தெலுங்கு 1(6)
அப்பா 11(65) 3(18) 1(6) உருதும் தமிழும் 1(6) தெலுங்கும்
தமிழும் 1(6) அம்மா 11(65) 1(6) 1(6) தெலுங்கும் தமிழும்
1(6) தெலுங்கும் தமிழும் 3(18)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| உடன் பிறந்தவர்கள் | 7(41) | 3(18) | 1(6) | 1(6) | 5(29) |
| தமிழறிந்த நண்பர்கள், உறவினர்கள | 3(18) | 2(12) | - | - | 12(71) |

பங்கேற்ற இளையர்கள் தாம் பிறந்ததுமுதல் பேசும் மொழி என்று ஆராயும்போது, ஒருவருக்குத் தெலுங்கும் மற்றொருவருக்கு உருதும் தாய்மொழிகளாக அமைய மீதமுள்ள 15பேருக்குத் தமிழ் தாய்மொழியாக அமைந்துள்ளது(அட்டவணை 3). மேலும் அவர்களில் பெரும்பாலானோர் தமிழைப் பேச அவர்களது பெற்றோர் முக்கியக்காரணம் என்று குறிப்பிட்டுள்ளனர். இவர்கள் பிறந்ததுமுதல் தமிழில் பேசினாலும் காலப்போக்கில் தமிழைப் பேசுவதில் சிரமங்களை எதிர்நோக்காமலில்லை. அவர்கள் எதிர்நோக்கும் சிரமங்கள் என்றால் அவை பெரும்பாலும் தமிழின் நிலை, தமிழில் இடம்பெறும் புதிய வழக்குகள், குழு வழக்குகள். தமிழில் இடம்பெறும் ஆங்கிலச்சொற்கள், தொடர்புச் சாதனத்தில் ஆங்கிலப்புழக்கம் ஆகியன குறித்த பிரச்சினைகளாக அமைகின்றன. அவை குறித்த அவர்களது கருத்தைப் பார்ப்போம்: பணியிடத்தில் மொழியைப் புழங்க வாய்ப்புகள் அதிகம் இல்லை என்பதுடன் கிடைக்கும் சில வாய்ப்புகளைப் பயன்படுத்திப் பேசும்போது தமிழறிந்த தமிழர்கள் தமிழில் பதில்கூறச் சிரமப்படுகிறார்கள் என்று அவர்களது கருத்துகள் அமைகின்றன. .என்னுடைய வேலை இடத்தில் நான் மட்டும்தான் தமிழர்!

நான் பள்ளியில் ஆலோசகராக வேலை செய்கிறேன். நான் தமிழில் பேசினாலும் தமிழ் மாணவர்கள் எனக்குப் பதில் கூறுவதில் சிரமத்தை எதிர்நோக்குகிறார்கள்

என்னதான் இருந்தாலும் தமிழ் ஓர் உலகமொழியல்லவே என்றும், ஆங்கிலத்தில் படித்து அதிலேயே சிந்தித்து வாழ்வதால் அந்த ஆங்கிலப் புழக்கத்திற்கு இணையாகத் தமிழில் புழங்குவது சிறிது கடினம் என்று அவர்களது கருத்துகளிலிருந்து தெரியவருகிறது. இதனால் தமிழைப் பேசுவதைவிட மீண்டும் ஆங்கிலத்திற்கே மாறுவது அதிகமாக இருப்பதாகவும் பங்கேற்ற இளையர்களில் சிலர் தெரிவித்தனர்.

தமிழில் பேசுவதற்குப் பல சொற்கள் இருந்தாலும் சில சமயங்களில் நாம் ஆங்கிலச்சொற்களையே பயன்படுத்துகிறோம் என்று ஆதங்கப்படும் இளையர்களும் உள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கது. அவர்கள் கூறும் எடுத்துக்காட்டுகளாக, எ.டு. பஸ் (bus), பென்(pen), ஃபோன் (phone) என்பன அமையும் நிலையில், சிலரோ பல ஆங்கிலச்சொற்களுக்குத் தமிழில் உரிய மொழிபெயர்ப்புகள் இல்லை என்று குறைபட்டுக் கொள்கின்றனர்.

தமிழில் பேசலாம் என்றால் உடன்பேசுபவர்கள் வேறு வகையாக உள்ளனரே என்று வருத்தப்படும் இளையர்களுடன், மக்களில் பலரும் ஆங்கிலச்சொற்களை அதிகமாகப் பயன்படுத்துகின்றனரே என்று தமிழ் மேல் பற்றுடன் கருத்துரைக்கும்இளையர்களும் இங்கு இருப்பதை இந்தத் தரவுத்திரட்டலில் அறிய முடிந்தது. தமிழில் பல ஆங்கிலச்சொற்களுக்கான மொழிபெயர்ப்பு இல்லை. நிறையப் பேர் ஆங்கிலச்சொற்களைப் பயன்படுத்துகின்றனர்.

தமிழ் பயன்படுத்துதல், தமிழிருக்க ஆங்கிலத்தைப் பயன்படுத்துதல் என்ற நிலை ஒரு புறம் அமைய, தமிழில் தமிழுக்குள்ளேயே அமைந்திருக்கும் சில குறுமொழிச் சொற்கள் தங்களுக்குப் புரியவில்லை என்று கூறும் கருத்து புதுமையாக உள்ளது. ஆழமாக நோக்கினால், சிங்கப்பூருக்கு என ஒருவகைத் தமிழ் வடிவமைந்து இருப்பதையும், சிங்கப்பூர்ச் சிறுவர்களுக்கும் இளையர்களில் சிலருக்கும் குறுமொழிக்கூறுகளுடன் யாரேனும் தமிழில் பேசினால் தெளிவாகப் புரியவில்லை என்பதும் தற்போது நிலவும் ஒரு நிலையே. சிலருக்குத் தமிழகத்தில் பயன்படுத்தப்படும் இயல்புமொழியாளரின் தமிழ் புரிவதில்லை என்பதும் புலம்பெயர்ந்த நாடுகளில் மாணவர்கள் அவ்வந்நாட்டுச் சூழல் சார்ந்த கூறுகளுடன் தமிழைப் பேசுவதையும் நாம் அறியலாம். இதனைத் தமிழ் மொழி அவ்வந்நாட்டு மக்களுடன் இணைந்து பெற்றுவரும் பரிணாமவளர்ச்சி எனலாம். இது ஆங்கிலமொழிக்கும் பொருந்தும். இதனால் உலகளாவிய மொழியான ஆங்கிலத்தில் பேசுவது வசதியாக இருப்பதாக ஒருவர் கூறுகிறர். இதற்கிடையில், மற்றொருவரோ மக்கள் பேசும் தமிழினைப் புரிந்துகொள்வதில் தமக்கு எந்தச் சிக்கலுமில்லை என்று கூறுவதையும் நாம் புரிந்துகொள்ள முடிகிறது.

தமிழில் பேசினாலும் அதில் பயன்படுத்தப்படும் சில Slang (கொச்சைவழக்கு) சொற்கள் எனக்குப் புரியவில்லை

தமிழில் பலரும் slang (கொச்சைவழக்கு) பயன்படுத்துவதால் அவர்கள் கூறுவதைப் புரிந்துகொள்ள முடியவில்லை. இதனால் உலகமொழியான ஆங்கிலத்தில் பேசுகிறேன்.எனக்கு எந்தச் சிக்கலுமில்லை

தங்களுடைய தமிழ்ப் புழக்கத்தில் தாங்கள் எதிர்நோக்கும் சிரமங்களைப் பற்றிக் கேட்டபோது, சிலர் பிறரது பின்னணியையும் தெரிந்து தாம் உணர்ந்த கருத்துகளை எடுத்துக்கூறினர். தமிழைப் பேசவேண்டும் என்ற முனைப்பு பலரிடமும் இல்லாதது

சில இந்தியர்களுக்குத் தமிழ் பேசுவது கடினமாக இருக்கிறது. அவர்கள் ஆங்கிலத்தில் பேசுவது அவர்களுக்கு மிகவும் வசதியாக இருக்கிறது. இதனால் அவர்கள் ஆங்கிலத்தில் பேசுவதால் நாமும் அவர்களுடன் பேசும்போது ஆங்கிலத்தில் பேச வேண்டி இருக்கிறது

நான் தமிழில் பேசும்போது அவர்களில் சிலர் என்னைத் தாழ்வாகப் பார்க்கிறார்கள். அதாவது நான் என்னவோ இந்தியாவிலிருந்து வந்திருப்பதுபோலவும் எனக்கு அவர்களைப் போல் ஆங்கிலம் சரளமாக பேசவராது என்பது போலவும் அவர்கள் நினைக்கிறார்கள். இதனால் நான் உடனடியாக அவர்கள் நினைப்பது தவறு என்று வேகமாக நிரூபித்துவிட்டுத் தமிழில் பேசத் தொடங்கிவிடுவேன்.

தமிழை வசதி குறைந்தவர்களின் மொழியாகக் கருதும் போக்கு (Saravanan, 1998) தமிழில் இருப்பது குறித்துப் பலரும் பேசினாலும் இன்னும் அத்தகைய எண்ணம் நிலவுவதை இவரது கருத்து தெரிவிக்கிறது. தமிழில் பேசுவது மதிப்புக்குறைவானதாக எண்ணும் போக்கு இன்னும் தொடர்வது கவனத்திற்குரியது. தமிழின் சிறப்பு, அதன் தனித்தன்மை குறித்த விழிப்புணர்வு தமிழர்க்கிடையே அதிகரித்திட வேண்டியது அவசியமாக உள்ளதுஉலகளாவிய மொழியின் புழக்கம் நிலவும் பகுதிகளில் சிறுபான்மை மொழியினரில் சிலர் வாழும் நாட்டின் மொழியுடனும் சமூகத்துடனும் இணையும்

நோக்கில் இவ்வாறு சிந்திப்பது உலகின் வேறு சில மொழிகளிலும் இருப்பதை அறியலாம்.

தமிழைப் பிறந்தது முதல் பேசிவரும் இந்த இளையர்கள் தமிழைப் பேசுவதில் உள்ள சிரமங்களைக் குறிப்பிட்டுள்ளனர். இவற்றைச் சில சிறிய தலைப்புகளின் கீழ்ப் பட்டியலிட்டு நாம் ஆராயலாம்.

தமிழினால் என்ன பயன்?

இளையர்களிடம் அடுத்து கேட்கப்பட்ட வினாவாக, சிங்கப்பூரில் தமிழ் தெரிந்திருப்பதால் என்ன பயன் உள்ளது? என்பது அமைந்தது.

சிங்கப்பூரில் தமிழ் அதிகாரத்துவ மொழிகளில் ஒன்றாக இருப்பதும் கல்வித்துறையில் மாணவர்கள் பயில வழி செய்யப்பட்டு இருப்பதும் மக்கள் தொடர்புச் சாதனங்களில் தமிழ் பயில்மொழியாக இருந்துவருவதும் அங்குள்ள இந்தியர்கள் அனைவரும் அறிந்ததே. எனினும், இத்தகு தமிழைத் தெரிந்து வைத்திருப்பதால் என்ன பயன் உள்ளது என்று கேட்டபோது, பலவகையான கூறுகளை அவர்களது கருத்துகள் எடுத்துக்காட்டின.

முதலாம் கூறாக இன, மொழி அடையாளம் என்பது அமைந்தது. தமிழ் மொழி தமிழர்களின் அடையாளம். அது ஒருவகைத் தனித்தன்மை. தனித்துவம் வாய்ந்த அதனைப் பாதுக்கவேண்டும் என்ற கருத்து அதிக உரிமையுடன் வெளிப்பட்டதை இளையர்களின் பதில்களிலிருந்து அறிய முடிந்தது. அவ்வகையில் அறுவர்தம் எண்ணவோட்டத்தைப் பார்ப்போம்.

நமது தாய்மொழி நமது அடையாளம். அது நமது தனித்தன்மை. அதையும் மொழியையும் நாம் பாதுக்காக்க மொழி நமக்கு உதவுகிறது. நமக்குக் கிடைத்துள்ள உரிமைகளை நாம் தொடர்ந்து நன்முறையில் பாதுகாத்து வாழ மொழி வழி செய்கிறது.

தமிழை அறிவதால் நமது மொழியை நாம் காக்க அது உதவுகிறது.நமது அடையாளத்தையும் சிங்கப்பூர் இந்தியர்கள் என்ற தனித்தன்மையையும் கட்டிக்காக்க தமிழ் அறிவு வழிசெய்கிறது.

சிங்கப்பூரில் மலாய்க்காரர்களும் சீனர்களும் அவ்வப்போது தங்களுக்குள் பேசித் தொடர்பு நிகழ்த்துவதுபோல நாமும் நமது மொழியறிந்த இந்தியர்களிடம் தமிழில் பேசி அளவளாவ முடியும்.

சக இனத்தவர்களைப் போலத் தமிழர்களும் தங்கள் இனத்தவருடன் தம் மொழியைப் பேச தமிழ் தமிழர்களுக்கு வழி செய்கிறது.

சிங்கப்பூரில் இந்தியர்கள் 7 விழுக்காடு(தற்போது சுமார்9 விழுக்காடு) என இருக்கிறோம். அவர்களில் சுமார் 63விழுக்காட்டினர் தமிழ் பேசும் திறம்பெற்றவர்கள். இந்தச் சிறிய குழு தனக்கென ஒரு தனித்திறனை அல்லது தனித்துவத்தைப் பெற்றிருக்கிறது. ஆனால் அதை நாம் எப்போது பயன்படுத்துவோம் நாம் நமக்குத்தெரியாது தமிழ் மொழி தமிழர்களின் அடையாளம். தேசியத் தேர்வுகளில் நல்ல மதிப்பெண்களைப் பெற முடியும்.

அது ஒருவகையில் நமது சொத்து. நாம் நமது பண்பாட்டை இன்னும் கட்டிக்காத்து வருகிறோம் என்று நமக்குப் பெருமையையும் தருவது. நாம் அம்மொழியை அறியாதவர்களுக்கு அதனைக் கற்றுத்தந்து அவர்களைப் போட்டிகளுக்கு அனுப்ப வழி கிடைக்கிறது.
பல்லின நாடான சிங்கப்பூரில் தாய்மொழி என்பது ஓர் அடையாளம், உரிமை என்பதுடன் சக இனத்தவர்களைப்போல் தாமும் பொதுக்கூறுகளைப் பெற்று மகிழ்ச்சியாக வாழ்வதை எடுத்துக்காட்டும் அடையாளமாகவும் இளையர்களிடையே தமிழ் மொழி திகழ்வதை இங்கு உணரமுடிகிறது.

மகிழ்ச்சி, வாழ்வில் உயர்ச்சி ஆகியவற்றைத் தரும் வகையிலும் தாய்மொழி அமைவதை அறியமுடிகிறது. தமிழ்மொழி, ஒருவருக்கு அவரது நண்பர்களிடையே நெருக்கத்தை ஏற்படுத்துவதுடன், ஒருவர் நல்ல மதிப்பெண்கள் பெறவும் வழிவகுப்பது என்று கூறப்படுகிறது. தமிழை அறிந்த மற்றும் தமிழில் வாழ்வை நடத்தும் மாணவர்களுக்குத் தாய்மொழியில் நல்ல தேர்ச்சி என்பது எளிதில் கைவரப்பெறுவதில் வியப்பில்லை. எனினும் தமிழைப் பேசாத மாணவர்களுக்கு, குறிப்பாகத் தமிழில் தேர்ச்சி பெற அதிகம் போராடும் மாணவர்களைப் பொறுத்தவரை சிறந்த தேர்ச்சி என்பது வேறுபட்ட செய்தியாக அமையும். எனினும் தொடர்ந்து வீட்டில் பெற்றோரும்

தமிழாசிரியருடன் இணைந்து அணுக்கமாகச் செயல்படும்போது, எந்த மாணவரையும் நன்கு மேம்படுத்த இயலும். ஒருவர் இருமொழித் திறம் பெற்றவராக இருப்பது சிங்கப்பூரில் மிகவும் முக்கியமானது.அதே நேரம் ஒருவர் தம் தாய்மொழியை அறிந்திருப்பதும் இன்றியமையாதது என்ற கருத்து மாணவர்கள் தாய்மொழியில் சிரமமின்றிக் கற்கவும் தேர்வுகளை எழுதி உயரவும் வழிவகுக்கிறது எனலாம்.

தமிழை அறிந்திருப்பதால், பிற இந்தியர்களிடமும் தமிழ் மட்டும் தெரிந்த மூத்த குடிமக்களிடமும் பொழுதுபோக்குத்துறையிலும் தமிழைப் பயன்படுத்தித் தொடர்புகொள்ள முடியும். மேலும், பண்பாடு, பாரம்பரியம் ஆகியவற்றைப் பற்றித் தெளிவாகத் தமிழில் விளக்கமுடியும் என்பது தமிழை அதிகம் பேசுவோரில் மூத்த குடிமக்கள் முக்கிய இடம்பெறுவதை எடுத்துக்காட்ட மறவவில்லை. தாய்மொழியில் அது குறித்த பாரம்பரியத்தையும் பண்பாட்டையும் பற்றி அறிவதும் பேசுவதும் அவ்வம்மொழியினருக்கு உள்ளத்தோடு ஒட்டி உறவாடும் ஓர் அம்சம் என்பதை இங்கு அறிய முடிகிறது. அத்துடன் தமிழ்மொழி அறிவின் உதவியோடு தமிழ் வாழ்வு, பாரம்பரியம் பற்றி அறிந்து சக சிங்கப்பூரர்களுக்கும் பிற நாட்டவர்களுக்கும் எடுத்துக்கூறித் தமிழர்களைப் பற்றிய அவர்களது புரிந்துணர்வை அதிகப்படுத்தமுடியும் என்பது தெரியவருகிறது. இது பல்லினப்பண்பாட்டை உள்ளூர் மற்றும் உலக அளவில் வளர்க்க வழிவகுக்கும் என்பது குறிப்பிடத்தக்கது.

தமிழை அறிந்த ஒருவர் தமிழுடன் நேரடியாகத் தொடர்புடைய ஆசிரியர் பணி, நீதிமன்றத்தில் மொழிபெயர்ப்பாளர், மக்கள் தொடர்புச் சாதனங்களில் படைப்பாளர், தயாரிப்பாளர், எழுத்தாளர் போன்ற பணிகளில் ஈடுபட அதிக வாய்ப்புகள் இருப்பினும் தமிழுடன் நேரடியாகத் தொடர்பில்லாத பணிகளிலும் மேம்படக்கூடிய பல தனி வாய்ப்புகளைத் தமிழ் மொழி வழங்குகிறது. இங்கு ஒருவர்தம் கருத்து அதைப் புலப்படுத்துகிறது.

நான் எனது வேலையில் சில சமயங்களில் தமிழ் பேசும் சகபணியாளர்களிடம் பயன்படுத்துவேன். குறைந்த வருவாய்த் தொழிலாளர்களுக்காக எனது வேலை தொடர்பான கையேடுகளைத் தயாரிக்கத் தமிழைப் பயன்படுத்தி மொழிபெயர்ப்பில் ஈடுபடுவேன்.

**உலகஅளவிலான பயன்கள்**

சிங்கப்பூரில் தமிழ் மொழியின் நிலை, அதன் மதிப்பு, அதனால் கிடைக்கும் பயன், அது குறித்த உள்ள அளவிலான தாக்கம் ஆகின குறித்துப் பார்ப்போம். இந்தத் தமிழ் சிங்கப்பூருக்கு வெளியில் பயன்படுத்தப்படும்போது அல்லது உலக அளவில் இதற்கு என்ன பயன் என்று கேட்டபோது இளையர்களின் சிந்தனை இன்னும் ஒரு படி மேலே சென்றுவிட்டதை உணரமுடிகிறது. தமிழின் இன்றைய நிலை வரையிலான அதன் பழமை, அதன் தனித்தன்மை, அது தமிழர்க்குத் தந்துள்ள சிறப்பு, தமிழர் அதைப் பொத்திப் பாதுகாத்து வளர்க்க என்ன செய்யலாம் என்ற கருத்துகளை அவர்களது எண்ணங்கள் எடுத்துக்காட்டின. அவை பற்றிப் பார்ப்போம்:

தமிழ் மொழி செம்மொழி எனும் சிறப்பைப்பெற்ற மொழி. இந்த மொழி வளர்ந்த மொழி என்பதை அதன் எழுத்து மற்றும் பேச்சு மொழி வடிவங்களும் இலக்கிய, இலக்கண வளர்ச்சிகளும் எடுத்துக்காட்டுகின்றன. இந்தப் பெருமையே அதன் உலகளாவிய பயனுக்கான சிறப்பு என்கிறார் இளையர் ஒருவர்.

இன்னும் தனது எழுத்து மற்றும்பேச்சு வடிவத்தைத் தக்கவைத்திருக்கும் பழமையான மொழிகளில் ஒன்றாக அமைகிறது. எனவே தமிழை அறிவது நமக்குப் பெருமையையும் அதனுடனான நமது தொடர்பையும் எடுத்துக்காட்டுகிறது.

ஒரு மொழிக்கு அதன் சந்ததியர் தரும் சிறப்பைவிட அம்மொழி அவர்களுக்குத் தரும் சிறப்பு வரலாற்றில் ஆழ இடம்பெற வேண்டிய ஒன்று. அவ்வகையில் இங்கு தமிழ் மொழியானது தமிழர்க்குச் சிறப்பைத் தந்துள்ளது என்பதை அவரது கூற்று எடுத்துக்காட்டுகிறது.

தமிழர்கள் நீண்ட பாரம்பரியம், பண்பாட்டுக்குச் சொந்தக்காரர்கள். வளர்ந்த நாகரிகங்களைக் கொண்ட சமூகங்களுள் ஒன்றாகத் தமிழ்ச்சமூகம் பல நூற்றாண்டுகளுக்கு முன்பே திகழ்ந்துள்ளது. எனினும் இன்று இந்த மொழி பொருளியல் நோக்கில் பயன்தருகிறதா என்றால் அவ்வளவாக இல்லை

என்று கூறலாம். ஆனால் பணம் மட்டுமே இலக்கா என்றால் இல்லை என்றும் வாழ்வின் உயிர்மூச்சாக ஒருவருக்கு அவரது தாய்மொழி விளங்குகிறது என்றும் அவரது அடையாளத்தை அவருக்குத் தருகிறது என்றும் அவரது வாழ்வில் பண்பட்டவராக அவரை வடிவமைக்க அது உதவுகிறது என்றும் கூறலாம். இவ்வகையில், இன்றைய இருபத்தோராம் நூற்றாண்டில் புலம்பெயர்ந்த இந்தியர்களை இணைக்கவும் அவர்கள்தம் திறன்களைப் பறைசாற்றவும் அத்திறன்களைப் பிறரும் அறிந்து கைவரப்பெறவும் உதவும்வகையில் தமிழ் மொழி தனது பரிணாம வளர்ச்சியைக் கொண்டிருப்பதை அறிய முடிகிறது.

நீண்ட பாரம்பரியம் மற்றும் பண்பாட்டுக்குச் சொந்தக்காரர்கள் என்ற ஒரு பெருமிதத்தைத் தருகிறது. இந்த மொழியை அறிவதால் எந்தவகையிலும் பொருளியல் அல்லது உலக அளவிலான பயனும் இல்லை. தமிழ் இன்று உலகமுழுதும் பயன்படுத்தப்பட்டு வருகிறது. அனைத்துலக ஒளிவழிகளைத் தொடர்ந்து கவனிக்கும்போது பிற நாடுகளில் குடியேறியுள்ள இந்தியர்களிடையே தொடர்பை உண்டாக்கத் தமிழ் ,ஒரு வழியாக அமைந்துள்ளது. இதனால் அது உலகில் உள்ள இந்தியர்களைப் பிணைக்கவும் நம்மை இணைத்துக் கொள்ளவும் வழி செய்கிறது. நாம் பிறருடன் தொடர்பு கொள்ளவும் நமது பண்பாடுகளைப் பகிர்ந்துகொள்ளவும் இயலும்.

எந்த ஒரு மனிதரும் தமக்கென உள்ள உயிரொத்த சில அடையாளங்களைச் சாதாரணமாக விட்டுவிடுவதில்லை. அது தம் வரலாறாக இருக்கட்டும், தமது மூதாதையராக இருக்கட்டும், தம் நாடாக இருக்கட்டும், தம் குடும்பவாரிசாக இருக்கட்டும், தம் உயர்வாக இருக்கட்டும், தம் பெயராக இருக்கட்டும், தம் சாதனையாக இருக்கட்டும், 'தானாடாவிட்டாலும் தன் சதை ஆடும்' என்பதுபோல ஒல்லும் வகையெல்லாம் அதைப் பற்றிப் பேசாமலும் சிந்திக்காமலும் இருக்கமாட்டார். முடிந்தால் அத்தகு சிறப்பை அல்லது சிறப்புகளைப் பொன்னெழுத்துகளில் பொறித்து அடுத்துவரும் தலைமுறையும் உலகத்தின் மக்களும் உய்த்துணர வழி செய்துவிட்டுப் போவார். இங்கும் ஓர் இளையர், தமது ஆய்வுக்குத் தம் தாய்மொழியின் இலக்கியச்சொத்துகள் வழிவகுப்பதாகக் கூறுகிறார்.

தமிழை உலகளவில் நோக்கும்போது தகவல் தொழில் நுட்பத்தில் அதைப் பயன்படுத்த வழிகள் உள்ளன. அதனால் செய்யுள், கட்டுரைகள், திருக்குறள், மூதுரை போன்றவற்றை இணைந்து ஆய்வு அறிக்கைகளைத் தட்டச்சுச் செய்யமுடியும்.

மற்றோர் இளையரோ,

தமிழை அறிந்திருப்பதால் உலக அளவில் பட்டத் தொழிலர்களுடன் வேலை புரியும் வாய்ப்பானது கிடைத்துள்ளது. சில விழுமங்கள், பண்பாடுகள், பாரம்பரியம், மரபு ஆகியவற்றைப் பிறருக்குக் கற்றுத்தரவும் அவர்களிடம் எடுத்துக்கூறவும் உலக அளவில் வழி உள்ளது என்கிறார்.

தமிழ் மொழி தன்னைப் பரந்த உலகில் மேம்படுத்திக்கொள்ள வழிவகைகள் இருப்பதையும் அதன் மொழிவழிக் குடிமக்கள் தொடர்ந்து தலைநிமிர்ந்து நிற்கவும் தன்னம்பிக்கை பெறவும் அம்மொழி வழிவகுக்கிறது என்பதையும் இளையர்கள் கருத்தாகப் பெற முடிந்தது.

## சிங்கப்பூரில் தமிழின் பயன்பாடு

சிங்கப்பூரில் தமிழர்களிடையே தமிழ்மொழியின் பயன்பாடு எவ்வாறு அமைந்துள்ளது என்பது காலங்காலமாகப் பல ஆய்வுகளின் வழியே (Sobrielo, 1986; Mani & Gopinathan, 1983; Ramiah, 1990, 1991, 2000; Thinnappan, 1993; Saravanan, 1993,1998,1999, 2001; MOE,2005, 2011, Lau,1993 in Chitra Shegar & Ridzuan, 2005, Vaish, Jamaludeen & Roslan, 2006, Seetha Lakshmi & Saravanan, 2009) தெரியவந்துள்ளது. இந்த இளையர்கள் தாம் வாழும் சூழலில் தமிழின் பயன்பாட்டை எவ்வாறு நோக்குகிறார்கள் என்று கேட்டபோது அவர்களது ஆதங்கத்தையும் ஆற்றாமையையும் அவர்களது எண்ணப்பதிவுகள் வழியே அறிய முடிந்தது. அவற்றைப் பார்ப்போம்: மக்கள் தமிழில் ஆங்கிலத்தைக் கலந்து 'தமிலிஷா'க ஆக்கிக் கெடுத்துவிடுகிறார்கள். இந்தியர்களிடையே தமிழ் மொழி பயன்படுத்தப்படுகிறது. ஆனால் அவ்வப்போது அல்ல.

சிங்கப்பூரில் தமிழ், பயன்படுத்தவேண்டிய நிலைக்குக் குறைவாகப் பயன்படுத்தப்படுகிறது. நமது குழந்தைகளுக்குத் தமிழில் அதிகம் பேச நாம் சொல்லித்தரவேண்டும்

நான் தொடக்கப்பள்ளியில் இருந்தபோது நான் தமிழில் நிறையப் பேசினேன். ஆனால் இப்போதைய குழந்தைகள் ஆங்கிலத்தில் அதிகம் பேசுகின்றனர். அதனால் தமிழின் பயன்பாடு குறைந்துவிட்டதென நான் கருதுகிறேன் இன்னும் சிறப்பாகப் பயன்படுத்தப்படலாம் என்று நினைக்கிறேன். தொடர்புச் சாதனங்கள் ஆங்கிலத்தை அதிகமாகப் பயன்படுத்துகின்றன என்பதுடன் அந்தப் போக்கு மக்களிடம் அப்படியே சென்று சேர்கிறது. தமிழைப் பேச ஒரு மாதம் என்று வைத்திருப்பது போதாது.

சிங்கிலிஷ் தமிழ், பேச்சுத்தமிழ் என்பவற்றில் அதிகம் கவனம் செலுத்துவதால் எழுத்துத்தமிழ் பாதிக்கப்படுகிறது. சில அதிகாரப்பூர்வ நூல்களிலும் அதிக எழுத்துப்பிழைகள் என்கிறார் இவர். சரியான ஆதாரமில்லாமல் அவரது கூற்றைத் தெளிவாக எடுத்துக்கொள்ள இயலவில்லை. மக்கள் பேசும்போது ஆங்கிலத்துக்கும் தமிழுக்கும் இடையே இங்குமங்கும் தாவுகிறார்கள். குறிப்பிடத்தக்க அளவில் தமிழின் பயன்பாடு குறைந்துள்ளது. அத்துடன் தமிழைப் பேச முனைவோரும் அதன் ஒலிப்பினை முறையாகப் பயன்படுத்துவதில்லை.

பரவாயில்லை. இன்னும் மேம்பாட்டுக்கு இடமுண்டு; வாய்ப்புகளுண்டு. தொடர்புச் சாதனங்கள்(வசந்தம், ஒலி) நல்லதொரு பங்கை ஆற்றிவருகின்றன. மக்கள் பயன்படுத்துகிறார்கள். இளையர்களிடையே ஆங்கிலத்தில் உரையாடுவது மிகவும் வசதியாக இருப்பதால், தமிழைக் குறைவாகப் பயன்படுத்துகிறார்கள். கல்வித்துறையில் தமிழின் பயன்பாடு கட்டாயம் தேவை என்ற நிலையில் பயன்படுத்துகிறார்கள். அதே நேரம் அது வேலைக்குப் பயன்படும் என்று அவர்கள் எண்ணவில்லை. இந்தியாவுடன் வேலை செய்யும்போது அது பயன்படுகிறது என்று நினைக்கிறார்கள் என்று கருத்துகள் கூறப்பட்டன. இக்கருத்துகளை ஆழமாக நோக்கும்போது, தமிழின் பயன்பாடு தங்கள் காலத்துடன் ஒப்பிடும்போது சிறுவர்கள், இளையரிடையே குறைந்துவிட்டது என்பதை இவர்கள் தெளிவாக எடுத்துரைப்பதை

உணரமுடிகிறது. மேலும், தமிழ் மொழியானது ஆங்கிலத்தைப்போல் பயன்படுத்த வசதியானதாக அமையவில்லையோ என்பதும் குழந்தையிலிருந்து அதிகம் பேசப் பெற்றோர் ஊக்குவிக்கவேண்டும் என்றும் கல்வித்துறையில் இருப்பது அதன் தொடர்ந்த வளர்ச்சிக்கு வழிவகுக்கிறது என்பதும் அவர்களது கூற்றுகளிலிருந்து தொனிக்கின்றன.

அவர்களது விருப்பமாகத் தமிழை அதிமானோர் அதிகமாகப் பேசவேண்டும் என்பதும் அதைத் தொடர்ந்து வளர்க்கவேண்டும் என்பதும் அமைந்திருப்பதையும் நாம் உணரமுடிகிறது.

தங்களைத் தமிழர்களாகக் கருதும் இந்த இளையர்கள் தங்களைக் திறம்பெற்ற இருமொழியாளர்களாகக் குறிப்பிடும் இந்த இளையர்கள் தங்களைத் தமிழர்களாகத் தன்னம்பிக்கையுடன் குறிப்பிடுகிறார்கள். அத்தகைய இவர்கள் தங்களது பெற்றோர் சிறுவயதில் வீட்டில் தமிழ் பேசியதையும் தமிழில் நிகழ்ச்சிகளைக் கேட்டதையும் பார்த்ததையும் தமிழ் வகுப்புகளில் தமிழ் படித்ததையும் குறிப்பிட்டுச் சொல்கிறார்கள். அவர்களது கருத்துகளின் ஊடே, தமிழை வளர்ப்பதற்கு இந்த மூன்று கூறுகளும் மிகவும் இன்றியமையாதன என்பதையும் நாம் உணரமுடிகிறது.

இங்கு மேலே கூறப்பட்ட கருத்துகள் தொடர்பாகச் இல்லங்களிலும் தமிழ் வகுப்புகளிலும் சமூகத்திலும் சில நடவடிக்கைகளை எடுக்கலாம் என்று பரிந்துரைக்கலாம். அவ்வகையில் வகுப்பறையில் இடம்பெறும் ஆசிரியவியல் குறிப்பிடத்தக்க இடம் பெறுகிறது. இப்போது பரிந்துரைகளைப் பார்க்கலாம்:

- மாணவர்களுக்கு ஆரம்ப வகுப்புகளில் மொழியுடன் உறவாடும் நேரம் அதிகரிக்கப்படலாம்.

- தமிழில் மாணவர்கள் இயல்பாகப் பேச ஊக்குவிக்கும்வகையில் ஆசிரியர்கள்

பேச்சுத்தமிழைத்தொடர்ந்து ஊக்குவிக்கலாம் (Seetha Lakshmi> Viniti Vaish, Gopinathan, Saravanan V., 2006; Saravanan, Lakshmi & Caleon, 2009). வீட்டில் தரமான பேச்சுத்தமிழைப் பேசாத குழந்தைகளின் பலவகையான

தமிழ் வகைகளை வகுப்பில் அவர்கள் பேச அனுமதிக்கலாம். ஒரு மொழியின் பலவகைகளை மாணவர்கள் கேட்க அனுமதிப்பது அவர்களது மொழித்திறமையை மேம்படுத்தும்(யளடழர ரு ஊாசளைவழனழடழர, 2001). பிறகு மெல்ல மெல்ல அவர்களுக்குத் தரமான பேச்சுத்தமிழை அறிமுகப்படுத்தலாம். ஏனெனில் அவர்களது வழியில் சென்று அவர்கள் பேச ஊக்கம் பெறுவது நீடித்த பயனைத்தரும்.

- தமிழைப்பேசாத குடும்பத்துக் குழந்தைகள் தங்கள் நண்பர்கள் வகுப்பில் பேசும் தமிழை அதிகம் கேட்க வழிசெய்வதன் வாயிலாக அவர்களது தமிழ் பேசும் திறன் மெல்ல மேம்படும்.

- பாலர் பள்ளியிலும் தொடக்கப்பள்ளியில் முதல் ஓராண்டும் மாணவர்களுக்கு அவர்களுக்கு விருப்பமான சிறுவர் பாடல்கள், கதைகள், சிறுவர் சார்ந்த சிறப்புப்படங்கள் ஆகியன குறித்து அதிகமான மொழி இடைவினையாடல் இடம்பெறுவது பயனளிக்கும். இங்கு வகுப்பில் மாணவர்கள் அதிகமாகப் பேச வழி வகுக்கும் மாணவரை மையமாகக் கொண்ட பாடங்கள் இடம்பெறுவது நல்ல பயனைத்தரலாம்.

- மாணவர்கள் தமிழில் தன்னம்பிக்கையுடன் பேசும்வகையில் ஆசிரியர் மாணவர்களுக்கு அதிக உரிமை தந்து அவர்களது வாழ்வியல் அனுபவங்களைப் பிறருடன் பகிர்ந்திட வழிசெய்யலாம்.

- பெற்றோர் தமது குழந்தைகளிடம் தாய்மொழியை அவர்களது பிறப்புமுதல் பேச சிரத்தையெடுத்துச் செயல்படுவது பெரும் பயனளிக்கும். எந்த ஒரு குழந்தையும் தான்வாழும் பண்பாட்டுடன் தொடர்புடைய மொழியைப் பிறந்ததுமுதல் பேசும்போது அதன் அறிவுவளர்ச்சி மேன்மையுறும். ஏனெனில் அக்குழந்தை அது ஆரம்பத்தில் பெற்ற தாய்மொழிப்புழக்கம், அதன்வழியே பெற்ற பண்பாட்டு அறிவு, வாழ்வியல் அனுபவங்கள் ஆகியன பின்னாளில் ஆங்கிலம் போன்ற பிறமொழிகளைக் கற்க ஊன்றுகோலாக நின்று உதவும்.

- குழந்தைகளாக இருக்கும்போது அவர்கள் குடும்பத்தினர், உறவினர்கள், நண்பர்களுடன் தமிழில் உறவாடும்வகையில் பலவகையான விழாக்களைப் பெற்றோர் ஏற்பாடு செய்யலாம். தமிழைக் குழந்தைகள் நன்கு பேசவேண்டும் என்ற ஒரு நீண்டகால நோக்குடன் இதைச் செயல்படுத்தலாம். ஏனெனில் இதற்கு ஏற்ற வயது தொடக்கப்பள்ளி வயதாக அமைவதுதான் இதன் தனிச்சிறப்பு.

- உயர்நிலை வகுப்புகளில் மாணவர்களின் வயது, வாழ்வியல் சிந்தனைகள், பதின்மவயதுச் சிக்கல்கள் ஆகியன சார்ந்த செய்திகளை, கலந்துரையாடல்களைப் பயன்படுத்திப் பாடங்களையோ உரையாடல்களையோ வடிவமைப்பது மொழியை அதிகமாகப் பயன்படுத்தவும் தன்னம்பிக்கையுடன் பேசவும் தமிழ்ப்பண்பாட்டின் நுண்ணிய கூறுகளை அறிந்து வாழ்வில் போற்றவும் வழிசெய்யும். அதிக அளவில் சிந்தனைத்திறன்களைப் பல நிலைகளில் பயன்படுத்த வழிவகுப்பது(Chitra Shegar> Ridzuan M.> 2005) மாணவர்களின் மொழிப் புழக்கத்திறன்களையும் மேம்படுத்தும்.

- தினசரிச் செய்தித்தாள்கள், வானொலி, தொலைக்காட்சி நிகழ்ச்சிகள், சிந்தனையைத் தூண்டும் மின்னஞ்சல் செய்திகள், யூ-ட்யூப் படைப்புகள் ஆகியன மாணவர்களின் பாடங்களில் அதிகமாக இடம்பெறுவது தமிழில் செய்திப்பரிமாற்றத்தை நிகழ்த்தவும் கருத்துகளை வெளிப்படுத்தவும் வழிவகுக்கும்.

- சமூக நிகழ்வுகள் இளையர்களை ஈர்க்கும்வகையில் அமைவதும் இளையர்கள் தலைமையேற்று நடத்தும்வகையில் அமைவதும் இளையர்கள் பங்கேற்கும்வகையில் பள்ளி விடுமுறைக்காலங்களில் இடம்பெறுவதும் பயன்தரும்.

இல்லம், பள்ளி, சமூகம் என்ற மூன்றும் இணைந்து மொழி வளர்ச்சி, பராமரிப்பு, இருமொழியத்திறன் மேம்பாடு ஆகியவற்றுக்கான நாட்டின் முனைப்புகளைத் தொடர்ந்து செயல்படுத்தும்போது தமிழின் புழக்கம் தொடர்ந்து அதிகரிக்கும்.

**வரம்புக்குட்பட்டது**

இந்த ஆய்வு சில வரம்புகளுக்கு உட்பட்டது. இது, மிகச்சில இளையர்களிடமே மேற்கொள்ளப்பட்டது. இது, மொழி தொடர்பான அனைத்துக்கோணங்களிலும் தரவுகளைத் திரட்டிய ஆய்வு அல்ல. எனவே இது கூறும் முடிவுகள் ஒட்டுமொத்தத் தமிழ் இளையர்களின் சிந்தனைகளைப் பிரதிபலிக்கும் என்று கூற இயலாது. அதே நேரம் இந்த இளையர்களின் கருத்து சில செய்திகளை எடுத்துரைக்க வழிசெய்கின்றன என்பதை மறுக்காமலும் இருக்கவியலாது என்பதை ஆய்வாளர் இங்கு தெரிவித்துக்கொள்கிறார். இத்தலைப்பில் இடம்பெறும் அடுத்தநிலைக் கட்டுரை கூடுதல் செய்திகளை வழங்கும் எனலாம். மேலும் இத்தலைப்பு, இதனுடன் தொடர்புடைய தலைப்புகளில் அதிக அளவிலான ஆய்வுகள் நிகழ்த்தப்படுவது கூடுதல் பயனைத் தரும்.

**முடிவுரை**

எந்த ஒரு மொழியும் ஒருவருக்கு மூச்சுபோன்றது. அந்த மூச்சு தொழிலுக்காக மட்டும் என்று இல்லாது உணர்வுடன் கூடிய உயிர்வாழ்வுக்கும் இன்றியமையாதது. அத்தகைய உயிர்வாழ்வுக்கான மொழியாகத் தாய்மொழியும் இருப்பது ஒருவருக்கு நிலையான அடையாளத்தையும் பண்பாட்டுச் சிறப்பையும் தன்னம்பிக்கையையும் தரும். சிங்கப்பூர் போன்ற வளர்ந்த நாட்டில் தமிழுக்கு அரசாங்கம் தந்துள்ள வாய்ப்புகளைப் பெற்ற தமிழர்கள் மிகவும் கொடுத்துவைத்தவர்கள். அத்தகைய தமிழர்கள் தங்களுக்கு முன்பு இங்கு பிழைப்புக்காகக் குடிபெயர்ந்த முன்னோர் தமிழை நன்கு உயர்த்தி அதற்கு நிலையானதொரு பெயரையும் சிறப்பையும் வாழ்வையும் வசதியையும் வாங்கி நம்மிடம் தந்துவிட்டுச் சென்றுள்ளனர். பெற்றோரின் சொத்துகளை மகிழ்ச்சியுடன் அனுபவிக்கும் குழந்தைகள் அந்தப் பெற்றோருக்குச் செய்யும் நன்றிக்கடனாக, கடப்பாடாகத் தங்களது அடுத்த தலைமுறைக்கு இன்னும் அதிகமாகச் செய்துவிட்டுச் செல்வதை உலகம் எதிர்பார்க்கிறது. மனிதகுலம் தொடர்ந்து கற்பித்துவரும் இந்த உண்மையைத் தற்போதைய சிங்கப்பூர்த் தமிழர்கள் தமிழைப்பேசி, பாதுகாத்து, அதை வளர்த்துக் கூடுதல் பெருமையுடன் தங்களது அடுத்த தலைமுறைக்கு வாழையடி வாழையாக விட்டுச் செல்லலாம். இந்த ஒன்றைச் செய்வதன்வழியே

உலகமுழுதும் வதிந்துவரும் புலம்பெயர் தமிழர்களுக்குச் சிங்கப்பூர் ஒரு பெரும் முன்னோடியாகத் திகழ்ந்துவருவது தொடர்ந்து மேம்படும்.

இளையர்களில் ஒருவர் கூறிய கருத்தையே இங்கு முத்தாய்ப்பாகத் தருவது பொருத்தமுடையதாக இருக்கும் என்ற முறையில் அவரது கருத்துடன் கட்டுரையை முடித்திடுவோம்!

தமிழ் மொழியை அறிந்திருப்பது என்பது நமது பண்பாடு. தமிழ் மொழியிலிருந்துதான் நாம் வந்துள்ளோம். அதை நாம் கைவிட்டுவிட்டால் நாம் இந்த உலகளாவிய சூழலில் யார் என்ற அடித்தளம் இல்லாது போய்விடுவோம். நமது சமூகம் நம்மைப் பிணைக்கிறது. அது நமக்கு நமது நம்பிக்கைகளையும் விழுமங்களையும் எடுத்துக்கூறுகிறது; தருகிறது.

## 9. சிங்கப்பூரில் தமிழும் தமிழ்க் கல்வியும்

**பேராசிரியர் முனைவர் சுப.திண்ணப்பன்**
சிங்கப்பூர் தேசிய பல்கலைக்கழகம்
சிம் பல்கலைக்கழகம்
சிங்கப்பூர்.

சிங்கப்பூர் தென்கிழக்காசியாவில் உள்ள ஒரு சிறு தீவு. அதன் பரப்பளவு 715.8 சதுரக் கிலோமீட்டர். அதன் மக்கள் தொகை 5.3 மில்லியன். இவர்களில் சீனர்கள் 74%, மலாய்க்காரர்கள் 13.6%, இந்தியர்கள் 9.4% ஏனையோரில் மலையாளிகள், தெலுங்கர்கள், குஜராத்திகள், பஞ்சாபியர் முதலியோர் அடங்குவர். இங்கு வாழ்வோரில் பௌத்தம். தௌவிசம் ஆகிய சமயத்தினர் 51%, இசுலாமியர்கள் 15% கிறித்துவர் 15% இந்துக்கள் 4% ஆவர். சிங்கப்பூரின் தேசிய மொழி மலாய்மொழி. சீனம், மலாய், தமிழ், ஆங்கிம் ஆகிய நான்கும் அதிகாரத்துவ மொழிகள். இருப்பினும் ஆங்கிலமே அலுவலக மொழியாகவும், கல்வி நிலையங்களில் பயிற்றுமொழியாகவும், பல்வேறு இனத்தவரின் தொடர்பு மொழியாகவும் கோலோச்சுகிறது. சிங்கப்பூர் ஒரு குடியரசு நாடு. இப்போது அதிபராக (குடியரசுத் தலைவராக) இருப்பவர் டாக்டர் டோனி டான். இவருக்கு முன் 12 ஆண்டுகள் அதிபராக இருந்தவர் திரு எஸ்.ஆர்.நாதன் என்னும் தமிழர். இவர் பொதுமக்களால் போட்டியின்றித் தேர்ந்தெடுக்கப்பட்ட அதிபர்.

சிங்கப்பூரின் பழைய பெயர் சிங்கபுரம். இப்பெயர் சிலப்பதிகாரத்தில் கோவலரின் முற்பிறவி தொடர்பான ஓர் ஊர்ப் பெயராகக் குறிக்கப்பட்டுள்ளது. எனவே பெயரளவில் சிங்கப்பூருக்கும் சிங்கபுரத்துக்கும் ஒரு தொடர்புள்ளது. நவீன சிங்கப்பூரைச் சார்ந்த சர் ஸ்டாம்போர்டு ராபிள்ஸ் என்னும் ஆங்கிலேயர் 1819-இல் உருவாக்கினார். இவரோடு பினாங்கிலிருந்து வந்த நாராயணபிள்ளையும் ஏனைய தமிழர்களுமே, தமிழ் இந்நாட்டில் வழங்கக்

காரணமாவர். பிறகு, தமிழகத்தின் சோழமண்டலப் பகுதியிலிருந்து தமிழர் பலர் இந்நாட்டில் பல்வேறு பணிகளைச் செய்யக் கொண்டுவரப்பட்டனர். இவர்கள் இங்கே தங்கி வாழ்ந்தனர். இவர்கள் சோழியர் எனப்பட்டனர். சோழியர் தெரு என ஒரு தெரு இன்றும் இங்கு உள்ளது. 1824-இல் நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் இங்கு வந்து கொடுக்கல், வாங்கல் தொழில் நடத்தத் தொடங்கினர். இலங்கையிலிருந்தும் தமிழர்கள் சிங்கப்பூருக்கு வந்து பல்வேறு அலுவலகப் பணிகளில் ஈடுபட்டனர்.

சிங்கப்பூரின் முதல் இந்துக் கோயிலான மாரியம்மன் கோயிலில் ஒரு தமிழ்க் கல்வெட்டு உள்ளது தமிழகத்திலுள்ள கடலூரைச் சார்ந்த சேஷாசலம் பிள்ளை என்பவர் இக்கோயிலிலுள்ள இராமர் திருவடிக்கு 1828இல் கொடுத்த நன்கொடை பற்றிய குறிப்பு ஒன்று இக்கல்வெட்டில் உள்ளது. இதுவே இங்குள்ள முதல் தமிழ்க்கல்வெட்டாகும்.

மலேசியா, சிங்கப்பூர் தமிழ் இலக்கிய வரலாற்றை நோக்கும்போது சிங்கப்பூரில்தான் முதல் தமிழ் இலக்கியம் உருவாயிற்று. 1887-ஆம் ஆண்டு யாழ்ப்பாணம் சதாசிவ பண்டிதரால் இயற்றப்பட்டுச் சிங்கப்பூரிலேயே அச்சிடப்பட்டு வெளியிடப்பட்ட சிங்கைநகர் அந்தாதி சித்திரக் கவிகள் என்னும் இரண்டு நூல்களாகும். இது புலவர் இலக்கியம் இதனைத் தொடர்ந்து பொதுமக்கள் இலக்கியமாக 1893-இல், ரங்கசாமிதாசன் என்பவர் குதிரைப் பந்தயலாவணி என்னும் நூலை இயற்றியுள்ளார்.

சிங்கப்பூரில் முதல் சீனமொழி நாளிதழ் 1881-ஆம் ஆண்டில் தோன்றுவதற்கு முன்னரே, தமிழ்மொழியில் செய்திப் பத்திரிகை இருந்தது என் ஆய்வாளர்கள் கூறுவார்கள். (திருநாவுக்கரசு வை. 1979, 72) 1887-இல் சிங்கையிலிருந்து வெளிவந்த சிங்கைநேசன் என்ற வார இதழ்தான் இப்போது காணக்கிடைக்கும் முதல் தமிழ்ப் பத்திரிகை. இதன் முதல் நேசன், ஞான சூரியன் ஆகிய தமிழ்ப் பத்திரிக்கைகளைக் குறிப்பிடுகிறது. ஆயினும் இவை கிடைக்கவில்லை. இப்போது சிங்கையில் இருக்கும் ஒரே தமிழ் நாளிதழ் தமிழ் முரசு ஆகும். இது மலேசிய சிங்கப்பூர்த் தமிழ் வளர்ச்சிக்கு ஆற்றியிருக்கும் தொண்டு அளவிடற்கரியது. 924-இல் தமிழகம் திருவாரூரிலிருந்து சிங்கப்பூருக்கு வந்த தமிழவேள் கோ.சாரங்யபாணி சிங்கை மலேசியத் தமிழ் வளர்ச்சிக்கும் வித்திட்டவர் எனலாம். தமிழ் எங்கள்

உயிர் என்னும் குறிக்கோளுடன் நிதி திரட்டி அவர் 1956-இல், சிங்கப்பூர் பல்கலைக்கழகத்தில் தமிழை முதன்மையாகக் கொண்ட இந்திய ஆய்வுத் துறை தொடங்க வழி செய்தார். பின்பு 1959-இல், இத்துறை கோலாலம்பூருக்கு மாற்றப்பட்டது.

சிங்கப்பூரில் இப்போது வானொலி 96.8 ஒலி என்பத இருபத்து நான்கு மணிநேர தமிழ் ஒலிபரப்பினைச் செய்து வருகிறது. தொலைக்காட்சியும் நாள்தோறும் கணிசமான அளவில் தமிழ் ஒளிபரப்பினைச் செய்து வருகிறது. இவற்றின் தமிழ்ச்செய்தி அறிக்கைகளில் நல்ல தமிழ் நடமாடும். இவற்றின் வாயிலாகத் தமிழ்மொழியும் இலக்கியமும் சிங்கப்பூரில் நல்ல வளர்ச்சி கண்டுள்ளன.

தமிழ்மொழியில் அண்மையில் ஏற்பட்ட 13 எழுத்துச் சீர்திருத்தம் பற்றிய சிந்தனையைப் பெரியாருக்கு முதன்முதலில் எழுதிக் கட்டுரையாகக் ‘குடியரசு’ இதழில் 1933-இல் வெளியிட்டவர் சிங்கப்பூரைச் சார்ந்த அ.சி.சுப்பையா என்பவரே ஆவார். தமிழக அரசு அறிவித்த எழுத்துச் சீர்திருத்தத்தை 1982-இல் முதன்முதலில் ஏற்றுச் செயல்படுத்தியதும் சிங்கப்பூரே ஆகும்.

தென்கிழக்காசியாவிலேயே தொடக்கநிலை முதல் உயர்நிலை இறுதிவரை தமிழில் பலபாடங்களைக் கற்பித்த ஒரு பள்ளியாக ஓர் உயர்நிலைப்பள்ளியாக ‘உமறுப்புலவர் தமிழ்ப்பள்ளி’ 1946 முதல் இருந்தது. பிறகு 1982-இல், மூடப்பட்டது. இதில் பயின்ற பலர் சிங்கப்பூரில் தமிழாசிரியர்களாகப் பணியாற்றி வந்தனர். வருகின்றனர்.

தென்கிழக்காசிய நாடுகளில் சிங்கப்பூரில்தான் தமிழ் ஓர் அதிகாரத்துவ மொழியாக அமைந்துள்ளது. இது அரசியல் அமைப்புச் சட்டத்தினால் ஏற்றுக்கொள்ளப்பட்ட ஒன்றாகும். இதனால் விளைந்த வளையும் நன்மைகள் பலப்பல. சிங்கப்பூர் நாடாளுமன்றத்தில் தமிழ் பேசும் வாய்ப்புள்ளது. தமிழில் ஒருவர் பேசுவதை ஆங்கிலத்தில் மொழிபெயர்ப்பதற்கும், ஆங்கிலத்தில் பேசுவதைத் தமிழில் மொழி பெயர்ப்பதற்கும் அங்கு வசதிகள் உள்ளன. அரசாங்க அலுவலகங்களில்

பெயர்கள், அறிவிப்புகள், விளம்பரங்கள் தமிழ் உள்ளிட்ட நான்கு மொழிகளிலும் இடம்பெற்றுள்ளன. சிங்கப்பூர் விமானங்களிலும் பயணிகளுக்கான அறிவிப்புகளும் பாடல்களும் தமிழில் உள்ளன. மலேசியா, தாய்லாந்து, பிலிப்பைன்ஸ், இந்தோனேசியா, சிங்கப்பூர், புருணை முதலிய 10 நாடுகளை உள்ளடக்கிய ஆசியான் மட்டத்தில் நடைபெறும் இலக்கியப் போட்டிகள், கலை நிகழ்ச்சிகள் போன்றவற்றில் தமிழுக்கு ஓர் இடம் தந்து அதனைக் கொண்டு நிறுத்தும் உரிமை சிங்கப்பூருக்கே உண்டு. இதனால் சிங்கப்பூர்த் தமிழ் எழுத்தாளர்கள் ஆசியான் இலக்கிய விருதைப் பெறும் வாய்ப்பினைப் பெற்றுள்ளனர். சிங்கப்பூர் அரசாங்கச் சார்பு நிறுவனங்கள் ஆண்டுதோறும் நடத்தும் விருதுகள் பத்தாயிரம் வெள்ளிப் பரிசுகள், போட்டிகள் அனைத்தும் தமிழ் இலக்கியத்திற்கும் கிடைக்கின்றன.

சிங்கப்பூரில் கவிதை, சிறுகதை ஆகியவை நன்கு வளர்ச்சி அடைந்துள்ளன. 'சிங்கப்பூர்த் தமிழ் எழுத்தாளர் கழகம்' இலக்கிய வளர்ச்சிக்குப் பாடுபடுகிறது. தமிழ்மொழி வளர்ச்சி, கலை, பண்பாட்டு வளர்ச்சிக்கெனப் பலவகைத் தமிழ் அமைப்புகள் உள்ளன. ஆன்மிகத் தமிழ் வளர்ச்சிக்கெனச் சிங்கப்பூரில் கோயில் அறங்காவலர்களும் திருமுறை மாநாட்டினரும் பாடுபடுகின்றனர்.

சிங்கப்பூர்த் தமிழர்களின் எழுத்துத் தமிழ், பேச்சுத் தமிழ் ஆகியவற்றில் சில சிறப்பு இயல்புகள் தென்பட்டாலும் இலங்கைத் தமிழ்போலத் தனிக்கிளைமொழியாக இதைக் கருத வாய்ப்பில்லை. பொதுவாக இல்லங்களில் தமிழ் பேசும் போக்கு குறைந்து கொண்டே வருகிறது. ஆங்கிலத்தின் செல்வாக்கு மேலோங்கி வருகிறது. இந்த வகையில் பேச்சுத்தமிழின் புழக்கத்தை அதிகரிக்கும் பணியே இப்போது சிங்கப்பூரில் முதன்மைப் பணியாக உள்ளது.

### தமிழ்க்கல்வி

பொருளாதார வளர்ச்சி, அறிவியல் முன்னேற்றம், உலக வாணிபம் ஆகியவற்றிற்காக ஆங்கிலமும் பண்பாடு, கலாச்சாரம், பழக்கவழக்கங்களைப் பேணுதல் ஆகியவற்றிற்காக தாய்மொழிக்கல்வியும் எல்லாருக்கும் தேவை எனும் அடிப்படையில் சிங்கப்பூர்க் குடியரசு இருமொழிக் கொள்கையினை

இன்றியமையாத ஒரு கொள்கையாகச் செயல்படுத்தி வருகிறது. இதனால் சிங்கப்பூர்ப் பள்ளிகளிலும் தொடக்கக் கல்லூரிகளிலும் தமிழைத் தாய்மொழியாகக் கொண்டவர்கள் தமிழ் கற்கும் வாய்ப்பினை அரசு வழங்கியுள்ளது. எனவே தமிழர் குழந்தைகள் மாணவர்கள் தமிழை ஒரு கட்டாயப்பாடமாக ஆங்கிலத்துடன் பயிலும் நிலை சிங்கப்பூரில் உள்ளது. இப்போது தொடக்கநிலையில் சுமார் 15000 மாணவர்களும், உயர்நிலையில் சுமார் 9000 மாணவர்களும், பல்கலைக்கழகப் புகுமுக வகுப்புநிலையில் சுமார் 700-க்கும் மேற்பட்ட மாணவர்களும் தமிழ் பயில்கின்றனர். ஏறத்தாழ 25000 மாணவர்கள் தமிழ் கற்கின்றனர். இவர்களுக்கு 147 தொடக்கப்பள்ளிகளும், 70 உயர்நிலைப்பள்ளிகளிலும், 9 உயர்நிலை மொழிநிலையங்களிலும், 16 தொடக்கக் கல்லூரிகளிலும் ஒரு மத்திய கல்வி நிலையத்திலும் தமிழ் கற்பிக்கப்படுகிறது. இக்கல்வி நிலையங்களில் 600-க்கும் மேற்பட்ட ஆசிரியர்கள் தமிழ் கற்பிக்கின்றனர். இவர்களில் 50-க்கும் மேற்பட்டோர் தமிழகத்திலிருந்து வந்து தமிழாசிரியராகப் பணியாற்றுகின்றனர். பல்கலைக்கழக அளவில் நன்யாங் தொழில்நுட்பப் பல்கலைக்கழகத்தைச் சார்ந்த தேசியக் கல்விக்கழகத்திலும், சிங்கப்பூர் தேசியப் பல்கலைக்கழகத்திலும் தமிழ் பயிற்றப்படுகிறது.

ஆங்கிலமே கல்வி நிலையங்களில் பயிற்றுமொழியாகும். சிங்கப்பூரிலுள்ள பல பள்ளிகளில் தமிழ்மொழிப் பாடம் கற்க வாய்ப்புள்ளது. தமிழ் கற்பிக்கப்படாத உயர்நிலைப்பள்ளிகளில் பயிலும் மாணவர்கள் மொழிநிலையங்களில் பள்ளி நேரத்திற்கு அப்பால் தமிழ் பயில்கின்றனர். ஒன்பது தமிழ்மொழி நிலையங்களுள் உமறுப்புலவர் தமிழ்மொழி நிலையம் கல்வியமைச்சின் நேரடி மேற்பார்வையில் இயங்கும் ஒன்றாகும். மேலும், இந்நிலையம் இன்று சிங்கப்பூரில் தமிழ்மொழி கற்றல் கற்பித்தலுக்கான வளமை நிலையமாகவும் விளங்குகிறது.

சிங்கப்பூரின் தமிழ்க்கல்வி நிலையை இருவகையாக நோக்கலாம். ஒன்று தமிழ்வழிக் கல்வி மற்றொன்று தமிழ்மொழிக்கல்வி முன்னையது தமிழ்பயிற்றுமொழியாக இருந்த நிலை பின்னையது ஆங்கிலம் பயிற்றுமொழியாக உள்ள பள்ளிகளில் தமிழ் தாய்மொழி நிலையில் பயிலப் பெறும்நிலை.

## தமிழ்வழிக்கல்வி

தமிழ்வழிக்கல்விப் பள்ளிகளைத் தமிழ்ப்பள்ளிகள் என அழைத்தனர். சிங்கப்பூரில் முதல் தமிழ்ப்பள்ளி 1943-இல் செயற்படத் தொடங்கியது. 1951-இல் ஏறத்தாழ 20 தமிழ்ப் பள்ளிகளில் ஆயிரம் மாணவர் இருந்தனர். இவை அனைத்தும் தொடக்கப்பள்ளி நிலையில் தமிழ்மொழிவாயிலாகப் பலவகைப் பாடங்களைக் கற்பித்து வந்தன. இந்நிலையில் 1960-இல் உயர்நிலையிலமைந்த தமிழ்பள்ளியாக உமறுப்புலவர் தமிழ்ப்பள்ளி உருவாயிற்று. 1965-ஆம் ஆண்டு முதல் ஆங்கில சீன, மலாய்ப் பள்ளிகளின் இறுதிச்சான்றிதழுக்கு இணையாக உமறுப்புலவர் பள்ளி விளங்கியது.

இந்நிலையில் தமிழ் வாயிலாகக் கல்வி பயின்ற மாணவர் எண்ணிக்கை 1968-இல் 1843 ஆக இருந்தது. ஆங்கிலத்தின் செல்வாக்கு கற்பவர் தொகை குறைந்தது. தமிழ்ப்பள்ளிகள் மூடப்பட்டன 1982-இல் உமறுப்புலவர் தமிழ்ப்பள்ளியும் மூடப்பட்டது. தமிழ்ப்பள்ளிகளே சிங்கப்பூரில் இல்லாத நிலை உருவாகிவிட்டது. பாரதிதாசன், அரவிந்தர், நாகம்மையார், நீலாம்பிகை, சாரதாதேவி, வள்ளுவர், வாசுகி, விவேகானந்தர் முதலியோர் பெயரால் அக்காலத் தமிழ்ப்பள்ளிகள் இயங்கின.

## தமிழ்மொழிக்கல்வி

சிங்கப்பூரில் தமிழ் இரண்டாம் மொழியாக ஆங்கிலப்பள்ளிகளில் 1951 முதல் கற்பிக்கப்பட்டது. 1952-இல் 32 பள்ளிகளில் இவ்வாய்ப்பு இருந்தது. 1968-இல் 13000 மாணவர்கள், ஆங்கிலப் பள்ளிகளில் தமிழை இரண்டாம் மொழியாகப் பயின்றனர். 1966-இல் உயர்நிலையில் தமிழ் கற்றோர் தொகை 2712 ஆகும். 1968 முதல் பல்கலைக்கழகப் புகுமுக வகுப்புநிலையிலும் தமிழ் இரண்டாம்மொழியாகக் கற்பிக்கப்படுகிறது.

இன்று ஆங்கிலப்பள்ளிகளில் பாலர் தொடக்கநிலை முதல் பல்கலைக்கழகப் புகுமுக வகுப்புவரை, தமிழ் ஒரு தாய்மொழிப்பாடமாக இருக்கும் நிலையைக் காணுகிறோம்.

### பாலர் பள்ளிநிலை

தனியார் பாலர்பள்ளிகள், மக்கள் கழகப்பாலர் பள்ளிகள் மக்கள் செயல் கட்சி அறக்கட்டளைப் பாலர்பள்ளிகள், இந்து அறக்கட்டளை

வாரியத்தின் கீழ் உள்ள சரசுவதி பள்ளி, சாரதா பள்ளி, கல்சாபா பள்ளிகள் என்று பல பள்ளிகளில், தமிழ் ஒரு பாடமாகக் கற்பிக்கப்படுகிறது. இவற்றில் பலர் படிக்கும் வாய்ப்புள்ளது. பாலர் பள்ளி முதல் வகுப்பு மாணவர்களுக்குரிய புத்தகங்கள் நான்கும், பயிற்சிப் புத்தகங்கள் நான்கும் தயாரித்து வெளியிடப்பட்டுள்ளன. இவ்வாறே பாலர் பள்ளி இரண்டாம் வகுப்பு மாணவர்களுக்கும் எட்டுப் புத்தகங்கள் தயாரிக்கப்படிக்க எளிய முறையில் படங்களுடன் கவர்ச்சியான வடிவத்தில் இப்புத்தகங்கள் அமைந்துள்ளன. மக்கள் கழக இந்திய நற்பணிக்குழுவின் சார்பாக, ஞாயிற்றுக்கிழமைகளில் சிங்கப்பூரின் பல பகுதிகளில் குழந்தைகளுக்குத் தமிழ்ப் பயிற்றுவிக்கப்படுகிறது. அரசு தொடக்கப்பள்ளி சிலவற்றிலும் ஓராண்டு ஆயத்தவகுப்புநிலையில் தமிழ் கற்பிக்கப்பட்டது. இதனை ஒட்டிச் சிங்கப்பூர்ப் பாடத்திட்ட மேம்பாட்டுக்கழகம் தொடக்கநிலைக்கு முந்தியநிலையான ஆயத்தநிலைக்குரிய பயிற்று கருவிகள் பலவற்றைத் தமிழுக்கு உருவாக்கியுள்ளது. ஒலிநாடாவிலும், இன்னோசைவரிகளும் பாடல்களும் ஓசைநயமும் தரப்பெற்றுள்ளன. பல்வேறு கருப்பொருள்களை ஒட்டியவண்ணப் படங்களுடன் பயிற்சித்தாள்கள் ஒளிநாடா ஆகியவை தயாரித்து வெளியிடப்பட்டுள்ளன. அண்மையில் 'சிங்கப்பூர் இந்தியர் நல மேம்பாட்டுக்கழகம்' பாலர் பள்ளிநிலையினர் படிக்கத்தக்க நான்கு நூல்களைப் பெரும்பொருட் செலவில் வெளியிட்டுள்ளது. இன்று தொடக்கநிலை முதலாம் வகுப்புக்குவரும் மாணவரும் ஏறத்தாழ 75 விழுக்காட்டினர் பாலர்பள்ளியில் தமிழ்ப் படித்து வந்தவர்களாவர். இதனை ஒரு நல்ல அறிகுறியாகக் கருதலாம்.

## தொடக்கநிலை

தொடக்கநிலைப்பள்ளிகளில் முதல் நாலாண்டு தமிழ் பயிலும் மாணவர்கள் அனைவருக்கும் ஆங்கிலம், கணிதம், அறிவியல் ஆகியவற்றுடன் தாய்மொழிப் பாடமாகத் தமிழ் கற்பிக்கப்படுகிறது. நான்காம் ஆண்டின் இறுதியில் மாணவர்கள் மூன்று மொழிநிலையில் தரம்பிரிக்கப்படுகிறார்கள். மிகவும் சிறந்த முறையில் கல்வி கற்கும் ஆற்றலுடையவர்கள் ஆங்கிலத்தையும் தமிழ்மொழியையும் முதல்மொழி நிலையில் கற்கிறார்கள். இதனை உயர்தமிழ் என்பர் கற்றலில் சராசரி ஆற்றலுடையவர்கள் ஆங்கிலத்தை முதல்மொழி நிலையிலும் கற்பார்கள். இது தமிழ் என்ற

பெயர்பெறும் கல்வி கற்பதில் மிகவும் குறைந்த ஆற்றலுடையவர்கள், ஆங்கிலத்தை முதல்மொழிநிலையிலும் தமிழை மூன்றாம்மொழி நிலையிலும் வாய்மொழித் திறனுக்கு முக்கியத்துவம் தரும்நிலையிலும் கற்பார்கள். இதனை அடிப்படைத் தமிழ் என்பர். தொடாக்கநிலை இறுதி வகுப்பான ஆறாம் வகுப்பின் இறுதியில் அரசுத்தேர்வு இம்மூன்றுநிலைப் பிரிவினர்க்கும் உண்டு.

## உயர்நிலை

தொடக்கநிலையில் உள்ளது போன்றே, உயர்நிலையிலும் மாணவர்கள் எந்தக் கல்விப் பிரிவில் இருக்கிறார்கள் என்பதைப் பொறுத்து அவர் எந்தநிலை அதாவது உயர்தமிழ், தமிழ், அடிப்படைத்தமிழ் ஆகியவற்றில் எந்நிலையில் தமிழ் கற்கவிருக்கிறார் என்பது முடிவு செய்யப்படும். உயர்நிலைக்கல்வி இறுதித்தேர்வில் சிறந்த முறையில் தேறியோர் நான்கு ஆண்டுகள் பயில்வர். இவர்கள் விரைவு வகுப்பினர். இவர்கள் தமிழை முதன்மொழிநிலையிலும் (உயர்நிலையிலும்) பயில்வர். சராசரி ஆற்றல் நிலையில் தேறியோர் வழக்கநிலை வகுப்பினர். இவர்கள் தமிழை இரண்டாம்மொழிநிலையில் பயில்வர். மிகக்குறைந்த நிலையில் இவர்கள் அடிப்படைத்தமிழை வாய்மொழி நிலையில் பயில்வர். உயர்தமிழ் பயிலும் வாய்ப்பு ஒரு சில பள்ளிகளில் தான் உண்டு. உயர்நிலையில் இறுதி ஆண்டின் இறுதி வழக்கநிலை பயில்வார்க்கும் மூன்றுவகைத் தமிழ்மொழி பயில்வார்க்கும் ஜி.சி.இ சாதாரண நிலையில் அரசுத்தேர்வு நடத்தப்படும். நான்காம் ஆண்டின் இறுதியில் வழக்குநிலை பயில்வார்க்கும் அரசுத்தேர்வுண்டு. ஜி.சி.இ சாதாரணநிலைத் தேர்ச்சிக்குத் தமிழ் இலக்கியப்பாடமும் உண்டு. உமறுப்புலவர் தமிழ்மொழி நிலையத்தில் இப்பாடம் கற்பிக்கப்படுகிறது. இத்தேர்வு எழுதுவோரில் பெரும்பாலோர் தனிநிலையில் படித்தே எழுதுகின்றனர். ஏனைய பாடங்களில் நல்ல தேர்ச்சி பெற்றுத் தமிழ் பயிலச் சிரமப்படும் மாணவர்களுக்கான தமிழ்மொழி என்னும் பாடத்திட்டமும் அண்மையில் புகுத்தப்பட்டுள்ளது. மேலும் சுயேச்சைப் பள்ளிகள் தமக்கெனத் தமிழ்பாடத்திட்டம் வகுக்கும் உரிமையும் அண்மையில் பெற்றுள்ளன. இதனால் சிங்கப்பூரில் தமிழ்ப்பாடத் திட்டம் பல்வேறு நிலைகளில் இருப்பதைப் பார்க்கமுடிகிறது.

### புதுமுக வகுப்புநிலை

பல்கலைக்கழகப் புகுமுக வகுப்புநிலையில் தமிழ் மட்டுமே கற்பிக்கப்படுகிறது. உயர்தமிழ் தனியாராகத் தேர்வு எழுதுவோர் மட்டுமே படிக்கும் பாடமாகும். தமிழ்மொழிப் பாடத்தில் இருவகைநிலை உண்டு. ஒன்று மேல்நிலைச் சாதாரணநிலைத் தேர்ச்சி, மற்றொன்று மேல்நிலைத் தேர்ச்சி இவற்றில் முன்னைய நிலை மட்டும் படித்தால் போதும். இருநிலையிலும் எழுதி மேல்நிலைத் தேர்ச்சியும் பெறலாம். மேல்நிலைத் தேர்ச்சி பயில்வோர் சாதாரண நிலைத்தேர்ச்சித்தாள்களுடன் ஒரு நாடக நூல், ஒரு கவிதை நூல் அடங்கிய மேல்நிலைத்தாள்களும் எழுத வேண்டும். ஈசூன் தொடக்கக்கல்லூரி ஆண்டுதோறும் கருத்தரங்குவழி தமிழ்க்கல்வி சிறக்க உதவுகின்றது. சில தொடக்கக்கல்லூரிகள் நாடகம், பேச்சுப் போட்டிகள் நடத்துகின்றன.

### பாடத்திட்டம்

கல்வி அமைச்சின் தமிழ்ப்பாடத்திட்ட வரைவுப்பிரிவு, மேற்கண்ட தொடக்க, உயர்நிலைகளுக்குரிய பாடத்திட்டங்களை உருவாக்குவதுடன் பாடத்திட்டச் செயலாக்கப்பணியிலும் ஈடுபட்டு வருகிறது. இப்பிரிவு 1980-களின் தொடக்கத்தில் உருவாக்கப்பட்ட பாடத்திட்டத்தைக் கல்வித்திட்டத்தின் மாற்றங்களுக்கு ஏற்ப இப்போது திருத்தி அமைத்துள்ளது. இப்பாடத்திட்டம் 1995 முதல் கட்டமாக அறிமுகப்படுத்தப்படும். இதுகருப்பொருள்சார்ந்த கருத்துப் பரிமாற்ற அணுகுமுறையை அடிப்படையாகக் கொண்டது. இதில் முக்கிய மொழி நடவடிக்கைகள் ஒருங்கிணைக்கப்பட்டிருக்கும். கற்றலும் கற்பித்தலும் ஒரு கருப்பொருளை மையமாகக் கொண்டு இயங்கும். இது மாணவர் நிலைக்கேற்ப நெகிழ்வுத்தன்மை உடையது. நோக்கங்களும் குறிக்கோள்களும், அணுகுமுறை, கருப்பொருள்கள், தலைப்புகள், நடவடிக்கைகள், நுண்திறன்கள் கருத்துப்பரிமாற்ற நடிவக்கைகள், மொழிக்கூறுகள் மதிப்பீட்டு விளக்கக் குறிப்புகள் ஆகியவை இப்பாடத்திட்டத்தில் தெளிவாகத் தரப்பட்டுள்ளன. மொழிக்கூறுகள் பயன்பாட்டு நோக்கில் தரப்பட்டுள்ளன. நவீனமொழியியற் சிந்தனைகளும் மரபிலக்கணக் கூறுகளும் இதில் இடம்பெற்றுள்ளன. புகுமுக வகுப்பிற்கான பாடத்திட்டமும் பாடநூல்களும் தனியே உள்ளன.

### பயிற்று கருவிகள்

கல்வியமைச்சு உருவாக்கிய பாடத்திட்டங்களை அடிப்படையாகக் கொண்டு பயிற்று கருவிகளை உருவாக்கக் கல்வி அமைச்சின் சிங்கப்பூர்ப் பாடத்திட்ட மேம்பாட்டுக்கழகம் தொடக்கநிலைக்கும் உயர்நிலைக்கும் தனித்தனியே இருபாடநூலாக்கக் குழுக்களை 1983-இல் உருவாக்கியது. இக்குழுக்கள் தொடக்கநிலை முதல் உயர்நிலை நான்குவரை பலவகைப் பயிற்று கருவிகளை உருவாக்குகின்றன. பாடநூல் பயிற்சி நூல், ஆசிரியர் கையேடு, படவில்லைகள், மின்னட்டைகள், பட அட்டைகள், மொழிவிளையாட்டு ஒலிநாடா, ஒளிநாடா, ஒளி ஊடுருவித்தாள், ஒலி, ஒளிப்படைப்பு, உரையாடல், கட்டுரைப்படங்கள், பெரிய புத்தகங்கள் எனப் பல்வேறு வகையான பயிற்று கருவிகளைத் தமிழ்க்கெனப் படைத்தளித்த பெருமை சிங்கப்பூருக்கு உண்டு. உலகின் வேறெங்கும் இல்லாத முயற்சி என இதனைப் பாராட்டலாம்.

முதல் புதிய பாடத்திட்டத்திற்கேற்பப் பயிற்று கருவிகள் உருவாக்கப்படுகின்றன. ஒலித்தட்டு வழிக்கேட்டல், கருத்தறிதல் பாடங்கள் இப்போது தரப்படுகின்றன. சிங்கப்பூர்ப் பாடத்திட்ட மேம்பாட்டுக்கழகம் கலைக்கப்பட்டபின் கல்வி அமைச்சின் தமிழ்ப்பாடத்திட்ட வரைவுப் பிரிவு பயறிற்று கருவிகள் உருவாக்கும் பணியைச் சிறப்பாகச் செய்கிறது. கல்வி அமைச்சின் தொழில்நுட்பப் பிரிவு தமிழ்க்கல்விக்கெனக் கணினி சார்ந்த கல்விமென்பொருள் பலவற்றைத் தயாரித்துத் தருகிறது. 'நம்நாடி' என்னும் கணினிசார் இதழ் ஒன்றையும் நடத்தி மாணவர் அறிவையும் எழுத்தாற்றலையும் பெருக்குகிறது.

### தேர்வு

தமிழ்ப்பாடத்தின் தேர்வு மதிப்பீடு நடவடிக்கைகளைக் கல்வியமைச்சின் தேர்வுப்பிரிவு நடத்தி வந்தது. மாணவரின் மொழித்திறன் தேர்ச்சியை மதிப்பிட்டறியும் முறையே முதன்மை பெறுகிறது. பாடப்பொருளறிவைச் சோதித்தறியும் முயற்சியில்லை. படித்தல், பேசுதல், கருத்தறிதல், கட்டுரை எழுதுதல், மொழிப்பயிற்சி ஆகியவற்றில் மாணவர் அடைந்துள்ள முன்னேற்றத்தைக் கண்டறிவதற்காகவே தேர்வு இருக்கிறது. இப்போது தேர்வு நடத்துவதற்குத் தனிவாரியம் ஏற்படுத்தப்பட்டுள்ளது. அதன் தொடர்பாகவே இப்போது தமிழ்மொழி இலக்கியம் சார்ந்த தேர்வுகள்

நடத்தப்படுகின்றன. தேர்வு எழுதும் மாணவர்களின் தேர்ச்சித்திறன் கணிப்பும் அடிக்கடி செய்யப்படுகிறது. தேர்வுத்தாள் தயாரித்தல், திருத்துதல் ஆகியவற்றிற்கான பயிலரங்குகளும் ஆசிரியர்களும் அவ்வப்போது இந்த வாரிய அதிகாரிகளால் நடத்தப்படுகின்றன.

### அறநெறிக்கல்வி

தொடக்கப்பள்ளி நிலையில் முதல் வகுப்பு முதல் ஆறாம்வகுப்பு வரை அறநெறிக்கல்வி எனும் பாடம் மட்டும் தமிழ்மொழியில் தமிழாசிரியர்களால் நடத்தப்படுகிறது. இதற்கெனப் பாடநூல்கள், பல்வகைப் பயிற்றுக்கருவிகளை உருவாக்கிச் சிங்கப்பூர்ப் பாடத்திட்ட மேம்பாட்டுக் கழகம் நற்குடிமக்கள் எனும் பாடநூலாக்கக் குழுவை உருவாக்கியது. இப்பாடத்திற்குத் தேர்வு இல்லை. இதற்கும் பல்வகைப் பயிற்று கருவிகள் உள்ளன. கல்வியமைச்சே இப்பயிற்று கருவிகள் உருவாக்குவதில் இப்போது ஈடுபடுகிறது. சிங்கப்பூர் தொடர்பான கருத்துகள், பழக்கவழக்கங்கள் இக்ருவிகளில் இடம்பெற்றுள்ளன தமிழில் இவற்றை அறிய இவை உதவுகின்றன.

### கல்வியமைச்சு

கல்வியமைச்சின் பாடத்திட்ட வரைவுப் பரிவு மூத்த தமிழாசிரியர் குழுவுடன் இணைந்து பள்ளி மாணவருக்குப் பேச்சுப்போட்டி, விவாதப்போட்டி, கட்டுரைப்போட்டி ஆகியவற்றை ஆண்டுதோறு நடத்துகிறது. ஆசிரியர்களுக்குப் பயிலரங்குகளும் நடத்துகிறது. பயிற்றுகருவிகள் களஞ்சியம் ஒன்றும் உருவாக்கியுள்ளது. ஆண்டுதோறும் தமிழாசிரியர் ஒருசிலரைத் தமிழகத்தில் இளங்கலை (தமிழ்) பட்டப்படிப்புப் பெற அமைச்சு அனுப்பி வருகிறது. தமிழ் முதுகலை (எம்.ஏ) படிக்கவும் தமிழகத்திற்கு அனுப்புகிறது. இந்தப் பிரிவு தமிழ்மொழி கற்றல், கற்பித்தல் தொடர்பான பயிலரங்குகள், பகிர்வு அரங்குகள், கருத்தரங்குகள் ஆண்டுதோறும் நடத்தி வருகிறது. இப்போது தமிழ் மாணவர்களுக்கு எழுத்தாற்றல் போட்டியும் நடத்துகிறது.

### பல்கலைக்கழக நிலை

சிங்கப்பூரில் நான்கு பல்கலைக்கழகங்கள் உள்ளன. இவற்றில் நன்யாங் தொழில்நுட்பப் பல்கலைக்கழகமும் சிங்கப்பூர்ப் தேசியப்

பல்கலைக்கழகமும், தமிழ்க்கல்வி பயிற்றும் பணியில் உள்ளன. முன்னையதைச் சார்ந்த, தேசியக் கல்விக்கழகத்தில் தமிழ்ப் பிரிவுள்ளது. இப்பிரிவின் முதன்மைப் பணி ஆண்டுதோறும் தமிழாசிரியர்களை உருவாக்குவதும், பணியில் இருக்கிற தமிழாசிரியர்களின் மொழித்திறத்தையும் கற்பித்தல் முறைகளையும் மேம்படுத்துவதும் ஆகும். இங்கு ஈராண்டுப் பட்டப்படிப்பில் மாணவர்கள் பயில்கிறார்கள். ஆசிரியர் மூவர் இருக்கிறார்கள். இப்பிரிவு மொழி, இலக்கியம் கற்பித்தல் முறை ஆகியவற்றில் ஆய்வு நடத்துகின்றது. உயர்நிலை மாணவர் கட்டுரை எழுதுவதில் எதிர்நோக்கும் மொழியியல் இடர்ப்பாடுகள் குறித்து அய்வு செய்த ஒருவர், கல்வியியலில் முதுகலைப் பட்டம் பெற்றுள்ளார். வகுப்பறை வினா, விடை தொடர்பாகவும் சிங்கப்பூர் தமிழ் இலக்கியம் பற்றியும் முனைவர் (டாக்டர்) பட்ட ஆய்வுகள் செய்யப்பட்டுள்ளன. ஆசிரியர்கள், பள்ளி சார்ந்த பலவகை ஆய்வுகள் மேற்கொள்ளவும் இப்பிரிவு வழிவகுத்துள்ளது. மாணவர்களின் உச்சரிப்புத்திறன் மேம்படுத்த உதவும் 'செந்தமிழும் நாப்பழக்கம்' என்னும் நூல் ஒன்றும் பயிற்று கருவித் தொகுப்பு ஒன்றும் தமிழ் வரிவடிவத்தைக் கற்பிக்கக் கையேடு ஒன்றும் வாசிப்புத்திறனைக் கற்பிக்கப் பல ஒளிநாடாக்களும் இப்பிரிவு உருவாக்கி வெளியிட்டுள்ளது. கற்பித்தல் தொடர்பாகப் பல கருத்தரங்குகளும் நடத்துகிறது. தமிழ்க்கணினிப் பயிற்சியும் இங்கு ஆசிரியர்களுக்குத் தரப்பெறுகிறது.

இதுவரை பல தமிழாசிரியர்கள் இப்பயிற்சி பெற்றுள்ளனர். தமிழ்க்கணினியில் பயன்படுத்தப் புதிய விசைப்பலகை ஒன்று உருவாக்கியதுடன் அதனை எளிதில் கற்கவுதவும் தற்பயிற்சிச் சாதனம் ஒன்றையும் தயாரித்துள்ளது. மலேசியா, சிங்கப்பூரில் இவ்விசைப் பலகை பயன்பாட்டில் உள்ளது. பாடத்திட்டம், பயிற்று கருவிகள் தேர்வு தொடர்பான பணியில் கல்வி அமைச்சிற்கு உறுதுணையாக இப்பிரிவு இருந்து வருகிறது. தமிழ்க்கல்வி கற்றல், கற்பித்தல் சிங்கப்பூர்த் தமிழ் இலக்கியம், தொடர்பானது நூல்கள் பலவற்றை வெளியிட்டுள்ளது. இப்பிரிவைச் சேர்ந்த விரிவுரையாளர்கள் அனைத்துலகக் கருத்தரங்குகள் பலவற்றில் கலந்து கட்டுரைகள் படைத்து வருகின்றனர். தமிழ்க்கல்வி பற்றிய ஆய்வுத்திட்டங்கள் பலவற்றையும் மேற்கொண்டுள்ளனர்.

சிங்கப்பூர் தேசியப் பல்கலைக்கழகத்தில் 1999 முதல் தெற்கு ஆசியஇயல் பிரிவு, மொழிகள் படிப்பு நிலையம் ஆகியவற்றின் சார்பில் தமிழ்இயல், தமிழ்மொழிப் பாடங்கள் கற்பிக்கப்படுகின்றன. தெற்கு ஆசியஇயல் பிரிவு தமிழியல்-1, தமிழியல்-2, என இரண்டு பாடங்களைப் பல்கலைக்கழகத்தில் அந்தந்தத் துறையில் படிக்கும் மாணவர்களுக்கும் ஏற்றவகையில் நடத்துகிறது. A நிலையில் அதாவது பல்கலைக்கழகப் புகுமுக வகுப்பில் தமிழ்த் தேர்ச்சி பெற்ற மாணவர்கள் இப்பாடங்களை விருப்பப் பாடங்களாக எடுக்கலாம். தமிழியல் பாடத்தில் மொழியியல், இலக்கிய, பண்பாட்டுக்கூறுகள் நோக்கில் பயிற்றுவிக்கப்படுகிறது.

சிங்கப்பூர்த் தமிழ் இலக்கியத் திறனாய்வும் கவிதை நலம் பாராட்டலும் இப்பாடத்தில் உள்ளன. தமிழியல்-2 பாடத்தில் தமிழ் இலக்கியம், மொழிபெயர்ப்புகள், தென்கிழக்காசிய நாடுகளில் தமிழ்ப்பண்பாடு ஆகிய கூறுகள் உள்ளன. மொழிகள் படிப்பு நிலையத்தில் தமிழரல்லாத சீன, மலாய், இந்திய வெளிநாட்டு மாணவர்களுக்கு அடிப்படைத் தமிழ்மொழி கற்பிக்கப்படுகிறது. அன்றாட நடவடிக்கைகளில் பல்வேறு சூழல்களில் பேசவும், ஓரளவு எழுதவும் பழகவும் மாணவர்களுக்குப் பயிற்சி தரப்படுகிறது. இந்த இரு பாடங்களையும் பல்கலைக்கழகத்தில் பல்துறையில் படிக்கும் மாணவர்கள் விருப்பப் பாடமாக எடுத்துப் பயிலலாம். இதுவரை ஏறத்தாழ 300-க்கும் மேற்பட்ட தமிழரல்லாத மாணவர்கள் தமிழ்மொழி பயின்றுள்ளனர். தமிழர் பண்பாட்டுக்கூறுகளும் இவர்களுக்குச் சொல்லிக் கொடுக்கப்படுகின்றன. தமிழகத்திற்குச் சுற்றுப்பயணமும் மேற்கொள்ளுகின்றனர்.

மேலும், தமிழ் சார்ந்த துறைகளில் தெற்கு ஆசியப் பாடப்பிரிவின்கீழ் முனைவர் பட்ட ஆய்வுகளும் மேற்கொள்ளப்பட்டுள்ளன. சிங்கப்பூர் இலக்கியம் பற்றி ஒரு கருத்தரங்கம், அனைத்துலக அரங்கில் தமிழ் என்னும் தலைப்பில் இருமாநாடுகளும் சிங்கப்பூர் மலேசியத்தமிழ் இலக்கியம் பற்றிய கருத்தரங்கு ஒன்றும் நடைபெற்றுள்ளன. யுனிசிம் பல்கலைக்கழகத்தில் தமிழ்மொழி, இலக்கியம் ஆகியவற்றில் இளங்கலைப் பட்ட (BA) வகுப்புப் பயில்வதற்கான வ ாய்ப்பு 2006 சனவரி முதல் கிடைக்கும்நிலை ஏற்பட்டுள்ளது. இதற்காகச் சிங்கப்பூர்த் தமிழச் சமுதாயமும், சிங்கப்பூர்த் தமிழ் ஆசிரியர் சங்கமும் பெருமுயற்சி செய்துள்ளன. இதனால் தமிழாசிரியர்களும், ஏனையோரும்

தமிழ்மொழி இலக்கியத் தேர்ச்சி பெற்றுப் பட்டதாரிகளாக வாய்ப்புள்ளது. இது சிங்கப்பூர்த் தமிழ்க்கல்வியில் ஒரு சிறந்த சாதனை என்று கூறலாம்.

### மக்கள் தொடர்புச் சாதனங்கள்

சிங்கப்பூரில் தமிழவேள் கோ.சாரங்கபாணி அவர்களால் 60 ஆண்டுகளுக்கு முன் தொடங்கப்பெற்ற 'தமிழ்முரசு' நாளிதழ் வாரந்தோறும் மாணவர் முரசு, இளையர் முரசு என ஒரு பகுதியைத் தொடங்கிப் பல ஆண்டுகளாகத் தமிழ் மாணவர்களின் எழுத்தாற்றலை வளர்த்து வருகிறது. மேலும் தமிழ் ஆசிரியர்களை ஊக்குவிக்கும் வகையில் நல்லாசிரியர் விருது என ஒன்றை வழங்கும் நிகழ்ச்சியை அண்மையில் தொடங்கிச் சிறப்பாக நடத்தி வருகின்றது. தேர்வுகளில் முதன்மைத் தகுதி பெறும் மாணவர்களைப் பேட்டி கண்டு ஊக்கம் ஊட்டுகின்றது. சிங்கப்பூரில் 24 மணிநேரமும் தமிழ்நிகழ்ச்சிகளை ஒலிபரப்பும் 96.8 எனும் வானொலியும் தமிழ் மாணவர்களுக்கேற்பப் பல நிகழ்ச்சிகளை ஒலிபரப்புகிறது. நாள்தொறும் 5 மணி நேரம் ஒளிபரப்பும் வசந்தம் செண்ட்ரல் தமிழ்த்தொலைக்காட்சிப் பகுதியும் தமிழ்க்கல்வி வளத் தேவையான பல நிகழ்ச்சிகளை மாணவர்களைக் கொண்டும் ஆசிரியர்களைக் கொண்டும் ஒளிபரப்பி வருகிறது. சமூக அமைப்புகள் துணையால் நடைபெறும் பேச்சுப் போட்டிகளை ஒலி ஒளிபரப்பியும் மக்கள் சாதனப் பிரிவுகள் உதவுகின்றன.

### கணினிவழித் தமிழ்க்கல்வி

தொடக்கப்பள்ளி நிலையிலேயே தமிழ் மாணவர்களுக்கு தமிழ்க்கணினியில் தட்டச்சுச் செய்யப் பயிற்சி தரப்படுகின்றது. மேலும் தமிழ்க்கல்வி எனும் தொடக்கநிலையில் தமிழ் பயிற்றும் பல்ஊடக மென்பொருள் வாயிலாகத் தொடக்கப்பள்ளிகளிலும் பயிற்றுவிக்கப்படுகிறது. மேலும் பலவிதத் தமிழ்மென்பொருள்கள் தமிழ் பயிற்றத் துணையாகப் பயன்படுத்தப்பெறுகின்றன. தமிழாசிரியர்கள் பலர் குழுக்களாக இணைந்து தொடக்கநிலை உயர்நிலை புகுமுக வகுப்புநிலை ஆகியவற்றிற்குத் தனித்தனிப் பாடங்கள் தயாரித்துக் கணினி இணைப்புக்கல்வி வாயிலாகத் தமிழ் பயிற்றி வருகின்றனர். மாணவர்களுக்குத் தமிழில் அகப்பக்கம் தயாரித்தல், மின்னஞ்சல் அனுப்புதல், குறுஞ்செய்தி அனுப்புதல் ஆகியவற்றிற்கும் பயிற்சி தரப்படுகிறது. இணையத்தின் வழி தமிழ்ப்

படைப்புகள் தயாரிக்கும் முயற்சியிலும் தமிழ் மாணவர்கள் ஈடுபடுத்தப்படுகின்றனர் பவர்பாயிண்ட் மூலம் தமிழ்க் கருத்தரங்குகளில் கட்டுரைகள் படைக்கும் திறனும் தமிழ் மாணவர்கள் பெறுகிறார்கள். இணைய இதழ்களைப் படிப்பதிலும் அவர்கள் ஈடுபடுகின்றனர். உலகிலேயே சிங்கப்பூரில்தான் தமிழ்க்கல்வியில் கணினியும் இணையமும் அடங்கிய தகவல் தொழில்நுட்பம் அதிகமாகப் பயன்படுத்தப் பெறுகின்றது என்பது அறிஞர்கள் கணிப்பு பல்கலைக்கழக நிலையிலும் தமிழ்க்கணினி, இணைய தளத்தில் தமிழ் உலாவரச் சிங்கப்பூர்தான் காரணம் என்பதை அனைவரும் அறிவர். குணினிவழித் தமிழ் வளர்க்கச் சிங்கப்பூரில் பல முயற்சிகள் நடைபெற்று வருகின்றன.

## சிங்கப்பூர் தமிழாசிரியர் சங்கம்

சிங்கப்பூர்த் தமிழாசிரியர் சங்கமும் தமிழ்க்கல்வி வளர்ச்சிப் பணியில் ஈடுபட்டு வருகிறது. ‘ஆசிரியர் குரல்’ என்னும் இதழும் வெளியிடப்படுகிறது. அதில் தமிழ்க்கல்வி தொடர்பான கட்டுரைகள் பல இடம்பெறும். இது, 1992-இல் முதல் உலகத் தமிழாசிரியர் மாநாட்டினைத் தொடங்கி நடத்தியது. மற்ற நாடுகளில் மலேசியா, இந்தியா, மொரிசியஸ், தென் ஆப்பிரிக்கா ஆகிய நாடுகளில் இம்மாநாடு நடத்தவும் ஏற்பாடு செய்தது. சிங்கப்பூரில் ஐந்தாம் மாநாடும் ஒன்பதாம் மாநாடும் நடத்தியது, இவற்றில் கருத்துப் பரிமாற்றம் நடைபெற வழிவகுத்தது. மேலும் சிங்கப்பூர் மலேசியா தமிழாசிரியர்கள் தம் தமிழறிவையும் திறனையும் மேம்படுத்திக்கொள்ளத் தமிழகத்தில் பல பயிற்சி வகுப்புகளுக்கு ஏற்பாடு செய்து அவர்களை அழைத்துச் செல்கிறது. சிண்டா எனப்படும் சிங்கப்பூர் இந்தியர் நலமேம்பாட்டுச் சங்கத்துடன் இணைந்து தமிழ்ப்பாடத் தனி வகுப்புகள் நடத்துகிறது. கருத்தரங்குகுள், பயிலரங்குகள் ஆகியன நடத்தித் தமிழ்க் கல்வி மேம்பட வழிவகுக்கிறது.

## தமிழ்க்கல்வி மறுஆய்வுக்குழு

தொடக்கநிலை முதல் வகுப்பிற்கு வருகிற மாணவர்களின் இல்லங்களில் தமிழ்ப் புழக்கம் 1980-இல் 52.2 விழுக்காடு இருந்தது. 2000-த்தில் அது 42.3 விழுக்காடாகக் குறைந்துள்ளது. அதே நேரத்தில் 1980-இல் ஆங்கிலப் புழக்கம் 24.3 விழுக்காடாக இருந்தது. 2000-த்தில்

அது 35.6 விழுக்காடாக உயர்ந்துள்ளது. இவ்வாறு ஆங்கிலப் புழக்கம் அதிகரித்துத் தமிழ்ப் புழக்கம் குறையும் நிலைவர வர மிகுதியாகிறது. இதனைக் கருத்தில்கொண்டும் ஏனைய கல்வி வல்லுநர்களைக் கொண்டு தமிழ்க்கல்வி மறுஆய்வுக் குழு ஒன்றை நியமித்துத் தமிழ்க்கல்வியின் எல்லாக்கூறுகளையும் மறு ஆய்வு செய்ய ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. அது விரைவில் பணி முடிக்கும்.

## முடிவுரை

சிங்கப்பூரில் தமிழ் ஓர் அதிகாரத்துவ மொழியாக விளங்கும் அதே வேளையில், அரசின் இருமொழிக் கொள்கையால் வலுப்பெற்றுப் பாவலர் பள்ளி முதல் பல்கலைக்கழக நிலைவரையிலும் பயிற்றுவிக்கப்படுகிற ஒரு பாடமொழியாகவும் இருக்கிறது. இந்நிலையினை இக்கட்டுரை ஓரளவு சுருக்கமாக எடுத்துக்காட்டியுள்ளது. தமிழ்மொழிக்கல்விக்கெனப் பயிற்று கருவிகள் பலவற்றை உருவாக்கும் பணியிலும், கணினி வழித்தமிழ் கற்பிக்கும் பணியிலும் தமிழ்க்கல்வி உலகில் சிங்கப்பூர் தனக்கென ஒரு தனியிடத்தைப் பெற்றுத் திகழ்கிறது. மொழிகற்பித்தலில் புதிய புதிய முறைகளைக் கண்டறிவதிலும் சிங்கப்பூர் சிறப்பான முன்னேற்றம் கண்டுள்ளது.

## துணைநூல்கள்

திண்ணப்பன்,சுப. சிங்கப்பூரில் தமிழ்மொழியும் இலக்கியமும், தேவகோட்டை, தேன்வள்ளியம்மை பதிப்பகம், 1993.

திண்ணப்பன்,சுப. சிங்கப்பூரில் தமிழ்க்கல்வி, வீழ்ச்சியுற்ற தமிழகத்தில் நூலில், தமிழ் மாருதம், 1998, மதுரை.

முத்தையா,சி. சிங்கப்பூரில் தமிழ் 2-ஆம் உலகத் தமிழாசிரியர் மாநாட்டில் படிக்கப்பட்ட கட்டுரை, 1994.

முத்தையா,சி. சிங்கப்பூர்ப் பள்ளிகளில் தமிழ் கற்பித்தலும், கற்பித்தலொடு தொடர்புடைய பிரச்சினைகளும், சிங்கப்பூர்த் தேசியப் பல்கலைக்கழக அனைத்துலக அரங்கில் தமிழ்மாநாட்டில் படிக்கப்பட்ட கட்டுரை, 2004.

## 10. மலேசியத் தமிழ் இலக்கியம்-புத்தகம் பேசுகிறது காந்திமதி அல்லது கலப்பு மணம் - நாடகம் - ஓர் இரவு

முனைவர் எம்.எஸ். ஸ்ரீலஷ்மி
சிங்கப்பூர்.

ஒப்பந்தக் கூலிகளாகத் தமிழர்கள் ஆங்கிலக் காலனித்துவ ஆட்சியின்கீழ் கொண்டு வரப்பட்டபோது தமிழர்கள் மூடப்பழக்க வழக்கங்களையும், பிற்போக்கான கொள்கைகளையும் தங்களுடன் கொண்டு வந்தனர். இதன் விளைவாக மக்களைச் சீர்திருத்தவேண்டிய தேவை எழுத்தாளர்களுக்கு ஏற்பட்டது. இவ்வடிப்படையில் எழுதப்பட்ட நாடகநூல் காந்திமதி அல்லது கலப்புமணம் என்பதாகும். இந்நூல் கோலாலம்பூர் மோடோன் அச்சியந்திர சாலையில் பிள்ளையார்பட்டியைச் சேர்ந்த மு.முத்தழகு என்பாரின் பொருள் உதவியோடு 1934-ஆம் ஆண்டு அச்சிடப்பட்டது.

இந்நூலாசிரியர் ஆர்.இராமநாதன் என்பவர் ஆவார். இவர் நகரத்தார் மரபைச் சேர்ந்தவராக இருக்கவேண்டும் என்பதை இவருடைய நூல்வழி அனுமானிகக் முடிகிறது. அதிலும் குறிப்பாக இவர் வேந்தன்பட்டி என்னும் ஊரினராக இருக்கலாம். 'மேலவட்டகை' என்று நகரத்தர்களால் அழைக்கப்படும் ஊர்ப்பிரிவில் இவ்வேந்தன்பட்டி அடங்குகிறது. மூலாயாவில் வாழ்ந்தாலும் நாடக ஆசிரியரின் மனம் தான் பிறந்த அல்லது தன் வாழ்வோடு ஏதோ ஒரு வகையில் தொடர்புடைய ஊரைப்பற்றிச் சிந்தித்திருக்க வேண்டும். இது குடியேறிய சமூகத்தில் வாழும் எழுத்தாளரின் மனநிலை எனலாம். இந்நாடகத்தைப் பொறுத்தவரை இம்மனநிலை நாடகக் கதைப்போக்கில் வெளிப்படுகிறது.

ஓர் சீர்திருத்த நாடகம் என்ற அறிமுகத்துடன் அச்சிடப்பட்டுள்ள இந்நாடக நூல் கலப்புத்திருமணம் காதல், திருமணம், சாதியொழிப்பு,

வறுமையொழிப்பு, பெண்கல்வி, பெண்ணுரிமை, பால்ய விவாக எதிர்ப்பு போன்ற புரட்சிக்கருத்துகளை வலியுறுத்தும் நோக்கில் 40 பக்கங்களுக்குள் எழுதப்பட்டுள்ளது.

அய்யர்குலப் பெண்ணான காந்திமதி பள்ளியில் படிக்கும் காலத்தில் கிணற்றுக்குள் விழுந்துவிடுகிறாள். அவளை யாரும் காப்பாற்ற முன்வராத வேளையில் கந்தன் என்பவன் அவளைக் காப்பாற்றுகிறான். அவன் தாழ்ந்த சாதியைச் சேர்ந்தவன். இருவருக்கும் இடையில் காதல் மலர்கிறது. ஆனால் காந்திமதியின் தந்தை அவளைப் பணக்கார ஜமீன்தாருக்குத் திருமணம் செய்ய ஏற்பாடு செய்துவிடுகிறார். இதுகுறித்து காந்திமதிக்கும் அவளுடைய தந்தைக்கும் இடையே வாக்குவாதம் நடைபெறுகிறது. இதனைக் கேள்விப்பட்ட கந்தன் காந்திமதியைக் கடத்திக் கொண்டு போய்த் திருமணம் செய்ய வேண்டும் எனத் திட்டமிடுகிறான். எதிர்பாராத திருப்பமாக ஜமீன்தாரின் ஆள்கள் கந்தனைத் தூக்கிக் கொண்டுபோய் அவருக்குச் சொந்தமான வேந்தன்பட்டி மாளிகையில் அடைத்து வைக்கிறார்கள். காந்திமதி அவனைக் காப்பாற்றுகிறாள். இருவரும் இறுதியில், பல போராட்டங்களுக்குப் பின்னரே கல்யாணம் முடிக்கிறார்கள்.

கதை மிகச் சாதாரணமானது. ஆனால் கொள்கை விளக்கத்துக்காக எழுதப்பட்டதால் பிரச்சார நெடி இருப்பது தெளிவாகவே புலனாகிறது. குறிப்பாக இங்கர்சால் போன்றோரின் புத்தகங்களைக் காந்திமதி வாசித்துவிட்டுத் தந்தையிடம் சமூக சீர்திருத்தக் கருத்துகளைப் பற்றி எடுத்துரைக்கிறாள். சிங்கப்பூர்த் தமிழ்ச் சிறுகதை இலக்கிய வரலாற்றைப் பற்றி எடுத்துரைக்கிறாள். சிங்கப்பூர்த் தமிழ்ச் சிறுகதை இலக்கிய வரலாற்றை ஆராயும்போது முப்பதுகளைச்' சீர்திருத்தக் காலம்' என அமரர் நா.கோவிந்தசாமி குறிப்பிட்டுள்ளார். இக்கருத்தை மனங்கொண்டு இந்நாடகத்தை ஆராய்ந்தால் இந்நாடகம் எழுதப்பட்டது காலத்தின் தேவை என்பது உறுதி. மேலும் தமிழ்நாட்டில் ஈ.வே.ரா. பெரியார் அவர்களின் பகுத்தறிவுக் கொள்கைகள் மிக வேகமாகப் பரவிக் கொண்டிருந்த காலகட்டம் தான் முப்பதுகள். பெரியாரின் வருகையும் இக்காலகட்டத்தில் இவ்வட்டாரத்தில் நிகழ்ந்த முக்கிய நிகழ்வு ஆகும். எனவே சமூக சீர்திருத்தக் கருத்துக்களை

விரும்பும் மக்கள் கூட்டத்தை உருவாக்கிச் சமூக மாற்றத்தை ஏற்படுத்த முயன்றுள்ளார் ஆர். இராமநாதன்.

மலேசியாவின் ஒரு பகுதியாக விளங்கிய சிங்கப்பூரில் தமிழர் சீர்திருத்த சங்கம் தோற்றுவிக்கப்பட்டதும் இங்குக் 'குடியரசு', 'முன்னேற்றம்' ஆகிய பத்திரிகைகள் தோற்றுவிக்கப்பட்டதும் இக்காலகட்டத்தில் நடந்த முக்கிய சம்பவங்கள் ஆகும். விடுதலைக்கு முற்பட்ட சிங்கப்பூர் மலேசியாவின் ஒரு பகுதியாக விளங்கியதைக் கருத்தில்கொண்டால் இந்நாடகம் மலேசிய இலக்கிய வரலாற்றில் சமூக சீர்திருத்தக் கருத்துக்களைப் பரப்ப எழுதப்பட்டது என்பதில் தவறில்லை. இங்கு மலேசியத் தமிழ் இலக்கிய வரலாற்றை எழுதிய மா.இராமையா போன்றோர் பெரியார் வருகையைக் குறிப்பிடுகின்றனரே தவிர அதன் விளைவுகளை முற்றிலும் பதிவு செய்யவில்லை என்றே நினைக்கத் தோன்றுகிறது. 'தமிழ் மலேசியானா' வைத் தொகுத்த பேராசிரியர் இராம.சுப்பையா அவர்களுக்கும் இந்நூல் கிட்டவில்லை என்றே தெரிகிறது.

## நாடக அமைப்பு

கதை இந்தியாவில் நடப்பதாக எழுதப்பட்டிருக்கிறது. ஆனால் நாடகம் அச்சிடப்பட்டுள்ளதோ மலேசியாவில் இந்த முரண்பாட்டை நோக்கும்போது இது படிப்பதற்குரிய நாடகமாக இருக்கலாமா என்றும் எண்ணத் தோன்றுகிறது. இந்நூல் எழுதப்பட்ட காலப் பின்னணியைக் கருத்தில்கொண்டு சிந்தித்தால் இந்நாடகம் மேடை ஏற்றப்பட்டிருக்கவும் வாய்ப்பு உண்டு. நாடகக் காட்சி அமைப்புகள் மிக எளிமை வாய்ந்தவை. அதாவது பூங்கா, ஜமீன்தார் வீட்டுத்தோட்டம் போன்ற இடங்களில் தான் காட்சிகள் நடக்கின்றன. ஆகவே பெரிய செட்டுக்கள் போட்டு நாடகம் நடித்திருக்கத் தேவையில்லை என்பதால் பொருளாதாரத் தேவை கருதி இந்நாடகத்தை எளிய முறையில் மேடை ஏற்றியிருக்கலாம்.

## பாத்திரப்படைப்பு

காந்திமதியெ இந்நாடகத்தில் முக்கியப் பாத்திரம். இவளைச் சுற்றியே கதை நிகழ்கிறது. இவளைக் காதலிக்கும் கந்தன் என்பவன் கதைச் சிக்கலுக்குக் காரணமாகிறான். எனவே இவனையும் காந்திமதிக்கு அடுத்தநிலையில் முக்கியத்துவம் வாய்ந்தவனாகக் கதைப்போக்கில் கொள்ள

வேண்டியிருக்கிறது. காந்திமதியின் தந்தை சுப்பு அய்யர். இலுப்பூர் ஜமீன்தார் ஆகியோர் எதிர்நிலைக் கதைமாந்தர். கந்தனின் தோழர்கள் காந்திமதியின் தயார் பார்வதி, குப்புசாமி தீட்சிதர் என்னும் சோதிடர் ஜமீன்தாரின் காரியஸ்தர் (செயலாளர்) சேவகர் முதலியோர் இந்நாடகக் கதைப்போக்கில் பங்குடையவர்கள். இவர்கள் சிறு பாத்திரங்கள் எனப்படுவோர் ஆவர்.

பாத்திரங்களின் பெயர்களைப் பொறுத்த அளவில் சமூக ஏற்றத்தாழ்வுகள் வெளிப்படையாகத் தெரிகின்றன. கந்தன் கீழ்ச்சாதியினன் என்பதால் அவனுடைய தோழர்களின் பெயர்கள் காடன், கரியன் என்றும் கையாளப்பட்டுள்ளன.

பாத்திரப் பேச்சுகளில் காந்திமதி நன்கு படித்தவள் என்பதும், காடன், கரியன் ஆகியோர் படிக்காதவர்கள் என்பதும், அடிமை வேலை செய்வோர் என்பதும் புலனாகின்றன. மற்றப் பாத்திரங்கள் அவரவர்களின் நிலை அறிந்து பேசுவதாக ஆசிரியர் படைத்துள்ளார். இந்நாடகம் எழுதப்பட்ட காலகட்டத்தில் வெளிவந்துள்ள மற்றப் படைப்புகளைப் பார்க்கும்போது அக்கால மொழிநடையின் போக்கினை அவதானிக்க இயலும். மொழிநடையிலும், 'கற்றோர்கள் என்பதைச் சீலமுடனே சொல்லும் கன வாக்கினாலே அறியலாம்' என்று அறப்பளீசுர சதகம் கூறுவது போலக் காந்திமதியும் கந்தனும் பேசும் பேச்சுக்கள் அவர்களின் உயர்ந்த பண்பையும் தெளிந்த அறிவையும் புரட்சிச் சிந்தனையையும் வெளிப்படுத்துகின்றன. அக்கால மொழிநடை தூய தமிழாயும் பாத்திரங்களுக்கு ஏற்ப அமைவதோடும் சமூக ஏற்றத்தாழ்வுகளைப் பிரதிபலிக்கும் வகையிலும் கொச்சைத் தமிழாயும் அமைகின்றது.

எண்வகை மெய்ப்பாடுகளில் நகைச்சுவைக்கு இந்நாடகத்தில் இடமிருப்பதாகத் தெரியவில்லை.

### சீர்திருத்தக் கருத்துகள்

சமூக ஏற்றத்தாழ்வு, வறுமையின் கொடுமை, கடவுள் நம்பிக்கை, இறை மறுப்புக்கொள்கை, பெண்களுக்குக் கல்வி கொடுத்தல், வரதட்சணைக் கொடுமை, பால்ய விவாகம், பெண்மக்களைக் கிழவர்களுக்குக் கல்யாணம் செய்து கொடுத்தல், சாதிக்கொடுமை போன்ற பல கருத்துகள் இந்நாடகத்தில்

இடம்பெறுகின்றன. பகுத்தறிவுப் பகலவன் என வருணிக்கப்படும் பெரியாரின் கொள்கை விளக்கம்தான் இந்நாடகம். இந்நாடக ஆசிரியர் பெரியாரின் கொள்கைகளைப் பின்பற்றியவர் என்பது தேற்றம்.

## முடிவுரை

சுருங்கக்கூறின் மலேசியத் தமிழ் இலக்கிய வரலாற்றை எழுதுவோர் இந்நாடக நூல் போன்று விடுபட்டுப் போன நூல்களையும் வெளிக்கொணர்தல் வேண்டும். தமிழகத்தில் மயிலை சீனி வேங்கடசாமி அவர்,களுக்குத் தனித்த பெருமை உண்டு. அவர் தமிழர்களின் மறைந்துபோன கலைகள், பண்பாடு போன்றவற்றை வெளிக்கொணரும் முயற்சியில் 'மறைந்துபோன தமிழ் நூல்கள்' என்ற நூலை வெளியிட்டார். அதுபோல மலேசிய சிங்கப்பூர் வட்டாரத்திலும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட வேண்டும் என்பதன் தோற்றுவாயே இக்கட்டுரை

# 11. தமிழ் இலக்கியம் கற்பித்தல் நாவல் - வேள்வி

செ. ஷீலா
சிங்கப்பூர்

இன்றைய தமிழ் உரைநடை வரலாற்றில் நாவல் ஒரு சிறப்பிடம் வகிக்கன்றது. உரைநடை வளர்ச்சியின் பயனாக, நாவல் வளர்ச்சியடைந்தது எனக் கூறின் அது மிகையாகாது. ஆங்கில முதல் நாவல், 1790-இல் தோன்றியது. தமிழ் முதல் நாவல், அதன்பின் ஒன்றரை நூற்றாண்டு கழித்து 1878-இல் தோன்றியது. தமிழ் முதல் நாவல் மயிலாடுதுறை வேதநாயகம் பிள்ளை எழுதிய 'பிரதாப முதலியார் சரித்திரம்' என்பர்.

## நாவல் எனும் சொல்:

'நாவல்' என்ற சொல் பதினேழாம் நூற்றாண்டில் 'டெக்கமரான்' என்ற பெயரில் பொக்காசியோ எழுதித் தொகுத்த சிறுகதைத் தொகுப்பைக் குறிப்பதாக அமைந்தது. பதினெட்டு பத்தொன்பதாம் நூற்றண்டுகளில் வளரத் தொடங்கிய ஓர் இலக்கிய வகை நாவலாகும். 'நாவல்' (Novel) என்ற சொல் 'நாவல்லா' என்ற இத்தாழி மொழிச் சொல்லினின்று பிறந்ததாகும். இதற்கு 'ஒரு சிறிய புதிய பொருள்' (a little new thing) என்பது பொருளாகும்.

தமிழில் நாவல், புதினம் என்ற சொற்கள் வழக்கத்திலுள்ளன. வேதநாயகம் பிள்ளை அவர்கள் ஆங்கில முன்னுரையில் 'Novel' என்ற என மொழிபெயர்த்துகிறார். அவரே அச்சொல்லை 'வசன காவியம்' என மொழிபெயர்த்துள்ளார். ராஜம் அய்யர் 'பொய்க்கதை' எனப் மறைமலை அடிகள் 'புதினம்' என்ற சொல்லைக் கையாண்டார். இன்று ஆங்கிலச் சொல்லான 'நாவல்' பழகுதமிழ்ச் சொல்லாக மாறிவிட்ட நிலையைக் காண்கிறோம்.

**நாவல் விளக்கம்:**

உரைநடையில் விரிவாகக் கதையைக் கூறும் ஓர் இலக்கிய வகையே நாவலாகும். நீண்ட கதை வடிவத்தையே நாவல் என்கிறோம்.

விழுது விட்டு நிற்கும் ஆல்போலப் பலகினை விட்டுக் கதையை வளர்த்துக் கூறுவது புதினம். புல பறவைகள் கூட்டாகச் சேர்ந்து பறப்பது போன்றது புதினம். இது பலவகை வண்ணங்களைக் கொண்ட ஓவியம் போன்றது.

வாழ்வே புதினமாகிறது. ஒரு வாழ்க்கையைச் சுவையாகச் சொன்னால், அது நாவலாகிவிடும். முனித வாழ்வின் ஒரு கூறினை நாவல் வெளிப்படுத்துகிறது. வுாழ்வில் நடைபெற்ற உண்மை நிகழ்ச்சிகளின் நிழல் வடிவங்களே நாவலில் இடம்பெறுகினறன. புகழ்பெற்ற எழுத்தாளர்ளை, பல்வேறு மனிதர்ளின் வாழ்க்கையில் நடைபெறும் நிகழ்ச்சிகளையே ஒரு கோவைப்படுத்தி, ஒரு தொடர்கதையாக – ஒருவர் கதையாக மாற்றிக் கற்பனை செய்து எழுதவிடுகிறார்கள்.

நாவல் பலமணிநேரம் படிக்கப்படக் கூடியது. நாவலுக்கு இயல் அல்லது அத்தியாயம் (Chapter) உச்ச அலகாகும்.

மேலைநாட்டார் நாவலை.

1. பண்பு விளக்கப் புதினம் (Character Novel)
2. நிகழ்ச்சிப் புதினம் (Dramatic Novel)

என இரண்டாகப் பகுப்பர்.

நாவல் என்பது கற்பனை இலக்கியமாயினும் கற்பனையை உண்மை போலக் காட்டுவதில்தான் அதன் தோற்றம் அமைந்தது. கதைப்பின்னலும் கதை மாந்தரும் நாவலில் சிறப்பிடம் பெறுவதைப் பல நாவல்கள் வாயிலாக அறியமுடிகிறது. நாவல்களில் கதைப் பின்னல் செவ்வையாகப் பின்னப் பெற்று இறுதியயில் விவரிக்கப்படும் போக்கை அறியலாம். நல்ல நாவல்கள் கதை மாந்தர்களின் படைப்பிலேயே தலைசிறந்து நிற்கின்றன. நாவலில் கதை மாந்தர்கள் மண்ணின் மக்களாக உணர்ச்சிக் கொள்கலமாக உயிரோடு உலவுகின்றனர்.

**நாவலின் வகைகள்**

1. வரலாற்று நாவல்கள் 5. குடும்ப நாவல்கள்
2. சமுதாய நாவல்கள் 6. கூட்டு நாவல்கள்
3. துப்பறியும் நாவல்கள் 7. புதுமை நாவல்கள்
4. நகைச்சுவை நாவல்கள் 8. குட்டி நாவல்கள்

எனப் பலவகைகள் உள்ளன.

**நாவலின் நடை:**

மேலை நாட்டார் நாவலில் வழங்கும்நடையை ஐந்து வகையாகப் பகுப்பர். இப்பகுப்பு தமிழுக்கும் பொருந்தும்.

1. கதைக் கூற்று அல்லது கதைத் தொடர் உரை (Narrative)
2. உரையாடல் (Diologue)
3. வருணனை (Description)
4. விளக்கவுரை அல்லது கருத்துரை (Commentary)
5. பாத்திரத் தனியுரை அல்லது நனவோட்டம் (Interior Monologue)

நாவல் கூறும் முறையில் படர்க்கைக் கூற்று முறையே பெரும்பாலான நாவலாசிரியர்களின் நெறியாக விளங்குகிறது.

**வேள்வி**

சிங்கையிலும் நாவல் இலக்கியம் குறிப்பிட்டுச் சொல:லும்படியான வளர்ச்சி கண்டுள்ளது. தலைசிறந்த எழுத்தாளர்கள் பலர் சிறந்த நாவல்களை எழுதியுள்ளனர். அவற்றுள் ஒன்றுதான் வேள்வி எனும் நாவல்.

**ஆசிரியரைப் பற்றி...**

வேள்வியின் ஆசிரியர் நா. கோவிந்தசாமி ஆவார். சிங்கப்பூரின் இலக்கிய வரலாற்றில் மிக முக்கிய இடத்தைப் பெற்றிருப்பவர் நா. கோவிந்தசாமி. இலக்கிய ஈடுபாட்டுடன் கணினித்துறையிலும் அவர் மிகுந்த ஆர்வமும் சிறப்பும் பெற்றிருந்தார். சிங்கப்பூரில் இணையத்தில் தமிழ் இடம்பெறச்செய்ய அரசு மேற்கொண்ட முயற்சியில் அவருடைய பங்கு மிக முக்கியமானது.

எழுத்தாளரின் மனத்தில் நிகழ்ந்துகொண்டிருக்கும் சில சிந்தனைப் போக்குகளை தங்கள் படைப்புகளின் மூலம் வெளிப்படுத்துவார்கள். அவ்வாறு வெளிப்பட்ட ஒரு சிந்தனைதான் 'வேள்வி' எனும் நாவல்.

**வேள்வி – தலைப்புப் பொருத்தம்:**

1. 'வேள்வி' என்றால் 'தியாகம்' என்று பொரள். நூாவலின் முக்கிய கதாபாத்திரமான குமரன், தனது சமுதாயத்தின் குறையை வெளிச்சம் போட்டுக் காட்டக்கூடாது என்பதற்காக, தான் அரும்பாடுபட்டுச் செய்த ஆய்வின் முடிவை பல்கலைக்கழகத்தில் ஒப்படைக்கால் விட்டு விட்டான். தனது சமுதாய நன்மைக்காக தனது ஒன்றரை ஆண்டுகால உழைப்பையும், பட்டம பெறுவதையும் தியாகம் செய்தான். எனவே, இந்நாவலுக்கு வேள்வி என்ற தலைப்பு மிகப் பொருத்தமாயுள்ளது.

2. ஏதாவது நலல காரியம் நடைபெற வேண்டுமென்பதற்காக அக்கினி சாட்சியாகச் சிலவற்றைத் தீயிலிட்டு யாகம் செய்தல் வேள்வி ஆகும். குமரனும் சமுதாயத்தில் சீர்திருத்தம் ஏற்படுவதற்காக தனது அய்வின் முடிவை தீயிலிடுவது போல் பல்கலைக்கழகத்தில் ஒப்படைக்காமல் விட்டு விட்டான். துமிழ்ச் சமுதாயத்தின் முன்னேற்றம் எனும் வேள்வியில் முனைப்புடன் இறங்கினான். எனவே, இந்நாவலுக்கு வேள்வி எனும் இத்தலைப்பு மிக மிகப் பொருத்தமே.

**கதைச்சுருக்கம்:**

மாமரத்து இலாகா தொழிலாளர்கள் குடியிருப்பில் வசித்து வருபவர் க்ருப்பணண மண்டோர். அவர் வீட்டருகே இருக்கும் ஈஸ்வரன் கேரியலை உருவாக்கியவரே அவர்தான். அவரது முன்னோர்கள் வழிபட்டு வந்த முனியாண்டியை அங்கு ஸ்தாபித்து, படையல் வைத்து, உண்மையான பக்தியுடன் வணங்கி வந்தார். பின்னர், கேரியலைப் பெரிதுபடுத்த நன்கொடை வசூலிக்கப்போய், இவர் கோயில் பணிகளில் இருந்து விலகும் நிலை ஏற்பட்டது. முனியாண்டி கோயில், ஈஸ்வரன் கோயிலாக மாறியுள்ளது.

சிங்கப்பூரில் இந்துக் கோயில்களின் பரிணாம வளர்ச்சி பற்றி ஆய்வு செய்யும் குமரன் என்னும் மாணவன் கருப்பண்ண மண்டோரைச் சந்தித்து,

ஈஸ்வரன் கோயிலின் வரலாற்றைக் கேட்டறிகிறான். மண்டோரும் தன் உள்ளக் குமுறல்களைக் கொட்டித் தீர்க்கிறார். ஆய்வுதொடர்பாக குமரன் பல கோயில் பிரதிநிதிகளைச் சந்தித்துப் பேசுகிறான். அப்பொது அவன் கண்ட நிகழ்ச்சிகள் அவன் உள்ளத்தைக் குடைகின்றன. கோயில் பணிகளுக்காக நன்கொடைகள் வந்து குவிகின்றன. இதைக் கோயில் நிர்வாகம் நல்ல காரியங்களுக்காகச் செலவிடலாமே என்று துடிக்கிறான்.

தனது கருத்தை ஒரு கருத்தரங்கில் ஆவேசத்துடன் வெளியிடுகிறான். கோயில் பிரதிநிதிகள் யாரும் அவன் கருத்தை விரும்பவில்லை. தனது ஆய்வை மிகவும் சிறப்பாக முடித்து டாக்டர் டேவிட்சனிடம் காட்டிப் பாராட்டும் பெற்றான். ஆனால் அவன் தனது ஆய்வின் முடிவைப் பல்கலைக்கழகத்தில் ஒப்படைத்துப் பட்டம் பெற எண்ணவில்லை. தனது சமுதாயத்தின் கறைகளை வெளிச்சம் போட்டுக் காட்ட அவன் விரும்பவில்லை. தனது சமுதாயத்தின் குறைகளைக் களைவதே அவன் கருத்தில் நிலைத்தது. அப்பணியில் இறங்க கருப்பண்ண மண்டோரை மீண்டும் சென்று சந்திக்கிறான். தனது குறிக்கோளை நோக்கி முனைப்புடன் செயல்படத் தொடங்குகிறான்.

**கதைக்கரு:**

பெரும்பாலான சிங்கப்பூர்கள் கோயில்பணிக்காக நன்கொடை கேட்டால் வாரி வாரி வழங்குகின்றனர். ஆனால், கல்வி நிதி என்றால் தயக்கம் காட்டுகின்றனர். கோயில்களில் காணிக்கைகள் வந்து குவிகின்றன. கோயில்களின் மூலம் வசூலாகும் பணத்தைக் கொண்டு சமுதாயத்திற்குப் பயன்படும்படி, பல நல்ல காரியங்களைச் செய்ய வேண்டும். ஆலயங்கள் வழிபாட்டிடங்களாக மட்டும் இல்லாமல் நம் சமுதாய உயர்வுக்குப் பாடுபடும் சமூக மன்றங்களாகவும் செயல்பட வேண்டும் என்பதைக் கருப்பொருளாகக் கொண்டு இந்நாவல் அமைக்கப்பட்டுள்ளது.

**முக்கியக் கதாபாத்திரங்கள்**

1. கருப்பண்ண மண்டோர்
2. குமரன்

இரண்டே இரண்டு கதாபாத்திரங்கள் இந்நாவலில் முக்கியப் பங்கு வகிக்கின்றன. கதைக்கு அடித்தளமாய் வரும் கருப்பண்ண மண்டோரும், கதையின் நாயகன் குமரனும் முக்கியக் கதாபாத்திரங்களாவர்.

1. கருப்பண்ண மண்டோரின் மனைவி வேலாயி, பேரன் ராமு, மூத்த மகன் காளி, இளைய மகன் முத்து.
2. ஈஸ்வர ஆலயம் - கண்ணுச்சாமி பண்டாரம், மூக்கையன், கந்தையா, சதாசிவம்,
3. இந்தியக் கலவி அறக்கட்டளை நிறுவனர்.
4. தமிழ்ப் பேராசிரியர்
5. பேராசிரியர் டேவிட்சன்
6. இரு இளைஞர்கள் - காளியம்மன் கோவில் சொற்பொழிவு ஏற்பாட்டாளர்கள்
7. வணிகப் பெருமகன்
8. புகழ்பெற்ற கோயிலின் தர்மகர்த்தா

மேற்கூறப்பட்ட கதாபாத்திரங்கள் நாவலில் துணைக்கதாபாத்திரங்களாய் வலம் வந்து கதைக்கு மேலும் வலு சேர்க்கின்றன.

## நாவலின் தொடக்கம்

கதையின் தொடக்கத்திலேயே கதையின் கருவான ஈஸ்வர ஆலயம் பற்றிய அறிமுகம் இடம்பெறுகிறது. குதையின் மைய சிக்கலான ஈஸ்வர ஆலயம் இருக்கும் இத்தைப்பற்றிக் கூறி கதையைத் தொடங்கி இருப்பது ஆசிரியரின் திறமைக்குச் சிறந்ததோர் எடுத்துக்காட்டாகும்.

“ஜொகூரை நோக்கிச் செல்லும் அந்தப் பெரிய சாலையிலிருந்து பிரியும் ஒரு சிறு சந்தின் வழியாகச் சென்று வலப்புறமாகத் திரும்பினால் தான், அக்கோவில் தெரியும்.”

## நாவலின் வளர்ச்சி

ஈஸ்வர ஆலயம் பற்றிய வரலாற்றில் தொடங்கி, சமய நிர்வாகிகளுடனான சந்திப்பு, கோயில்களின் வழிபாட்டுமுறை, முனியாண்டி

கோயில் ஈஸ்வர ஆலயமாக மாறிய கதை, சமுதாயத்தின் அவலநிலை, குமரனின் இந்து ஆலயங்கள் தொடர்பான ஆய்வுகள் என கதையின் வளர்ச்சி சீராகக் கொண்டு செல்லப்படுகிறது.

**கதைமாந்தர் குணநலன்கள்:**

குமரன்:

கதையின் நாயகனான குமரன் ஒரு குறிக்கோள் உடையவனாகச் சித்திரிக்கப் பெறுகிறான். சமுதாயத்தில் இருக்கும் சீர்கேடுகளை எண்ணி தனக்குள் குமுறுகிறான். இந்துக் கோவில்களில் உண்மையான பக்தி இல்லாமல், பெருமைக்காக வழிபாடு நடத்தும் ஒரு சிலரைக் கண்டு மனம் புழுங்குகிறான். கல்விப் பணிக்காக நிதி கேட்டால் தயங்கும் இந்துச் சமுதாயம், கோவில் கோபுரம் கட்ட வாரி வழங்குவதைக் கண்டு உள்ளுக்குள் துடிக்கிறான். அப்பணத்தைக் கொண்டு சமுதாய முன்னேற்றத்திற்கு உதவலாமே என்று ஏங்குகிறான்.

"தமிழ்ச் சமூகத்தின் மீது கொண்ட ஓர் ஆழ்ந்த ஈடுபாடே, குமரன் சமூகவியல் துறையைத் தேர்ந்தெடுத்ததற்கு முக்கியக் காரணமாக அமைந்தது."

"நாம் எவ்வளவோ செய்யலாமே... கோயில்கள் வழிபாட்டுக்கு மட்டுமே உரிய இடங்கிற எண்ணத்தையே நாம் மாற்றணும். கோயில் வருமானத்தைக் கொண்டு பள்ளிக்கூடம், கின்டர்கார்டன் போன்ற கல்வித்தொடர்பான வகுப்புகளை நடத்தலாமே?"

"ஆலயங்கள் வழிபாட்டிடங்களாக மட்டும் இல்லாமல் நம் சமுதாய உயர்வுக்குப் பாடுபடும் சமூக மன்றங்களாகவும் செயல்படவேண்டும்."

தனது சமுதாயத்தின் குறைகளை வெளிச்சம்போட்டுக் காட்டக்கூடாது என்பதற்காக தனது ஒன்றரை ஆண்டுகால உழைப்பின் பயனான ஆய்வின் முடிவையே பல்கலைக்கழகத்தில் ஒப்படைக்காமல் தியாகம் செய்கிறான். சமுதாயத்தின் மேம்பாட்டுக்காக வேள்வியில் இறங்குகிறான். தனது கருத்தை தைரியமாகக் கருத்தரங்கில் கூறுகிறான்.

"என்னுடைய சமூகத்தில் உள்ள ஒரு குறையைப் பெரிசா வெளிச்சம் போட்டுக் காட்டி ஒரு பட்டம் பெறுவது எனக்கு என்னவோ மிகவும் கேவலமாக இருக்கு".

"தீஸிஸைப் பல்கலைக்கழகத்தில் சமர்ப்பித்துப் பட்டம் வாங்குவதைவிட, எங்க சமூகத்தில் உள்ள குறைபாடுகளைக் களைவது தான் என்னுடைய தற்போதைய கடமையென்று நான் நினைக்கிறேன்".

**நாவலின் முடிவு:**

இறுதியில் குமரன் கருப்பண்ண மண்டோரை மீண்டும் சந்திக்க வருகிறான். தடுமாறி கீழே விழ இருந்த அவரைத் தாங்கிப் பிடிக்கிறான்.

"அவன் பிடியில் இருந்த ஓர் உறுதி அவரை நிமிரச் செய்தது.

கிழவரைத் தாங்கிப்பிடித்துக் கொண்டு நிமிர்ந்த குமரனின் பார்வை, பக்கத்தில் நிற்கும் கோவிலில் நிலைத்தது

குமரனின் பார்வை கோவிலில் நிலைத்தது என்று, குமரன் சமுதாயப் பணியில் இறங்கிவிட்டான் எனும் பாங்கில் கதையை முடித்திருக்கிறார் ஆசிரியர். ஈஸ்வரன் கோவிலைப் பற்றி மண்டோரின் மனதில் மண்டிக் கிடந்த ஏக்கங்களுக்கு குமரன் மூலம் ஒரு தீர்வு ஏற்படும் என்ற நம்பிக்கை ஏற்படும்படி கதை முடிக்கப்பட்டுள்ளது.

இக்கதையில் புதிய கருத்து இருக்கிறது நம் சமூகத்திற்குத் தேவையான உயிர்த்துடிப்பு இருக்கிறது.

## தேசிய கல்விச் செய்தி

சிங்கப்பூர் பல இன மக்கள் வாழும் நாடு. பல மதங்கள், பல மொழிகள், பல பண்பாடுகள் ஆகியவை இங்கு வழக்கில் உள்ளன. சீனர்கள், மலாய்க்காரர்கள், இந்தியர்கள், வெளிநாட்டினர் எனப் பல சமூகங்கள் இந்நாட்டில் வாழ்கின்றன. இச்சமூகங்களிடையே ஒருமைப்பாட்டினை மேம்படுத்துவதற்காக நம் அரசு பல நடவடிக்கைகளை மேற்கொண்டு வருகிறது. முக்கியமாக தேசிய கல்வியின் அவசியத்தை அனைத்துத் துறைகளிலும் வலியுறுத்தி வருகின்றது.

மாணவர்களுக்குக் கல்வி புகட்டும்போது தேச உணர்வையும், தேசப்பற்றையும், நாட்டின் முன்னேற்றத்திற்கு மாணவர்கள் ஆற்றும் கடமைகளைப் பற்றியும் இணைத்துக் கூறுவதே தேசியக் கல்வி ஆகும். ஒருமைப்பாடு, இனவொற்றுமை, மத ஒற்றுமை, நாட்டின் பாதுகாப்பு போன்றவை பாடங்களில் புகுத்தப்பட்டுக் கற்பிக்கப்படும்.

**ஆறு தேசியக் கல்விச் செய்திகள்**

1. சிங்கப்பூர் நமது தாயகம், இந்த நாட்டிற்கு உரிமையுடையவர்கள் நாம்.
2. இன சமய நல்லிணக்கத்தைக் கட்டிக் காப்போம்.
3. தகுதிக்கு முதன்மை கொடுப்போம். ஊழலைத் தடுப்போம்.
4. சிங்கப்பூர் வாழ்வுக்கு யாரும் கடப்பாடு கொண்டிருக்கவில்லை.
5. சிங்கப்பூரை நாமே தற்காக்க வேண்டும்.
6. நமது எதிர்காலத்தில் நமக்கு நம்பிக்கை இருக்கிறது.

வேள்வி நாவலில் இடம்பெறும் தேசியக் கல்விக் கூறுகள்

**1.இன சமய நல்லிணக்கத்தை நாம் கட்டிக் காக்க வேண்டும்**

**அ. மத நல்லிணக்கம்**

குமரன் கோயில் தர்மகர்த்தாவிடம் கோயில் சொத்துக்களைக் கொண்டு, நம்நாட்டு மக்களுக்குப் பல நன்மைகள் செய்யலாமே என்று கூறும்போது, கிறிஸ்தவ சமயத்தினர் ஆற்றும் தொண்டுகளை ஒரு சிறப்பான உதாரணமாக எடுத்துக்காட்டுகிறான். அவர்கள் செய்யும் தொண்டைப் பாராட்டிப் பேசுகிறான். இவ்வாறு பிற மதத்தினரைப் பாராட்டிப் பேசுவதன்வழி ஆசிரியர் மத நல்லிணக்கத்தை வலியுறுத்துகிறார்.

'நம்ப பிள்ளைங்களுக்காக நீங்க கோயில் பணத்தைக் கொண்டு, ஏன் ஒரு ஜூனியர் காலேஜ் கட்டக்கூடாது. ஜூனியர் காலேஜ் கட்டுவதற்கு நமது அரசாங்கம் கொடுத்திருக்கும் வாய்ப்புகளைக் கிறிஸ்தவ மதத்துக்காரங்க எவ்வளவு சிறப்பாகப் பயன்படுத்திக் கொள்றாங்க'

**ஆ. இன நல்லிணக்கம்**

இந்தியர்கள் கோயில் கட்டுவதிலும் கோபுரம் கட்டுவதிலும் காட்டும் ஆர்வத்தைப் பள்ளிக்கூடங்கள் கட்டுவதிலும் காட்ட வேண்டும் என்று குமரன்

கூறும்போது, சீனர் வளர்ச்சிக்காகப் பாடுபட்ட ஒரு சில சீனர்களை மனதாரப் பாராட்டிப் பேசுகிறான். இது இன நல்லிணக்கத்தை வலியுறுத்துகிறது.

'உழைப்பால் உயர்ந்த பல சீன வணிகர்கள், சீனக்கல்வி வளர்ச்சிக்கு எத்தனையோ பள்ளிக்கூடங்களைக் கட்டிக் கொடுத்துள்ளனர். டான் ஜியான் கிம் (Tan Jian Kim) தான் பிறந்த ஆமோயில் ஒரு பல்கலைக்கழகத்தைக் கட்டினாலும்கூட சிங்கப்பூரின் கல்வி வளர்ச்சியை மறந்துவிடவில்லை.

### இ. இன மத நல்லிணக்கம்

சீன வள்ளல் ஒருவர் தமிழ் முஸ்லீம் பள்ளியைக் கட்டுவதற்கு நிதி உதவி கொடுத்த செய்தியைக் குமரன் கூறும்போது இன, மத நல்லிணக்கம் இரண்டும் வெளிப்படுகிறது.

'ஐம்பதுகளின் இறுதியில் ஒரு சிறிய தமிழ் முஸ்லீம் அமைப்பு ஒரு தமிழ் உயர்நிலைப் பள்ளியை எங்க நாட்டில் கட்ட முயற்சி செய்தாங்க. ஒரு சீன வள்ளல் தான் பெரும் தொகையைக் கொடுத்துக் கட்டிட நிதியைத் தொடக்கி வைத்தார்'

### 2.சிங்கப்பூர் நம் தாயகம்: நம்நாட்டின் அங்கம் நாம்

கோயில் தர்மகர்த்தா குமரனிடம் எங்கள் ஊரில் பள்ளிகள் கல்லூரிகள் கட்டுவோம் என்று கூறும்போது சிங்கப்பூர்த் தமிழ்ப் பிள்ளைகளுக்கு என்ன செய்யப் போகிறீர்கள்? என்று கேட்கும்போது தாய்நாட்டுப்பற்றும், நம் நாட்டிற்காக எதாவது செய்ய வேண்டும் என்ற உணர்வும், நம்நாட்டின் அங்கம் நாம் என்ற உணர்வும் வெளிப்படுகிறது.

'அதான் நான் முதலிலேயே சொல்லிட்டேனே. எங்க பிள்ளைகளுக்காக எங்க ஊர்ல காலேஜ் கட்டத் திட்டம் போட்டு இருக்கிறோம்னு....

சிங்கப்பூர்த் தமிழ்ப்பிள்ளைகளுக்கு அதனால ஒண்ணும் பயனில்லையே'.

### 3.சிங்கப்பூரை நாமே தற்காக்க வேண்டும்

குமரன் தன்னுடைய சமூகத்தில் உள்ள குறையைப் பெரிதாக வெளிச்சம் போட்டுக்காட்ட விரும்பாமல், தன்னுடைய பல்கலைக்கழகத்தில்

ஒப்படைக்காமல், சமூகப்பணி செய்ய விழைகிறான். தன் சமுதாயத்தின் குறைகளைக் களைய முற்படுகிறான். இது சிங்கப்பூரை நாமே தற்காக்க வேண்டும் என்ற தேசியக் கல்விச் செய்தியை நமக்குப் புகட்டுகிறது.

'என்னுடைய சமூகத்தில் உள்ள ஒரு குறையைப் பெரிசா வெளிச்சம் போட்டுக் காட்டி ஒரு பட்டம் பெறுவது எனக்கு என்னவோ மிகவும் கேவலமா இருக்கு. என்னுடைய உடல் ஊனத்தைக் காட்டிப் பிச்சை கேட்பதற்குச் சம்மா நான் இதை நினைக்கிறேன். தீஸிஸைப் பல்கலைக்கழகத்தில் சமர்பித்துப் பட்டம் வாங்குவதைவிட, எங்க சமூகத்தில் உள்ள குறைபாடுகளைக் களைவது தான் என்னுடைய தற்போதைய கடமை என்று நான் நினைக்கிறேன்'

## 4.நமது எதிர்காலத்தில் நமக்கு நம்பிக்கை இருக்கிறது

இறுதியில் குமரன் தன்னுடைய சமூகத்தின் குறைகளைக் களையும் குறிக்கோளுடன் மீண்டும் கருப்பண்ண மண்டோரைச் சந்திக்க வருகிறான். சமுதாயத்தில் மாற்றத்தை ஏற்படுத்த முடியும் என்ற நம்பிக்கையில் பணியில் ஈடுபடுகிறான். இந்நிகழ்ச்சி நமது எதிர்காலத்தில் நமக்கு நம்பிக்கை வேண்டும் எனும் உணர்வை வெளிப்படுத்துகிறது.

'எங்க சமூகத்தில் ஒரு மாற்றத்தை ஏற்படுத்துவதற்கு, இதுதான் சிறந்ததுன்னு எனக்குப்படுது. இதுவரைக்கும் நான் உழைச்ச உழைப்புக்கு ஓர் அர்த்தம் வேணும் எனக்கு'

'ஒரு வேள அரசியல்வாதிங்க துணையோடு எங்க சமூகத்தில் ஒரு மாற்றத்தை ஏற்படுத்த நான் முனையலாம்.'

## வேள்வி நாவலை வகுப்பில் கற்பிக்கப் பயன்படுத்தும் முறைகள்

இந்நாவலை கீழ்வரும் முறையில் ஆறு பாட வேளைகளாகப் பிரித்து நடத்தினால் பாடநோக்கம் நிறைவேறுவதுடன் பாடம் சிறப்பாகவும், நாவல் என்ற இலக்கிய வகையை மாணவர்கள் படிக்கும் ஆர்வத்தைத் தூண்டும் வகையிலும் அமையும். மேலும் மாணவர்கள் நாவலின் கருப்பொருளை அறிந்துகொள்வதுடன், நாவலின் அனைத்துக் கூறுகளையும் சுவைக்க முடியும்.

ஒவ்வொரு பாடவேளையும் ஒரு மணிநேரம் நடக்கும்படி அமைத்துக்கொள்ள வேண்டும். இப்பாடத்தை உயர்நிலை நான்காம் வகுப்பு மாணவர்களுக்கு நடத்தினால் ஏற்புடையதாயிருக்கும்.

ஒவ்வொரு வகுப்பிலும் நாவல் பற்றி என்னென்ன செய்திகள் கற்றுக்கொடுக்கப்படுகின்றன? எவ்வாறு கற்றுக்கொடுக்கப்படுகின்றன? என்னென்ன நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படுகின்றன? எந்த உத்திமுறை பயன்படுத்தப்படுகின்றது? மாணவர்களுக்கு எவ்வகைப் பயிற்சிகள் கொடுக்கப்படுகின்றன போன்றவற்றைச் சுருக்கமாகக் காண்போம்.

## முதல் பாடவேளை

### பாட அறிமுகம்

1. ஒரு பழத்தின் பெயர் கொண்ட இலக்கியம் வகை எது? என்ற கேள்வியை மாணவர்களிடம் கேட்டு, அவர்களின் சிந்தனையைத் தூண்டிப் பாடத்தை அறிமுகம் செய்தல்
2. புகழ்பெற்ற சில நாவல் புத்தகங்களை மாணவர்களிடம் காட்டி, இவை எவ்வகை இலக்கியத்தைச் சார்ந்தவை? ஏனக் கேட்டுப் பாடத்தை அறிமுகம் செய்தல்.

## KWL உத்திமுறை

முதலில் மாணவர்கள் நாவலைப் பற்றித் தாங்கள் தெரிந்து வைத்துள்ள செய்திகளையும், தெரிந்துகொள்ள விரும்பும் செய்திகளையும் தாளில் எழுதிக்கொள்வர். பின்னர்,

1. நாவலின் வரையறை
2. நாவலின் சிறப்பு அம்சங்கள்
3. நாவலின் அமைப்புமுறை
4. நாவலின் வகைகள்
5. நாவலைக் கற்கவேண்டியதன் அவசியம்
6. சிங்கப்பூர் நாவல்கள் பற்றிய செய்திகள்

போன்றவற்றை மாணவர்களுக்கு விளக்கிக் கூறிவிட்டு, நாவல் பற்றி மாணவர்கள் தெரிந்துகொண்ட செய்திகளை KWL (உத்திமுறை) தாளில் எழுதச் சொல்லல்.

**இரண்டாம் பாடவேளை**

**பாட அறிமுகம்**

1.வேள்வி செய்யும் காட்சிகள் உள்ள திரைப்படக் காட்சிகளை மாணவர்களுக்குக் காண்பித்த, இந்நிகழ்ச்சியை நாம் என்னவென்று கூறுவோம்? என்ற கேள்வியைக் கேட்டு, 'வேள்வி' எனும் நாவல் தலைப்பை மாணவர்களுக்கு அறிமுகம் செய்தல்

2. வேள்வி நாவலின் ஆசிரியர் நா.கோவிந்தசாமியின் புகைப்படத்தைத் திரையில் காண்பித்து, இவர் யார்? என மாணவர்களிடம் கேட்டு, ஆசிரியரை அறிமுகம் செய்தல்.

பெயர்க்காரணம் விளக்குதல்

கருப்பொருளை விளக்குதல்

கதைச்சுருக்கத்தை விளக்கமாகக் கூறல்

கதாபாத்திரங்களின் தோற்றத்தையும், பாத்திரத் தன்மையையும் சித்திரிக்கும் பொருத்தமான படங்களைக் காட்டி, நாவலின் கதாபாத்திரங்களை அறிமுகம் செய்தல்.

நடவடிக்கை – மாணவர்களைக் கதைச்சுருக்கத்தை வாய்மொழியாகக் கூறச் சொல்லல்.

**மூன்றாம் பாடவேளை**

நாவலின் முதல் ஐந்து அத்தியாயங்களை விளக்குதல்

கதைத்தொடக்கம் பற்றி விளக்குதல்

முக்கியக் கதாபாத்திரங்களான குமரன் மற்றும் கருப்பண்ண மண்டோரின் பாத்திரப் படைப்புப் பற்றிய விளக்கம்.

கதையின் போக்கை விளக்குதல்

ஐந்து அத்தியாயங்கள்வரை இடம்பெறும் கதாபாத்திரங்களின் பண்பு நலன்கள் பற்றிய விளக்கம்.

நடவடிக்கை – மாணவர்கள் குழுக்களாகப் பிரிந்து, ஏதாவது ஒரு அத்தியாயத்தைத் தேர்ந்தெடுத்து நடித்துக் காட்டுவர்.

**நான்காம் பாடவேளை**

6 முதல் 10 வரையிலான அத்தியாயங்களை விளக்குதல்

கதை வளர்ச்சிப் பற்றி விளக்குதல்

மொழிநடையை உதாரணங்களோடு விளக்குதல்

நாவலில் ஆசிரியர் கையாண்டுள்ள உத்திமுறையைப் பற்றி விளக்குதல்

பிறமொழிக் கலப்பை உதாரணங்களுடன் விளக்குதல்

சிங்கை மணம் கமழும் சொற்கள் இடம்பெற்றுள்ள திறத்தை விளக்குதல்

நடவடிக்கை – மாணவர்கள் குழுவாக அமர்ந்து, குறிப்பிட்ட அத்தியாயத்தை மட்டும் வாசித்து, அதன் சாராம்சத்தை வகுப்பின் முன் வந்து பகிர்ந்து கொள்ளல்.

**ஐந்தாம் பாடவேளை**

11 முதல் 15 வரையிலான அத்தியாயங்களை விளக்குதல்

கதையின் முடிவு பற்றி மாணவர்களுடன் கலந்துரையாடல்

ஆசிரியரின் சமுதாயப் பார்வை பற்றிய விளக்கம்

நாவலில் இடம்பெற்றுள்ள தேசியக்கல்விச் செய்திகளை விளக்குதல்

நடவடிக்கை – ஒவ்வொரு மாணவரும் நாவலில் இடம்பெறும் தேசியக்கல்விச் செய்திகளை உதாரணங்களுடன் எடுத்து எழுதுதல்

**ஆறாம் பாடவேளை**

குமரன் எடுத்த முடிவு பற்றி மாணவர்களின் கருத்து என்ன? என்பது பற்றியும்,

இந்துக் கோயில்கள் எவ்வகையில் எல்லாம் சமூக சேவை செய்யலாம் என்பது பற்றியும் மாணவர்களுடன் கலந்துரையாடல்

கருப்பண்ண மண்டோரின் வைராக்கியம் பற்றி மாணவர்களின் கருத்தைக் கேட்டறிதல்

நாவலின் முடிவை வேறு எவ்வகையில் எல்லாம் மாற்றி அமைத்திருக்கலாம் என்று மாணவர்களைக் கற்பனையாகக் கூறச் சொல்லல்.

தலைப்புப் பொருத்தம் பற்றி மாணவர்களுடன் கலந்துரையாடல்

நடவடிக்கை - இந்நாவலில் இருந்து மாணவர்கள் கற்றுக்கொண்ட செய்திகளையும், ஒவ்வொரு வகுப்பிலும் பெற்ற அனுபவங்களையும் பற்றி ஒரு கட்டுரை எழுதச் சொல்லல்

**துணைநூற்பட்டியல்**


1. தேடி (நாவல் - வேள்வி)
2. தமிழ் இலக்கிய வரலாறு, முனைவர் தமிழண்ணல்.
3. தமிழ் இலக்கியக் கொள்கை-9, ச.வே.சுப்ரமணியம்.
4. இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் உரைநடை, முனைவர் சு.சக்திவேல்.
5. தமிழ் இலக்கிய வரலாறு.

# 12. திரையிசைப் பாடல்களில் கண்ணதாசனின் அறம்

துரைமுத்து சுப்ரமணியம்
(முனைவர் பட்ட மாணவர்)
தமிழ்த் துறை
தெங்கு அம்புவான் அப்சான்
ஆசிரியர் கல்வியியல் கழகம்
பகாங்.மலேசியா

**முன்னுரை**

தனித்து வாழ்ந்த மனிதன் தன் இஷ்டபடி தான்தோன்றித்தனமாக வாழலானான். அதில் தனிச் சுகமும் அமைதியும் கண்டான். கூட்டாகச் சமுதாயமாக அவன் வாழத் தலைப்பட்டப் போழ்து நிறைவு என்பது கண்களால் காண இயலாத ஒன்றாகியது. இவ்வொருவரும் தனது தனக்கென்று சுயநலமாகச் சேமித்து வைக்க முற்பட்டதே இதற்குக் காரணமாகியது. மனிதனின் மன அமைதி குலைந்தது. அவ்வமைதி இன்மையால் வறுமை, பிணி, பகை, களவு போன்றவை உருவெடுத்தன. இதனை ஒழுங்குபடுத்த எத்தனித்தப் போதுதான் அறவோரும் அறிஞர் பெருமக்களும் அவ்வப்போது அமுதமொழிகளை எடுத்துரைத்தனர்; செப்பினர்; வழிகாட்டினர். இதுவே பின் நாளில் அறமாக ஒவ்வொரு சமுதாயத்தினரால் ஒழுகப்பட்டது.

பின்னாளில் அவ்வறச் சிறப்பியல்புகளைப் பிரம்மச்சாரியம், கிரு□ஸ்தம், வனப்பிரஸ்ன்னம் மற்றும் சந்நியாசம் எனும் வாழ்வியல் அமைப்பு முறைமையில் புகுதினர். ஆதன் அடிப்படையில் வாழ முற்பட்டு வெற்றியும் கண்டனர். ஆறம் பிழைதோர்க்கு அறமே கூற்றாகும்' என்ற சந்தனைக் கோட்பாடு சிலப்பதிகாரத்தில் தோன்றியுள்ளது கண்கூடு.

அறம் வழிநிற்றல் தமிழர் வழக்கமாகி மரபாகி பண்பாடாகி பரிணாம வளர்ச்சி கண்டு தொழிற்நுட்ப வளர்ச்சியினால் இன்று சினிமா எனும் திரப்படங்களின் திரையிசைப் பாடல்கள் வழி அறம் மக்களிடம் கொண்டு செல்லப்பட்டது என்றால் மறுப்போரும் மறைப்போரும் யாருமில்லை என்று திடமாக; திட்பமாகக் கூறலாம்.

**கண்ணதாசரும் திரையிசைப் பாடலும்**

இவ்வாறான சினிமா எனும் திரைபடங்களுக்குப் புதியவரவல்ல நமது கவியரசர், கண்ணதாசரும் திரையிசைப் பாடலும் உயிரும் உடலும் போன்றவர்கள். சூரியனுக்குக் கைவிளக்குகத் தேவையில்லை!. கண்ணதாசன் பற்றிய குறிப்புகள் இங்கு பேசிட அவசியமும் இல்லை. அதிலும் காரைக்குடிக்காரரைப் பற்றி மலேசியக்காரன் காரைக்குடியிலே விமர்ச்சை செய்வது மகா தப்பு. அதை இங்கு நான் செய்ய வரவில்லை. துணிவும் சிறிதளவேணுமில்லை. இங்கு அடியேன் குறிப்பிடுது அனைத்தும் நான் பார்த்த, உய்த்துணர்நத திரையிசைப் பாடல்களில் கண்ணதாசன் அவர்கள் எடுத்தியம்பிய அறக்கருத்துகள் பற்றி மட்டுமே விவாதிக்கப்போகிறேன்; விமர்ச்சிக்கப் போகிறேன்.

அறம் என்பது தர்மம் என்று பொருளுரைப்பர். எனக்குச் சரியெனப்பட்ட ஒன்று எனக்கு மட்டுமின்றி யாகாவராயினும் அவர்க்கும் அது சரியெனத் தோன்றுதல் வேண்டும். இதில் மாற்றுக் கருத்துக்கு இடமிருக்கக் கூடாது. அப்படி ஒன்றனைத்தான் கவியரசரின் பாடல்களில் கண்டு நான் மயங்கினேன்; உருகினேன்; மருகினேன்.

கண்ணதாசன், என்னதான்? எதைத்தான்? எப்படித்தான்? ஏன்தான்? யாருக்குத்தான்? பாடவில்லை. தொட்டிலில்லிருந்து கட்டில் வரையில் வீடிலிருந்து காடுவரையிலும் எனப் பகுத்துக் கொண்டே போகலாம். அப்படிப் பகுத்திட எனக்கு அந்தளவிற்கான அனுபமும்மில்லை; அறிவும்மில்லை என்று கூறுவதே இங்கு உண்மையாகும்.

*உள்ளதைச் சொல்வேன்*
*சொன்னத்தைச் சொல்வேன்*
*வேறொன்றும் தெரியாது*

*உள்ளத்தில் இருப்பதை*
*வார்த்தையில் மறைக்கும்*
*கபடம் தெரியாது..!*

......... என்று தனது இயல்பைப் பற்றித் தாமேக் கூறக்கேட்டப் பிறகு யாம் ஒன்றும் சொல்வதற்கு அறியேன் பராபரமே!

பக்தியில் பாடினார். புரவசம் மட்டுமா ஊட்டினார். பகுத்தறிவையும் சேர்த்துத்தானே சொன்னார். சொன்னதைக் கேட்டு மனத்தைச் சொக்கவும் வைத்தாரே!

*கவலைகளை உன்னிடத்தில் தந்தேன் வைத்தாரே!*
*கருணையே அருள்செய்ய வருவாய் கண்ணா!!*

என்றும்...

*பூஜ்ஜியத்துக் குள்ளே ஒரு*
*ராஜ்ஜியத்தை ஆண்டு கொண்டு*
*தெரியாமலே இருப்பான் ஒருவன் - அவனப்*
*புரிந்து கொண்டால் அவன்தான் இறைவன்!*

என்றும்...

*இறைவன் வருவான் - அவன்*
*ஏன்றும் நல்வழி தருவான்*
*அறிவோம் அவனை – அவன்*
*அன்பே நாம் பெறும் கருணை!*

என்றும்...

*ஏழை மனதை மாளிகையாக்கி*
*இரவும் பகலும் காவியம் பாடி*
*நாளைப் பொழுதை இறைவனுக் களித்து*
*நடக்கும் வாழ்வில் அமைதியைத் தேடு!*
*நினைத்துப் பார்த்து நிம்மதி நாடு!*

இப்படிப் பாடிப்பாடி பரிதவிக்கும் உள்ளதிற்கெல்லாம் மயிலிறகில் மருந்திட்டு அறத்திற்கு அரணே தலைவன் என்று சொல்லாமல் சொன்ன அம்மாமனிதரை என் சொல்லி வாழ்த்துவது”

பக்தியினை வளர்ப்பது உண்மை. ஆதை சத்தியமாய் சாத்வீகமாக உணர்த்த உதவுவது தத்துவம். நியாயம் மற்றும நியதியை எடுத்துரைப்பதும் இதுதான். பொதுவாகக் கண்ணதாசரின் ஒவ்வொரு பாடல்களிலும் இது மலிந்து கிடக்கும். வுாழ்வை ரசித்து வாழ்ந்த பெருமகனார் அல்லவா. அதனாலேயோ என்னவோ படலில் வரும் சொற்கள் சொல்லும் சேதிக்ள ஒவ்வொரு கதை சொல்லும்.

*வாழ்ந்து பார்க்க வேண்டும்*
*அறிவில் மனிதனாக வேண்டும்*
*வாசல் தோறும் உலகம்*
*உன்னை வாழ்த்திப் பாடவேண்டும்!*

என்றார்...

*எல்லாம் நாடக மேடை – அதில்*
*எங்கும் நடிகர் கூட்டம்*
*உருவம் தெரிவது போல் - அவர்*
*உள்ளம் தெரிவது இல்லை!*

இன்னொரு இடத்தில்...

*உலகம் ஆயிரம் சொல்லட்டுமே*
*உனக்கு நீதான் நீதிபதி!*
*மனிதன் எதையொ பேசட்டுமே*
*மனசப் பார்த்துக்க நல்லபடி!*

இங்கு இப்படியும் சொல்கிறார்...

*நான் கேட்டு தாய்தந்தை படைத்தாரா - இல்லை*
*என் பிள்ளை எனக்கேட்டு பிறந்தானா...*

தொடர்ந்து...

*உயர்ந்த இடத்தில் இருக்கும் போது*
*உலகம் உன்னை மதிக்கும் - உன்*
*நிலைமை கொஞ்சம் இறங்கி வந்தால்*
*நிழலும்கூட மிதிக்கும்!*

என்றும்...

*ஒருவரின் துடிப்பினிலே விளைவது கவிதையடா...*
*இருவரின் துடிப்பினிலே விளைவது மழலையடா...*

*நன்றி கெட்ட மாந்தரடா நானறிந்த பாடமடா...*
*பிள்ளையாய் இருந்துவிட்டால் இல்லையொரு*
*தொல்லையடா...!*

ஆக, தான்கண்ட அனுபவித்த உண்மையினை நல்ல நடையில் ஞயம்பட மொழிந்ததோடில்லாமல் தான் இன்புற்றவாறு கண்டோரும் கேட்டோரும் படித்தோரும் உவகையுற வழியும் செய்தார்.

அன்பே உயர்ந்தது அவணியிலே. ஏந்தொரு எதிர்ப்பார்ப்பும் இல்லாமல் அன்புள்ளம் கொண்டவன் மட்டுமே மனிதனாகக் கருதப்படுவான் என்கிறார் வள்ளுவப் பேராசான். பூாசம், நேசம், காதல், கருணை, பக்தி என்று இதன் பரிணாம வளர்ச்சியை அடுக்கிக் கொண்டே போகலம். வாழ்வின் இருதுருவங்களையும் அலசி கண்ணதாசன் அவர்கள் உரைக்கும் உண்மை நம்மைச் சுட்டபோதிலும் அதில் சுகம் இருக்கத்தானேச் செய்கிறது.

*உழைக்கும் கைகள் எங்கே? உண்மை இறைவன் அங்கே!*
*அணைக்கும் கைகள் யாரிடமோ? ஆண்டவன்*
*இருப்பது அவரிடமே!"*

ஏன்கிற வரிகளிலும்,

'ஆடையின்றி பிறந்தாமே. ஆசையின்றிப் பிறந்தோமா..?'

ஏன்றயிடத்திலும்

*நினக்கத் தெரிந்த மனமே- உனக்கு*
*மிறக்கத் தெரியாதா?*
*பழகத் தெரிந்த உயிரே – உனக்கு*
*விலகத் தெரியாதா?*

வினவும் ஆதங்கத்திலும்,

*'கொடுப்பதற்கும் சிரிப்பதற்கும் படிப்பு வேண்டுமா? என்றும்*
*குழந்தையைப் போல் வாழ்ந்து விட்டால் துன்பம் தோன்றுமா?'*

ஏன்று சுட்டும் இடத்திலும்,

*'யாருக்கு யார் யார் அவள் யாரோ?*
*ஊர் பேர்தான் தெரியாதோ?*
*'யாருக்கு மாப்பிள்ளை யாரோ? – அவர்*
*எங்கே பிறந்திருக்கின்றாரோ?*

*'என்னருகே நீ இருந்தால் இயற்கையெல்லாம் சுழலுவதேன்?
உன்னருகே நான் இருந்தால் உலகமெல்லாம் ஆடுவதேன்?'*

என்று வரும் காதல் மயக்கம் வரிகிளலும் கவியரசு சொல்லவரும் உண்மை அனுபவப்பூர்வமானவை. அறிந்தோரும் புரிந்தோரும் உணர்ந்தோரும் மட்டுமின்றி படிப்போரும் உய்த்துணரவல்லது. திரைக் கலைஞர்களுள் பாடலாசிரியர் குறிப்பிடத்தக்கவர் என்பதனை நிரூபித்தவர். அவரே, பாடலாசிரியருக்குச் சமதாயப் பொறுப்புணர்ச்சி மற்றவர்களைக் காட்டிலும் சற்றே அதிகல் இருத்தல் வேண்டும் என்பதனை உறுதியும் செய்தவர் நம் கவியரசு.

## முடிவுரை

தமிழ் உலகத்தார் உள்ளத்தில் எல்லாம் உளன்' என்ற வரிகள் கவியரசு கண்ணதாசனுக்குச் சாலப் பொருந்தும். தமிழகத்தின் பட்டித் தொட்டி மட்டுமல்லாது உலகில் தமிழர்கள் எங்கெல்லாம் உள்ளனரோ அங்கெல்லாம் கண்ணதாசரும் வாழ்ந்து கொண்டுதான் இருக்கின்றார். ஐம்பத்து நான்கு ஆண்டுகள் மட்டுமே அன்னார் நம்மோடு வாழ்ந்தார் என்பதைப் பொய்ப்பித்துள்ளார். மரணமில்லாப் பெருவாழ்வு வாழ்ந்து வரும் அவருக்கு நாம் செய்யும் கைம்மாறு அவர் போன்ற கலைஞர்களைப் பாராட்டி வாயப்பளித்து வாழ வழி செய்தலே ஆகும்.

*'வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தேய்வத்துள் வைக்கப் படும்'*

## மேற்கோள் நூல்கள்

1. குணசேகர்.ப, (1975) கண்ணதாசன் கவிநயம், சென்னை 13; வானதி பதிப்பகம்
2. கருப்பையா, பழ. (2001) கண்ணதாசன்: காலத்தின் வெளிப்பாடு, சென்னை: மணிவாசகர் பதிப்பகம்.
3. கண்ணதாசன் (1970) கண்ணதாசன் திரையிசை பாடல்கள், சென்னை 13; வானதி பதிப்பகம்.
4. சுப்ரமணியன், க. (1988) கண்ணதாசன் திரையிசைப் பாடல்களில் இலக்கியம், சென்னை: கண்ணதாசன் பதிப்பகம்.

# 13. மலேசியாவில் தமிழ்க்கல்வி – சவால்களும் சாதனைகளும்

மன்னர் மன்னன் மருதை
மலாயாப் பல்கலைக்கழகம்
மலேசியா

**பின்னணி**

மலேசியத் தமிழர்களைப் பொறுத்தவரையில் தமிழ்ப்பள்ளிகளும் ஆலயங்களும் அவர்களுக்கு மிக முக்கியமான தளங்களாகும். அரசியல், சமூகவியல், பண்பாட்டு மையங்களாகத் தமிழ்ப்பள்ளிகள் திகழ்கின்றன. மலேசியாவில் தற்பொழுது 523 தமிழ்ப்பள்ளிகள் இருக்கின்றன 103,000 மலேசியத் தமிழ்க் குழந்தைகள் ஆறு ஆண்டுவரை அனைத்துப் பாடங்களையும் தமிழ்மொழியில் கற்கின்றனர்.

மலேசியத் தமிழர்கள் மலேசியாவிற்கு மூன்று நிலைகளில் வந்தனர். ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு தமிழகத்தில் இருந்து இராசேந்திர சோழன் இங்குள்ள சிற்றரசர்களை அடக்கி ஆளும் பொருட்டு பெரும்படையோடு இங்கு வந்தான்.

அடுத்து மலாக்கா மன்னர்களின் காலமான 15-ஆம் நூற்றாண்டில் வணிகர்களாகத் தமிழர்கள் வணிகம் செய்ய மலாக்கா வந்தனர். இறுதியாக 19-ம் நூற்றாண்டில் இம்மலை நாட்டை மேம்படுத்தத் தமிழர்கள் பிரிட்டிஷாரால் சஞ்சிக்கூலிகளாக அழைத்து வரப்பட்டனர். 20-ஆம் நூற்றாண்டிலும் தமிழர்கள் இங்கு அதிகமாக அழைத்து வரப்பட்டனர்.

இங்கு வந்த தமிழர்களின் தொடர்பு மொழியாகத் தமிழ் விளங்கியதால் 18-ஆம் நூற்றாண்டு தொடங்கித் தமிழ்ப்பள்ளிகள் செயல்பட்டு வருகின்றன. வரும் 2016-ஆம் ஆண்டு மலேசியத் தமிழ்க்கல்வி 200 ஆண்டுகள்

நிறைவை அடைகிறது. 1816இல் பினாங்கு மாநிலத்தில் அமைந்துள்ள Pennang Free School' இல் தமிழ்க்கல்வி 1 வகுப்பாக தொடங்கப்பட்ட சான்று உள்ளது. பிரிட்டிஷாரை பொறுத்த மட்டில் தங்களது பெற்றோரைப் போல் அல்லது படித்த கூலிகள் தங்கள் பொருளாதார வளப்பத்திற்கு கிடைத்தால் போதும் என்ற அடிப்படையிலேயே பள்ளிகள் அமைப்பதற்கு அனுமதி தந்தனர். 1912-ஆம் ஆண்டு பிரிட்டிஷாரின் தொழிலாளர் சட்டத்தின்வழி தோட்ட உரிமையாளர்கள் தமிழ்ப்பள்ளி அமைத்துக் கொடுக்க வேண்டும் எனும் சட்டம் அமல்படுத்தப்பட்டது.

## தமிழ்ப்பள்ளிகளின் எண்ணிக்கை

மலேசியாவில் 80 விழுக்காட்டுத் தமிழ்ப்பள்ளிகள் தோட்டப்புறங்களில் அமைந்துள்ளன. சில பள்ளிகள் பட்டணப் புறங்களில் அமைந்துள்ளன. பெரும்பாலானத் தமிழ்ப்பள்ளிகள் தனியார் நிலத்தில் உள்ளன. இப்பள்ளிகளுக்கு முழுமையான அரசாங்க உதவி கிடைப்பதில்லை. மலேசியத் தமிழ்ப்பள்ளிகள் 2 நிலையில் உள்ளன. ஒன்று அரசாங்கத்தின் முழு மானியம் (Full Aided) பெற்ற பள்ளி, அடுத்து பகுதி மானியம் (Partially Aided) பெற்ற பள்ளி. தற்பொழுது உள்ள 523 பள்ளிகளில் 152 மட்டுமே முழு மானியப் பள்ளிகளாகவும் ஏனைய 371 பள்ளிகள் பகுதி மானியப்பள்ளிகளாகவும் இருக்கின்றன.

**மாநிலம் வாரியாக பகுதி மானியம் முழு மானியம் பெறும் பள்ளிகள்**

| மாநிலம் | மு.மா | ப.மா | மொத்தம் |
|---|---|---|---|
| பேராக் | 50 | 84 | 134 |
| சிலாங்கூர் | 32 | 65 | 97 |
| பகாங் | 10 | 27 | 37 |
| ஜோகூர் | 16 | 54 | 70 |
| கெடா | 9 | 49 | 58 |
| கோலாலம்பூர் | 6 | 9 | 15 |
| மலாகா | 8 | 13 | 21 |
| நெகிரி செம்பிலான் | 14 | 47 | 61 |
| பினாங்கு | 5 | 23 | 28 |
| கிளந்தான் | 1 | 0 | 1 |

| | | | |
|---|---|---|---|
| பெர்லிஸ் | 1 | 0 | 1 |
| மொத்தம் | 152 | 371 | 523 |

**மலேசியத் தமிழ்ப்பள்ளிகளின் எண்ணிக்கையும் மாணவர் எண்ணிக்கையும்**

| ஆண்டு | பள்ளிகள் | மாணவர் எண்ணிக்கை |
|---|---|---|
| 1930 | 3 | தெரியவில்லை |
| 1938 | 547 | 20.271 |
| 1947 | 741 | 35.377 |
| 1957 | 888 | 51.370 |
| 1967 | 686 | 79.567 |
| 1977 | 606 | 78.841 |
| 1987 | 553 | 83.228 |
| 1997 | 530 | 98.072 |
| 2007 | 523 | 105.000 |
| 2008 | 523 | 107.761 |
| 2009 | 523 | 109.086 |
| 2010 | 523 | 108.025 |
| 2011 | 523 | 103.302 |

**மலாயா மலேசியக் கல்விக் கொள்கை**

1957-இல் நாடு சுதந்திரம் அடைந்த ஆண்டு கொண்டுவரப்பட்ட கல்விச் சட்டத்தில், சட்டவிதி 3 எல்லா இனங்களின் மொழியும் பண்பாடும் காக்கப்படும் என்று குறிப்பிடப்பட்டிருந்தாலும் அரசு அதற்கென்று தனிக்கவனம் செலுத்துவதில்லை. மலாய்ப் பள்ளிகள் மட்டுமே தேசிய ஒற்றுமையைக் கொண்டு வர முடியும் என்பது அரசின் வாதம்.

சட்டவிதி 21 (2) மிகப்பெரிய மருட்டலை தமிழ் சீனப் பள்ளிகளுக்கு கொண்டு வந்தது. இந்த விதியின் கீழ் மலேசியக் கல்வி அமைச்சர் நினைத்தால் தமிழ் சீனப் பள்ளிகளை மலாய்ப் பள்ளிகளாக மாற்றுவதற்கு அவருக்கு அதிகாரம் இருக்கிறது.

### அரசுசார்பற்ற இயக்கங்களின் பங்களிப்பு

மலேசியாவைப் பொறுத்தவரையில் தமிழ்ப்பள்ளிகளின் மீது தற்பொழுது அனைவரின் கவனமும் திரும்பியுள்ளது. ஆயினும் தமிழ்ப்பள்ளிகளுக்காகத் தொடக்கத்திலிருந்தே பணிகள் செய்து வருபவர்கள் அரசு சார்பற்ற இயக்கத்தினர் அதிலும் தமிழ்ப்பள்ளிகளுக்கு சேவை செய்யும் பொருட்டே மலேசியத் தமிழ் அறவாரியம் உருவாக்கப்பட்டது.

### 4அ. மலேசியத் தமிழ்க்கல்வி ஆய்வு மேம்பாட்டு அறவாரியம்

தமிழ் அறவாரியம் 2003-ஆம் அண்டு அதிகாரப்பூர்வமாகப் பதிவு செய்யப்பட்டது. தமிழ்ப்பள்ளி மாணவர்களின் மேம்பாட்டை மையமாகக் கொண்டு தமிழ் அறவாரியம் பல்வேறு நடவடிக்கைகளை மேற்கொண்டு வருகிறது. தமிழ் அறவாரியம் அரசுசாரா, கட்சி சாரா இலாப நோக்கமற்ற ஓர் அமைப்பாகும். தமிழ்ப்பள்ளிகள் நாட்டில் தலைநிமிர்ந்து நிற்க வேண்டும் எனும் வேட்கையை தன்னுள் கொண்டு, தமிழ் அறவாரிய உறுப்பினர்கள் பணியாற்றி வருகின்றனர்.

### புதிய கல்விக்கொள்கை 2013-2025

மலேசிய அரசாங்கம் அதன் கல்விக் கொள்கையில் சீர்திருத்தம் கொணர்வதற்காக கல்வித்துறையில் ஈடுபாடு கொண்டுள்ள தனிநபர்கள், பள்ளி ஆசிரியர்கள், கல்விமான்கள் மற்றும் அரசு சார்பற்ற அமைப்புகளுடன் அரசாங்கம் அமைத்துள்ள தேசியக் கல்வி ஆலோசனை மன்றம் சந்திப்புகளை நாடு தழுவிய அளவில் நடத்தி வருகிறது. இக்கல்வி கொள்கை 2013-2025 காலக்கட்டத்தில் அமல்படுத்தப்படும்.

அச்சந்திப்புகளில் பங்கேற்று கல்விக்கொள்கையில் செய்யப்பட வேண்டிய சீர்திருத்தங்கள் பற்றி மக்களும் அவர்கள் சார்ந்துள்ள அமைப்புகளும் தங்களுடைய கருத்துகளை அரசாங்கத்தின் கவனத்திற்கு கொண்டுவருவது அவசியம் என்பதை உணர்ந்த தமிழ் அறவாரியம் அனைத்து இயக்கங்களையும் திரட்டி கலந்தாய்வு ஒன்றை நடத்தியது. அக்கலந்தாய்வின் முடிவுகளைத் தொகுத்து அரசாங்கத்திற்கு வழங்கியுள்ளது.

இந்நாட்டு அரசமைப்புச் சட்டத்தின்படி தேசியக் கல்வி அமைப்பின்கீழ் இயங்கும் பள்ளிகள் அனைத்தும் சமமாக நடத்தப்பட வேண்டும். அவற்றின் மேம்பாட்டிற்கும் வளர்ச்சிக்கும் வழங்கப்படும் அரசாங்க நிதி ஒதுக்கீடுகளில் வேறுபாடு இருக்கக்கூடாது. ஆனால், நடைமுறையில் பள்ளிகளுக்கிடையில் மிகுந்த வேறுபாடுகள் காட்டப்படுகின்றன. அவ்வாறான வேறுபாடுகளின் காரணமாக சீன மற்றும் தமிழ்ப்பள்ளிகளின் மேம்பாடும் வளர்ச்சியும் பெருமளவில் பாதிக்கப்பட்டுள்ளனன. அதன் விளைவாக தமிழ்ப்பள்ளிகள் அனுபவிக்கும் அவலத்தை நாடே அறிந்துள்ளது. இந்த அவலநிலையை சீர்திருத்துவதற்கு தமிழ் அறவாரியம் தேசியக் கல்வி ஆலோசனை மன்றத்தின் கவனத்திற்குக் கொண்டு வந்த முன்மொழிதல்களை அரசாங்கம் கவனத்தில் கொள்ளும் என ஒட்டுமொத்த தமிழ்ச் சமுதாயமும் எதிர்பார்க்கின்றது. தமிழ் அறவாரியத்தைப் பொறுத்தவரையில், அதன் தலைவர் வழக்கறிஞர் சிதம்பரம் பசுபதி தமிழ்க்கல்வி எந்தவிதத்திலும் விடுபடக்கூடாது என்பதில் கவனமாக இருக்கின்றார்.

அந்நோக்கத்துடன் தமிழ் அறவாரியம் மிக அவசியமான முன்மொழிதல்களைத் தயாரித்துள்ளது. அவை:

1. தேசியக் கல்வி அமைவுக்குட்பட்ட தேசியப்பள்ளி, சீனம் மற்றும் தமிழ்ப்பள்ளிகள் அனைத்தும் சமமாக நடத்தப்பட வேண்டும்.
2. தாய்மொழிப்பள்ளிக்கு அரசாங்கம் வழங்கும் நிதி ஒதுக்கீட்டில் வேறுபாடு ஏதும் இருக்கக்கூடாது.
3. தாய்மொழிப்பள்ளிகளுக்குத் தேவைப்படும் அனைத்தும் கட்டடங்கள், வசதியான வகுப்பறைகள், ஆய்வுக்கூடங்கள், நூலகங்கள், திடல்கள், பயிற்சியும் தகுதியும் பெற்ற ஆசிரியர்கள், கல்வி கற்பதற்கு ஏற்ற சூழ்நிலைகள் - இனிமேலும் தாமதப்படுத்தாமல் வழங்கப்பட வேண்டும்.
4. அனைத்துத் தமிழ்ப்பள்ளிகளிலும் பாலர் பள்ளிகள் உடனடியாக அமைக்கப்பட வேண்டும்.
5. தாய்மொழிப்பள்ளிகள் கட்டுவதற்கான நிலம் மற்றும் கட்டடம் சம்பந்தப்பட்ட அனைத்துப் பிரச்சினைகளுக்கும் உடனடியாக முற்றுப்புள்ளி வைத்து அவற்றுக்கான பொறுப்பை அரசாங்கம் ஏற்றுக்கொள்ள வேண்டும்.

6. மாணவர்கள் பள்ளிப்படிப்பை பாதியில் விட்டுவிடும் போக்கிற்கான அடிப்படைக் காரணத்தைக் கலைவதற்கான நடவடிக்கையில் அரசாங்கம் உடனடியாகத் தீவிரக் கவனம் செலுத்த வேண்டும்.
7. இடைநிலைப்பள்ளிப் படிப்பை முடித்த பின்னர் பட்டப்படிப்பிற்கு செல்வதற்கான மெட்ரிக்குலேசன் மற்றும் எஸ்டிபிம் சான்றுகள் சம்பந்தமான இடர்பாடுகள் அகற்றப்பட வேண்டும்.
8. தகுதி பெற்ற அனைத்து மாணவர்களுக்கும் எவ்வித வேறுபாடின்றி அரசாங்கப் பல்கலைக்கழகங்களில் இடமளிக்க வேண்டும். அவர்களுக்கு உபகாரச் சம்பளம் வழங்குவதில் எவ்வித வேறுபாடும் இருக்கக்கூடாது. மாணவர்களுக்கு பல்கலைக்கழகங்களில் இடம் ஒதுக்குவது, உபகாரச் சம்பளம் வழங்குவது குறித்த அனைத்தும் பகிரங்கமாக வெளிப்படையாகச் செய்யப்பட வேண்டும்.
9. பள்ளிகளில் போதிக்கப்படும் பாடங்கள் மாணவர்களின் சிந்திக்கும் திறனை ஊக்குவிப்பதாக இருக்க வேண்டும். எக்காரணத்திற்காகவும் அவை மாணவர்களைச் சிறுமைப்படுத்தும் நோக்கம் கொண்டதாகவோ எதனையும் மறைத்து இனவாதத்திற்கு வித்திடுவதாகவோ இருக்கக்கூடாது.
10. மாணவர்களின் எதிர்காலம் அவர்களின் திறமை ஒன்றின் அடிப்படையில் மட்டுமே அமையும். அவர்கள் சார்ந்த இனத்தின் அடிப்படையில் அல்ல என்பதை மாணவர்களும் ஆசிரியர்களும் புரிந்து கொண்டு கல்வி போதிப்பதிலும் கற்பதிலும் ஈடுபாடு கட்டுவதற்கான அடித்தளம் உடனடியாக அமைக்கப்பட வேண்டும்.
11. தமிழ் இடைநிலைப்பள்ளிகள் தேவைப் பற்றிய விவாதம்
12. தேசியப்பள்ளி இன்று ஓர் இனத்திற்கான, ஒரு சமயத்திற்கான பள்ளியாக மாறியிருக்கிறது என்று முன்னாள் பிரதமர் துன் டாக்டர் மகாதிர் முகமட் சுட்டிக்காட்டியிருப்பதைக் கவனத்தில் எடுத்துக்கொண்டு தேசியப்பள்ளியும் இதர தாய்மொழிப் பள்ளிகளும் பன்மொழி, பல பண்பாடுகள் மற்றும் பல சமயங்களும் கொண்ட ஒரு எதிர்கால நாட்டை உருவாக்குவதற்கான அடித்தளங்களாக்கப்பட வேண்டும்.
13. ஆரம்பத் தாய்மொழிப்பள்ளிகள் ‘தேசிய மாதிரி பள்ளிகள்’ என்றுள்ளதை ‘தேசியப் பள்ளிகள்’ என மாற்றப்பட வேண்டும்.

இதன்வழி கல்வி சட்டம் 1996-இல் உள்ள தாய்மொழிப் பள்ளிகள் சார்புடைய 28 துணைச்சட்டங்களும் திருத்தப்பட வேண்டும். இவை தமிழ் அறவாரியம் முன்மொழிந்துள்ள திட்டங்களாகும்.

## 4ஆ. இந்து இளைஞர் இயக்கம் கோலக்கிள்ளான்

மாணவர்களின் முன்னேற்றத்திற்கு இன்றியமையாத பங்கினை தகவல் தொடர்பு தொழில்நுட்பம் வழங்கும் என்பதை உணரும் பொருட்டு கோலக்கிள்ளான் இந்து இளைஞர் இயக்கம், மலேசியத் தமிழ்க்கல்வி சமூக அறவாரியம் ஆகிய இயக்கங்களின் இணை ஏற்பாட்டில் 'தித்தியான் டிஜிட்டல் திட்டம்' எனும் தகவல் தொடர்பு தொழில்நுட்பத் திட்டம் கடந்த 2009 ஏப்ரல் முதல் தமிழ்ப்பள்ளிகளில் செயல்படுத்தப்பட்டு வருகின்றது. இத்திட்டத்தின் மூலம் நிலைத்தன்மைமிக்க கணினிக் கூடங்கள் குறிப்பாகப் பகுதி மானியம் பெற்ற தமிழ்ப்பள்ளிகளில் சிறப்பான முறையில் அமைக்கப்பட்டிருக்கின்றன. இக்கணினி கூடங்கள் கட்டற்ற திறவூற்று மென்பொருள் (Open Source Computing) 'தின் கிளைண்ட் தொழில்நுட்பம்' (Thin Client Technology) துணைக்கொண்டு தரமிக்கக் குறைந்த செலவிலான முறையில் அமைக்கப்பட்டுள்ளன.

### திட்ட அமலாக்க முறை

பங்கெடுக்கும் பள்ளிகளைக் கண்டறிதல் / பங்கேற்கும் பள்ளிகளிலிருந்து விண்ணப்பம் பெறுதல்.

தகவல் தொடர்பு தொழில்நுட்ப மையம் (கணினிக்கூடம்) அமைத்தல்.

தகவல் தொடர்பு தொழில்நுட்ப மேம்பாட்டுக்குழு அமைத்தல்

தகவல் தொடர்பு தொழில்நுட்ப வகுப்புகள் நடத்துதல்

தகவல் தொடர்பு தொழில்நுட்ப பயிற்றுநர் பயிற்சி வழங்குதல்

பயிற்றுநர் வழிகாட்டல்

பாடத்திட்டம், பயிற்றுநர் வழிகாட்டி மற்றும் மாணவர் பயிற்சி புத்தகம் உருவாக்குதல்.

மேற்குறிப்பிட்ட பணிகளைத் தவிர, இத்திட்ட நிலைத்தன்மையை உறுதிப்படுத்தும் வகையில் தித்தியான் டிஜிட்டல் திட்டக்குழு கீழ்க்காணும் நடவடிக்கைகளைச் செயல்படுத்துகின்றது.

தகவல் தொடர்பு தொழில்நுட்பம் மையச் செயலாக்கம் மற்றும் அதன் தொடர்பான சிக்கல்கள் கலந்துரையாடும் பொருட்டு ஆண்டுக்கு மும்முறை தகவல் தொடர்பு தொழில்நுட்பம் ஒருங்கிணைப்பாளர்கள் உடனான சந்திப்புக்கூட்டம் நடைபெறும்.

வருடாந்திர தகவல் தொடர்பு தொழில்நுட்பம் மேம்பாட்டுச் செயலவை ஒருமுகக் கூட்டம் நடைபெறும். இக்கூட்டம் இத்திட்டத்தின் மேம்பாட்டு வளர்ச்சியை உறுதிசெய்யும் வகையில் கருத்துப் பரிமாற்றங்கள், அனுபவப் பகிர்வு சிக்கல்கள் ஆகியவற்றை மையமாகக் கொண்டு நடைபெறும்.

அனைத்து மையங்கள் முறையாக இயங்கும் வகையில் ஆண்டுக்கு மும்முறை வன்பொருள் (ர்யசனறயசந யுரனவைஇபெ) மேற்கொள்ளப்படும்.

நிதிநிலை முறையாகக் கையாளும் வகையில் வருடாந்திர வரவுசெலவு தணிக்கை மேற்கொள்ளப்படும்.

பயிற்றுநர் சம்பளம், கணினி பராமரிப்பு மற்றும் தர மேம்பாடு ஆகியவை சிறப்பான முறையில் அமையும்பொருட்டு போதுமான நிதிநிலைத்தன்மையைப் பெற்றோர் ஆசிரியர் சங்கம் உறுதிப்படுத்த வேண்டும்.

தகவல் தொடர்பு தொழில்நுட்பம் மைய நிலைத்தன்மையை உறுதிப்படுத்தும் வகையில் சுற்றுவட்டாரச் சமுதாயத்தைத் தன்னாளுமைப்படுத்துதல்.

நன்கொடையாளர்களுக்கு இத்திட்ட ஆண்டறிக்கை வழங்குதல்

இச்செயல்திட்டம் நல்லதொரு வெற்றியினை வழங்கியுள்ளது. பள்ளி மற்றும் பயன்பெறும் மாணவர் எண்ணிக்கை

| ஆண்டு | பள்ளிக்கூடம் | மாணவர் எண்ணிக்கை |
|---|---|---|
| 2009 | 2 | 578 |
| 2010 | 9 | 4043 |
| 2011 | 28 | 11446 |
| 2012 | 46 | 19115 |

இவ்விரண்டு அரசு சார்பற்ற இயக்கங்களின் பணிகள், தமிழ்ப்பள்ளிகளுக்கு எத்தகைய பங்களிப்பினைக் கொண்டு வருகின்றது என்பதை ஓரளவு உணர்ந்திருப்பீர்கள்.

**முடிவுரை**

பல்லினப் பண்பாட்டைக் கொண்ட மலேசிய நாட்டில் தமிழ்க்கல்வி வழியாகத் தமிழரின் பண்பாடு பேணப்படுவது மிக முக்கியமாகும். பெரும்பாலும் வசதி குறைந்த தமிழ்த் தொழிலாளர்களின் 60 விழுக்காட்டுக் குழந்தைகளே தமிழ்ப் பள்ளிகளில் கல்வி கற்றனர். இப்பள்ளிகளுக்கு முழுமையான அரசாங்க நிதி கிடைப்பதில்லை. தனியார் நிலங்களில் அமைக்கப்பட்டுள்ள இப்பள்ளிகளின் அடிக்கட்டமைப்பு வசதிகள் மிகக் குறைந் நிலையில் இருந்து வருவதோடு, போதிய ஆசிரியர்கள், பாடநூல்கள், கற்றல்-கற்பித்தல் கருவிகள் இல்லாத நிலையில் மிகவும் பின்தங்கிய நிலையில் காணப்படுகின்றனர். ஆயினும் தமிழ் மக்களின் தமிழ் உணர்வாலும், அரசு சார்பற்ற இயக்கங்களின் இடைவிடாத பணிகளாலும் தொடர் நடவடிக்கையாலும் அரசின் உதவியோடும் தமிழ்ப்பள்ளிகளின் கல்வி வளர்ச்சியும் புறத்தோற்றமும் மாறி வருவது மகிழ்ச்சிக்குரிய செய்தியாகும்.

மலேசிய அரசியலமைப்புச் சட்டத்தின்படி மலேசியத் தமிழர்கள் மலேசிய நாட்டின் அனைத்து உரிமைகளையும் கொண்ட குடிமக்கள் ஆவர். மலேசியாவைப் பொறுத்தவரையில் ஒரு மலேசியத் தமிழ்க்குழந்தை தமிழ்க்கல்வி பெறச் சட்டப்பூர்வமான தடை ஏதும் இல்லை. எனவே மலேசியத் தமிழர்களின் தமிழ் உணர்வும் தமிழ்ப்பள்ளிகளின் நிலைத்தன்மையை உறுதி செய்ய முக்கியமான ஒன்றாகத் திகழ்கின்றது.

1. மலேசியத் தமிழ் அறவாரியம்.
2. இந்து இளைஞர் இயக்கம், கோலக்கிள்ளான்.

